# ஆகாயத்தில் பறக்கிறார் தேவயானி!

"அப்படியா...! அப்படியா..!" என்று ஆச்சர்யப்பட்டு தம்மையே கிள்ளி பார்த்துக் கொண்டார். பெருக்கெடுத்த உற்சாகத்தில் "ஹய்யா" என்று உயரக் குதித்து ஆனந்தக் கூச்சலே போட்டு விட்டார். இப்படியொரு வாய்ப்புக்காக தவம் கிடந்த மாதிரி தேவயானிக்கு அப்படியொரு வாய்ப்பு. அதனால் மகிழ்ச்சியோ மகிழ்ச்சி; ஆகாயத்தில் பறக்கிற மகிழ்ச்சி. வேறொன்றுமில்லை ஜென்டில்மேன், ரஜினியின் அடுத்த படத்துக் கதாநாயகி அந்தஸ்து தேவயானிக்குக் கிடைத்திருக்கிறது! ஐஸ்வர்யா ராய், சிம்ரன், சௌந்தர்யா வீட்டுக் கதவையெல்லாம் தட்டிப் பார்த்த அதிர்ஷ்டம் கடைசியில் தேவயானியின் வீட்டுக் கூரையைப் பிய்த்துக் கொண்டு குதித்திருக்கிறது. 'படையப்பா' (அறுபடை வீட்டைக் குறிக்கிறதாம்) என்று பெயர் சூட்டப்பட்டிருக்கும் ரஜினியின் இப்படத்தில் தேவயானி தவிர, ரம்யா கிருஷ்ணன், சித்தாராவும் உண்டு. பல வருட இடைவெளிக்குப் பின் ரஜினியோடு நாசரும் தெலுங்கு நடிகர் கிருஷ்ணம் ராஜுவும் நடிக்கிறார்கள். நவம்பர், டிசம்பர் மாதங்களில் மைசூர்ப் பக்கம் போய் மொத்தப் படத்தையும் முடித்துக் கொண்டு திரும்ப இருக்கிறார் ரஜினி. அவரோடு சேர்ந்து 'படையப்பா'வைத் தயாரிக்க இருக்கும் பார்ட்னர்கள் டைரக்டர் கே.எஸ். ரவிக்குமாரும், 'காதலா காதலா' தயாரிப்பாளர் தேனப்பனும். இசையமைப்பாளர் யாரென்று எழும் மில்லியன் டாலர் கேள்விக்கு பதில் : ஏ.ஆர். ரஹ்மான்!



• சுவலட்சுமி



• சந்தியா



• தேவயானி

• பூஜைக்கு முதல் நாள் வரை கதாநாயகியை தேடிக் கொண்டிருந்த எஸ்.ஏ. ராஜ் கண்ணுவுக்கு கழுத்தில் விழுந்த பூமாலையாகக் கிடைத்தவர் தான் சந்தியா. நிஜப் பெயர் உமா. பெங்களூரில் தான் உண்டு தன் படிப்பு உண்டு என்று கல்லூரிக்குப் போய் வந்து கொண்டிருந்தவரை கோடம்பாக்கத்திற்கு அழைத்து வந்த

# கலர் டீ.வி. பரிசு!

பட்டுப் புடவைப் பரிசுப் போட்டிகள் பன்னிரண்டிலும் சரியான விடைகளை எழுதி, கொசுறுப் போட்டியிலும் சரியான விடையை (மொபைல்ஹோம் பிரபலமான வருடம் 1960, என்னைச் செதுக்கிய எண்ணங்கள்) எழுதி, அத்தனை கூப்பன்களையும் சேர்த்து ஆயிரக்கணக்கான வாசகர்கள் அனுப்பி வைத்திருந்தார்கள்.

எண்ணிக்கை, ஏராளமாக இருந்ததால் குலுக்கலைத் தவிர்க்க முடியவில்லை. அதில் வெற்றி பெற்று வசந்த் அண்ட் கோ வசந்தகுமார் வழங்கும் கலர் டீ.வியைப் பரிசாகப் பெறும் அதிர்ஷ்டசாலி:

எஸ். சையது அப்பாஸ்,
29-A, சாலை ரோடு,
உறையூர், திருச்சி - 620 003.

— ஆசிரியர்.

●●●●●●●●●●●●●●●●●●●●



''இந்தா மீனா! இந்தப் பணத்தை பீரோ லாக்கரில் வை!''

''மேஜை மேலேயே வச்சுத் தொலைங்க எட்டு ரூபா ஐம்பது பைசாவுக்கு பீரோ லாக்கர் ஒரு கேடா?

– உ. ராஜாஜி

பெருமை அவரது அம்மாவுக்கு. உமா என்கிற பெயரை சந்தியாவாக மாற்றியவரும் அவரே. சரி, அந்த அம்மா யார் என்கிறீர்களா? சுமித்ரா.

● இரண்டு மும்பை நடிகைகள் தமிழ்ப்பட தயாரிப்பாளர்களிடம் சிக்கி நொந்து போய்விட்டார்கள். பணம் கொடுத்தால்தான் மும்பையைவிட்டு புறப்படுவேன் என்று அடம் பிடித்துக் கொண்டிருக்கிறார்கள். ஒருவர் மாதுரி தீட்சித். இன்னொருவர் கரீஷ்மா கபூர். இவர் ஒருபடி மேலே போய் நடிக்க விருந்த 'முதன் முதலாக' படத்திலிருந்து பின் வாங்கி விட்டார். கரிஷ்மாவிற்குப் பதில் ஐஸ்வர்யா ராயை ஒப்பந்தம் செய்திருக்கிறார்கள். இரண்டு ஷெட்யூலில் நடித்து முடித்துவிட்ட மாதுரி 'இன்ஜினீயர்' படத்தை ஏன் கமிட் பண்ணினோம் என்ற கவலையில். இந்த இரண்டு படங்களின் ஹீரோவான அர்விந்த் சாமியோ படம் முடிந்து வெளியானால் போதும் என்கிற பரிதாபத்தில்!

● லா படிக்கும் கவலட்சுமிக்கு தம்மைப் பற்றிய பொய்ச் செய்திகள் வந்தால் பொல்லாக் கோபம் வந்துவிடும். ஆனால், கோபத்தை யாரிடம் காட்டுவது? கிசுகிசு பரப்பும் கிங்கரர்களை வலை வீசித் தேடினார். அவரைப் பற்றிய கிசுகிசு நம்பர் ஒன்று : தமது மானேஜரையே கல்யாணம் செய்து கொண்டார். நம்பர் இரண்டு : இயக்குனர் அகத்தியனோடு காதல். இரண்டு கிசுகிசுக்களையும் வெளியில் உலாவவிட்ட அந்த 'உண்மை விளம்பி' ஒரு நாள் கவலட்சுமியிடம் அகப்பட்டுக் கொண்டார். கவலட்சுமிக்கு அதிர்ச்சியோ" அதிர்ச்சி. அந்த 'உண்மை விளம்பி' வேறு யாருமல்ல அவரின் மானேஜர்தான். தடாலடியாய்த் தன் 'லா' பார்வையில் ஜட்ஜ்மெண்ட் கொடுத்து ஜோதி மயமான மானேஜரை இருட்டுக்குள் தள்ளிவிட்டார். 'தேவை - மானேஜர்' என்று எழுதிய அட்டை இப்போது கவலட்சுமியின் வீட்டுக்கு வெளியே தொங்கிக் கொண்டிருக்கிறது.

● சுருதி. நினைவிருக்கிறதா? 'கல்கி'யில் கலக்கியவர். அப்புறம் அம்மணி இந்தப் பக்கம் ஆளையே காணோம். மறுபடியும் ஒரு நடை இங்கே வந்து விட்டுப் போகப் போகிறார். அந்த புண்ணியத்தைக் கட்டிக் கொள்ளப் போகிறவர் வில்லன் சரண்ராஜ். கன்னடத்தில் சில்வர் ஜூப்ளி படம் 'தவறினதொட்டில்'. டப் பண்ணி தமிழில் வெளியிட ரைட்ஸ் வாங்கினார் சரண்ராஜ். நெருங்கிய நண்பர்கள், டப் பண்ணுவதை விட ரீ-மேக் செய்யலாம் என்று ஐடியா கொடுத்தனர். இயக்குனரைத் தேடினார். தாம் நினைத்தபடி யாரும் அமையவில்லை என்றதும் சரண்ராஜ் தாமே இயக்குனர் அவதாரமெடுத்து விட்டார். இயக்குனர்களெல்லாம் நடிகராகிக் கொண்டிருக்கும் போது, இந்த நடிகர் இயக்குனராகியிருக்கிறார்! ●

— மஹாந்த்

அட்டை வண்ணப்படம் : வி.எம். நாகராஜ்

**சுதந்தரப் பொன்விழா பட்டிமன்றம்**


• நிகழ்ச்சியின்போது...

# ஜெயித்தது தேர்தல் சீர்திருத்தம்!

சென்னை தூர்தர்ஷன் வரலாற்றிலேயே ஒரு புதுமையான பட்டிமன்றம், வரும் சுதந்தர தினத்தன்று ஒளிபரப்பாகப் போகிறது. தமிழக அமைச்சர் தமிழ்க்குடிமகன் தலைமையேற்க, பங்கேற்றுப் பேசப் போகிறவர்கள் அனைவரும் தமிழகத்தின் பல்வேறு கட்சிகளையும் சேர்ந்த அரசியல்வாதிகளான, குமரி அனந்தன், திருநாவுக்கரசு, வலம்புரி ஜான், தா. பாண்டியன், இல. கணேசன், எல். கணேசன்.

தலைப்பு : சுதந்தரத்தின் பயன் மக்களைச் சென்றடைய நாம் உடனடியாகச் செய்ய வேண்டியது தேர்தல் சீர்திருத்தமே! சமுதாயச் சீர்திருத்தமே!

சென்னைத் தொலைக்காட்சிக்காக இந்த நிகழ்ச்சியைத் தயாரித்திருப்பவர் யு.எம். கண்ணன். அவருக்கு அரசியல் சப்ஜெக்ட் பட்டிமன்றத்தை அதுவும் தூர்தர்ஷனில் நடத்த எப்படி ஐடியா வந்தது?

"கடந்த மூன்று வருடங்களாக, என் மனத்தில் தோன்றி, ஆனால் செயல்படுத்த முடியாமல் போன ஐடியாதான் இது. அரசியல்வாதிகளைப் பட்டிமன்றத்தில் பேச அழைத்தால், சரமாரியாக வாக்குவாதம் நடக்கும்; ஒளிபரப்பின்போது, எடிடிங் என்ற பெயரில், என் வாதங்களை வெட்டி விட்டார்கள் என்று குற்றச்சாட்டுக்கள் எழும் என்றெல்லாம் என்னைப் பலரும் பயமுறுத்தினார்கள். ஆனால், சுதந்தரப் பொன்விழா ஆண்டில், இப்படி ஒரு பட்டிமன்றம் நடத்தினால் நன்றாக இருக்கும் என்று நான் கூறிய யோசனைக்கு, தூர்தர்ஷன் இயக்குனர் பச்சைக் கொடிகாட்ட, நிகழ்ச்சி பிரச்னை ஏதுமின்றி சுபமாக நடந்து முடிந்தது.

நிகழ்ச்சிக்கு முன்னர், மரபு கருதி 'தனிப்பட்ட முறையில் அரசியல் தலைவர்கள், கட்சிகள், அரசுகளை விமர்சிக்க வேண்டாம்' என்று அனைவரையும் நிலைய இயக்குனர் கேட்டுக் கொண்டபோது, 'நாகரிகமாய்ப் பேசி, இந்த நிகழ்ச்சியை நடத்தி முடிக்க வேண்டிய பொறுப்பும், கடமையும் எங்களுக்கு உண்டு!'' என்று கூறினாராம் திருநாவுக்கரசு.

• அ.தி.மு.க. சார்பில் யாராவது ஒருவர் பங்கேற்றுக் கொண்டால் தேவலை என்று காளிமுத்து, நாவலர் இருவரையும் அணுகியபோது, அவர்கள் தம் இயலாமையைத் தெரிவித்துக் கொண்டார்களாம்.

• ஓர் அரசியல் தலைவரது பெயரைக் குறிப்பிட்டு, அவர் பங்கேற்றால், தாம் பங்கேற்க மாட்டேன் என்றாராம், பட்டிமன்றத்தில் கருத்து ஆய்வாளராகப் பங்கேற்ற டி.என். சேஷன். அந்தத் தலைவர் பங்கேற்கவில்லை என்றதும்தான் தாம் பங்கேற்கச் சம்மதித்தாராம்.

• அமைச்சர் தமிழ்க்குடிமகன், டி.என். சேஷன் உட்பட அனைவரும் வந்து விட்ட பின்னரும் காலதாமதம் செய்து, டென்ஷனை உண்டாக்கிவிட்டார் ஒருவர். நிகழ்ச்சியை ஒளிப்பதிவு செய்ய ஆரம்பித்த சில நிமிடங்களில் அவரும் வந்து விட்டார். அவர் வலம்புரிஜான்.

• இரண்டே கால் மணி நேரம் நடந்த பட்டிமன்ற வாத, விவாதங்கள், எடிட் செய்யப்பட்டு, ஒண்ணே கால் மணி நேரமாக ஒளிபரப்பாகப் போகிறது.

• பட்டிமன்றத்தில் எந்த அணி ஜெயித்தது? 'தேர்தல் சீர்திருத்தமே' என்று பேசிய அணிதான். ●

தொகுப்பு: **கௌதம்ராம்**

வரவர சுவையான திருப்பங்கள் கொண்ட 'த்ரில்லர்'களுக்கு தினசரிகளை மேய்ந்தாலே போதுமென்றாகி விட்டது - லேட்டஸ்ட் இதோ! ஷரத் பவார் புதிதாகக் கட்சி ஆரம்பிக்கப் போகிறாராம்! சோனியாவுடன் பனிப்போர் நடத்தி வெறுத்து விட்டதாம். சோனியாவின் விருப்பத்திற்கு மாறாக மராத்திய அரசைக் கவிழ்த்து, அவரை நெற்றிக் கண் திறக்க வைத்து, மேலிடமே தன்னை விரட்டும்படி நாடகமாட உத்தேசமாம்; இவருக்கு வலது கையாக இயங்கப் போவது, ரிமோட் கண்ட்ரோல்காரர் ஆதிக்கத்தில் முதல்வராயிருந்து வெறுத்துவிட்ட மனோகர் ஜோஷியாம்! இடது கை, சிவசேனையில் விரிசலை ஏற்படுத்தியிருக்கும் கணேஷ் நாயக்கும் அவர் சகாக்களுமாம்! ஜோஷிக்கே முதல்வர் பதவியைக் கொடுத்து விட்டு, சந்திரசேகர், ஃபாரூக் அப்துல்லா, முலாயம் சிங் போன்றோரின் துணையுடன் இவர் மும்முரமாக பிரதமர் பதவிக்கு முனையப் போகிறாராம்!

## 'வழி'யும் பஸ்கள்

ஏற்கெனவே மும்பையில் BEST பஸ்கள் நிரம்பி வழிந்து கொண்டிருக்கும்; இப்போது வழிசலை அதிகரிக்கும் வகையில் மற்றொரு அறிமுகம்... ஏழு புதிய பெண் கண்டக்டர்கள் வேலையில் அமர்த்தப்பட்டிருக்கிறார்கள். நால்வருக்கு மணமாகி விட்டது; ஏனையோருக்கு... ஹிஹி... இன்னும் மாப்பிள்ளை அமையவில்லை!

விற்பனைப் பிரிவில் பழகியவர்கள் என்பதால், மனிதர்களை எதிர்கொள்வதில் எந்தப் பிரச்னையுமிருக்காது என்கிறார்கள். கராத்தே, குங்ஃபூ ஒன்றுமறியாத இந்த கண்டக்டரிணிகளிடம் யாராவது ரௌடித்தனம் செய்தால், முதலில் நயமாகச் சொல்லிப் பார்ப்பார்களாம்; மசியாவிட்டால்?... கண்டு கொள்ளாமலிருந்து விடுவார்களாம்! இவர்களின் வெற்றியின் அடிப்படையில் தான் இந்தப் பதவிக்கு பெண்களைத் தொடர்ந்து நியமிக்கும் முடிவெடுக்கப்படுமாம்! ஹூம்! இந்தப் பெண்களிடம் ஒழுங்காக நடந்து கொண்டால்தான் ஏழு எழுபதாகி, எழுநூறாகும் வாய்ப்பு அமையும்!

## 'ப்ரம்மப்' பிரயத்தனம்

தற்சமயம் இங்கே, 'அதிக தெய்வீக மணம் கமழும் இடம் எது?' என்றால், மும்பையின் 'மோஸ்ட் வாண்டட்' கிரிமினல்களின் இருப்பிடமான தானா சென்ட்ரல் ஜெயில்தான்! அருண் காவ்லி அண்ட் கோ, தாவூத்தின் அடியாட்கள், சுரேஷ் மஞ்ச்ரேகர் கூட்டம் என்று தனித்தனியான 'விங்'குகளில் பயங்கர வாதக் கும்பல்கள்! மற்றவர்கள் 'செல்'களெல்லாம் 'செல்லரித்துப்' போன, நாற்றமெடுத்த இருட்டறைகளாகியிருக்க, காவ்லியும் அவன் சகாக்களும் இருக்குமிடம் தூய்மையும் துப்புரவுமாய், ஊதுவத்தி கமழ, மணக்கிறது. ஜெயிலர் அனுமதியுடன் கடவுள் படத்தை எல்லாம் மாட்டி, மாலை மரியாதை, பூஜை புனஸ்காரங்களுடன், டோலக், ஜால்ரா சகித பஜனை, நாம சங்கீர்த்தனமென்று, எக்கச்சக்க பக்தி மணம்! 24 மணி நேர அணையா விளக்கு, த்யானேஷ்வரி, பகவத் கீதை போன்ற தத்துவ நூல்கள், உபன்னியாச கேசட்டுகள் போன்றவை கூடுதல் தெய்வீக "இஃபக்டுக்கு"! அண்டர்வர்ல்ட் டான் அரசியல்வாதியாக மாறி, இப்போது ஆன்மீகவாதியாக அவதாரமெடுத்திருக்கிறார்! இந்த மாறுதலுக்குக் காரணம் 'பிரம்ம குமாரி' இயக்கமாம்! இதுவாவது 'பர்மனென்ட்' வேஷமா என்று அந்த பிரம்மாவைத்தான் கேட்க வேண்டும்!

# சரத்பவாரின்

## மறுபடியும் ரமேஷ்?

ரமேஷ் இனி கொலை வழக்கு நினை

விருக்கிறதா? மறந்தவர்களுக்கு நினைவு படுத்தும் வகையில், அதே மாதுங்காவில், அதே லக்ஷ்மி நிவாஸ் பில்டிங்கில், அதே பெயருள்ள நபர் தற்கொலை செய்து கொண்டிருக்கிறார். இரண்டாவது மாடியில், இனி வீட்டிற்கு மேல் பகுதியிலுள்ள, காங்கிரஸ் கார்ப்பொரேட்டர் ராஜீவ் செட்டாவின் பிஸினஸ்காரக் கணவன் ரமேஷ் செட்டா, மனைவி பெட்ரூமிலிருக்க, வேலைக்காரி சமையலறையிலிருக்க, பிள்ளை ஆஸ்திரேலியாவில் படித்துக் கொண்டிருக்க, பெண் திருமணமாகிக் குடித்தனம் நடத்திக் கொண்டிருக்க, கைவசம் சமையல் எண்ணெய் பிஸினஸ் செழிப்பாக இருக்க, ... என்ன காரணத்துக்காகவோ, இனி வழக்கில் முக்கிய சாட்சியான இவர், துப்பாக்கியால் தம்மையே குறிவைத்து சுட்டுக் கொண்டிருக்கிறார்! பில்டிங் சொந்தக்காரரான 'ஷா'வுக்கும் இந்த சாவுக்கும் சம்பந்தமில்லை என சிவசேனைக்காரர்கள்



சாதிக்கிறார்கள். இந்த வருட இறுதிக்குள் இந்த ஃப்ளாட்டை காலி பண்ணப் போவதாக, செட்டா, அக்கம் பக்கத்தில் சொல்லி வைத்திருந்தாராம்! ஹூம்... முதல் மாடியின் ரமேஷ் முதல் பலி! இரண்டாவது மாடி ரமேஷ் இரண்டாவது பலி! மூன்றாவது மாடியில்... யாராவது ரமேஷ் இருக்கிறார்களா...?

## கபர்தார்... மிளகாய்க் கன்னிகள் வருகின்றனர்!

'ஈவ் டீஸிங்'கால் சென்னைப் பெண்ணின் மரணம் ரொம்பவும்தான் மும்பைக்காரர்களை உலுக்கி விட்டது! 'பெண்களைக் கிண்டலடிக்கும் கேடிகளை உண்டு இல்லை என்றாக்கிடுவீர்' என தினசரிகளெல்லாம் குரல் கொடுக்க, உண்மையிலேயே, 'கார்' பகுதியிலிருந்து இளம் பெண்கள் கூட்டம் ஒன்று இதைச் செயலாக்கக் கிளம்பியுள்ளது! 'மிர்ச்-கர்ல்ஸ்' (மிளகாய்ப் பெண்கள்) என்று



# புதிய கட்சி!

தங்களை அழைத்துக் கொள்ளும் இந்த இளசுகள், தினம் ஹார்பர் லைனிலுள்ள அந்தேரி லோக்கலில் ஏறி, கோரஸாகப் பாடி, ஃப்ளாட்பார்மிலோ அடுத்த கம்பார்ட்மெண்டிலோ இருக்கும் ஆண்களைப் பார்த்து, கண்ணடித்து, கிண்டலடித்து வருகின்றனர்! இது அசிங்கமாயிருக்கிறதே என அங்கலாய்ப்பவர்களைக் காட்டிலும், 'சபாஷ்' என்று கைதட்டும் கூட்டம்தான் அதிகம்!

— ஜெயஸ்ரீ ராஜ்

**கொல்லங்குடி கருப்பாயி. டெலி விஷனிலும் சினிமாவிலும் தோன்றி, தமிழகத்தையே கலக்கிய கிராமத்துப் பாட்டி. அரிதாரம் பூசாத பாரதி ராஜா பட கதாபாத்திரம் போலத்தான் தோற்ற மும் பேச்சும். அண்மையில் ஒரு இசை நிகழ்ச்சியில் பங்கேற்பதற்காகச் சென்னை வந்திருந்தார். கொஞ்சம் உடம்பு சரியில்லை. மாத்திரையை விழுங்கிவிட்டு, பாசாங்கு ஏதுமில்லாமல், யதார்த்தமாய்ப் பேசினார்.**

"சின்ன வயசிலேயே உங்களுக்கு, சொந்தமாய் இட்டுக்கட்டிப் பாட்டுப் பாடத் தெரியுமா?"

"ம்... பாடுவேன். கழனியில வேலை செய் யறபோது, உச்சி வெயில் நேரத்துல கஞ்சி குடிக்கிறபோது, நாளு, கிழமை, இரு விழான்னா பாடுவேன். சொந்தமா இட்டு கட்டித்தான் பாடுவேன்."

"உங்க வீட்டுக்காரரு கூட இட்டுக்கட்டிப் பாடுவாரா?"

"இல்லீங்க. அவருக்கு கணக்குப் பிள்ளை வேலை. பின்னாளுல, நான் இட்டுக் கட்டின தையெல்லாம், பேப்பர்ல எழுதி வெச்சாரு."

# "இந்த மரியாதை எல்லாம் போச்சு!"

"முதல், முதலாக, எப்படி டீ.வில அறிமுகம் ஆனீங்க?"

"மொதல்ல நான் பாடினது டீ.வியில இல்லை. ரேடியோவுலதான். திருச்சி ரேடியோ டேசன்லயிருந்து, கிராமம் கிராமமா போய், கிராமியப் பாடல்களைப் பதிவு பண்ணினாங்களா? அவுங்க, எங்க கொல்லங்குடி கிராமத்துக்கு (சிவகங்கைக்கு அருகில்) வந்தாங்க. ஊர் பொம்பளைங்க எல் லாம் கூடியிருந்தாங்க. என்னையும் வந்து கூப்புட்டாங்க. நானும் போனேன். கும்மி கொட்டினோம். ஆனா, ஒருத்தியும் வாயைத் திறந்து பாடக்காணோம். என்னாடா இது! பெரியவங்க எல்லாம், பாட்டு பதிவு பண்ண நம்ம ஊருக்கு வந்திருக்காங்க. நம்ம ஊரு பொண்ணுக, ஊமையாட்டம் கும்மி கொட்டுதுங்கன்னு எனக்கு அவமானமா போயிடுச்சு. நான், என் சொந்தப் பாட்டு ஒண்ணை எடுத்து விட்டேன். கும்மி கொட்டி முடிச்சதும், என்னைத் தனியா கூப் புட்டு, பாடச் சொல்லி, பதிவு பண்ணி னாங்க. ஒரு வாரத்துல தகவல் அனுப்ப றோம், ரேடியோ டேசனுக்கே நேர வந்து பாடணும்னாங்க. அவுங்க போயிட்டாங்க. எனக்கு நடுக்கமாயிடுச்சு!"

"எதுக்காக நடுக்கம்?"

"பின்ன? அந்த ஆபீசரு, நான் பாடி முடிச் சதும், என் கையைப் புடிச்சி, 'ரொம்ப பிர மாதம்! நானும் பல ஊர்களுக்குப் போய் வந்திருக்கேன். எங்கயும் உங்களை மாதிரி ஒருத்தர் பாடிக் கேட்கலை'ன்னாரு. அன் னிய மனுசங்க நம்ம கையைப் புடிச்சா, நமக்கு நடுங்காதுங்களா? எங்க ஊட்டுக் காரரு ஏதனா சொல்லிடுவாரோன்னு பயந் துட்டேன்!"

"உங்க ஊட்டுக்காரர் என்ன சொன் னார்?"

"சந்தோஷப்பட் டாரு. உன் பாட் டுத் திறமை நம்ம ஊருக்கு மட்டுமில் லாம, நாட்டுக்கே தெரியப்போவுது. பயப்படாதேன்னு தைரியம் சொன் னாரு. அவரு சொன் னது சீக்கிரமே பலிச்சுது. ரேடி யோல பாட்டைக் கேட்டுட்டு, பெரு மாள்னு ஒரு ஐயா என்னை அழைச்சுக்கிட்டு வந்து டெலிவிஷன்ல பாடவச்சாரு. மாசா மாசம் மெட்ராஸ் வந்து, டெலிவிஷன்ல நான் பாடுவேன். என் வீட்டுக்காரரு, என் கூடவே வருவாரு. ரொம்ப ஒத்தாசையா இருப்பாரு."

"சினிமா வாய்ப்பு வந்தது எப்படி?"

"இங்க மெட்ராஸ்ல, சினிமாக்காரங்க, என்னை டெலிவிஷன்ல பார்த்துட்டு, சினி மாவுல நடிக்க வைக்கணும்னு ஆசைப்பட் டிருப்பாங்க போல. டெலிவிஷன் டேசன்ல விசாரிச்சிருக்காங்க. ஆனா நான் சினிமா வுல எல்லாம் நடிக்க ஒப்புக்க மாட்டேன்னு அவுங்க சொல்லியிருக்காங்க. ஆனா அவுங்க விடலை. நான் ஒரு தடவை, மெட்ராஸ் வந்தப்ப, கார் எடுத்துக்கிட்டு நேர டீ.வி. டேசனுக்கே வந்திட்டாங்க. என் கிட்ட கேட் டாங்க. சினிமாவுல அசிங்கமா துணி உடுத்தி-

**— கொல்லங்குடி கருப்பாயி**





நடிப்பாங்க. நமக்கு வேணாம் அந்தப் பொழப்புன்னு மறுத்திட்டேன். பாண்டிய ராசு, 'ஐயோ! பாட்டி! சினிமாவுலயும் பாட்டியாத்தான் நீங்க நடிக்கணும். நான் உங்க பேரன். வி.கே. ராமசாமி உங்க மகன்'ன்னாரு. என் வூட்டுக்காரரும், 'தாயி! இது நம்ம அதிருஷ்டம்தான்! நமக்குப் பணம் காசு முக்கிய மில்லைன்னாலும், உன்பேரும், புகழும் உலகத்துக்கே தெரியும். நீ சினிமாவுல நடி'ன்னாரு. பாண்டியராசன், என்னைத் தன் பாட்டியா நெனச்சாரு! நானும் அவரை என் பேரனா நெனச்சுத்தான் நடிச்சேன்."

"சினிமாவுக்காக மேக் அப் போடும் போது, ரொம்பக் கூச்சமாக இருந்ததா?"

"நான், முகத்துக்கு பவுடர் கூடப் போடக் கூடாது. நானே (இதோ... இப்படி...) தலையில கொண்டை போட்டுக்கிட்டு வருவேன்னு கண்டிசனா சொல்லிட்டேன். அவங்களும் சரின்னு சொல்லிட்டாங்க!"

"திரையில் பெரிய உருவத்தில உங்களைப் பார்த்தபோது எப்படி இருந்தது?"

"ஐயோ! அதை எப்படி நான் வார்த்தையில சொல்லுவேன் ராசா! வாயில வார்த்தை வரலை. என்னைவிட, என் வூட்டுக்காரருக்கு இன்னும் ரொம்ப சந்தோஷம். ஆண்பாவம் படம் பார்த்திட்டு, நெறைய பேர், நடிக்கக் கூப்பிட்டாங்க. நானும், சந்தோஷமா நடிச்சேன். ஆனா திடீர்னு எல்லாம் போச்சு! அந்த மவராசனோட போச்சு!"

"ஏன் பாட்டி! என்ன ஆச்சு?"

"அதை இப்ப நெனைச்சாலும், என் உடம்பு நடுங்குது. என் புருஷனை என் கண் எதிரிலேயே பறிகொடுத்திட்டேனே... (கண் கலங்குகிறார்! விஷயம் இதுதான். கொல்லங்குடி பாட்டியும், அவரது கணவரும் மதுரை வானொலி நிலையத்துக்கு, ரெக்கார்டிங்குக்காகப் போயிருக்கிறார்கள். பாத்திமா கல்லூரி அருகில், சாலையைக் கடப்பதற்காகக் காத்திருந்த போது, எமனாக வந்த டிரக் ஒன்று, பாட்டியின் கணவர் மீது கொடூரமாய் மோதி, ரோடின் பக்கத்தில் பதினைந்து அடி பள்ளத்துக்கு இழுத்துச் சென்று விட்டது. ஆன் தி ஸ்பாட் மரணம். பாட்டியின் கண் எதிரே!)

பாட்டியின் சோகத்தைச் சற்றே திசை திருப்பும் நோக்கத்துடன், "பாட்டி, சினிமாவில் நடிக்கிறபோது, சந்தோஷமான விஷயம் ஏதாவது நடந்திருக்குமே அதைப் பற்றிச் சொல்லக் கூடாதா?"

"ஆயுசு நூறு படத்துக்காக இரண்டு தடவை வெளியூர் போயி ஷூட்டிங் முடிஞ்சு போச்சு. மூணாவது தடவை ஷூட்டிங்குக்காக அன்னிக்கு ராத்திரி கிளம்பியாவணும். டைரக்டரு என்கிட்ட ஒரு வயசான மனுசரைக் காட்டி, 'பாட்டி, ரெண்டு சீன்ல, உங்களுக்குப் புருஷனா இவரு நடிப்பாரு'ன்னு சொன்னாரு. எனக்கு சுருக்குன்னுச்சு. கட்டின புருஷன் இருக்கிறப்போ, இன்னொரு ஆம்பளை எனக்கு ஜோடியா சேரலாமா? அது தப்பு! எனக்கு சினிமாவே வேணாம்! வேற யாரையாவது எனக்குப் பதிலா போட்டுக்குங்க. என்னை ஊருக்கு அனுப்பி வெச்சிடுங்க'ன்னு சொல்லிட்டேன். அவங்க, 'ஐயோ! அது முடியாது. கதைக்கே நீங்கதான் ரொம்ப முக்கியம். நடிப்புதானே! இவரோட ரெண்டு சீன் நடிக்கக் கூடாதா?'ன்னு கேட்டாரு பாண்டியராசு. 'அது கேவலமான பொழைப்பு. நான் அப்படி ஒரு ஈனமான காரியத்துக்கு ஒத்துக்க மாட்டேன்'னு கண்டிசனா சொல்லிட்டேன்.

"திடீர்னு, 'பாட்டி! உங்களைக் கட்டின புருஷனே, சினிமாவுல உங்களுக்கு ஜோடின்னா நடிப்பீங்களா?'ன்னு கேட்டாங்க. நான் சரின்னேன். என் வூட்டுக்காரரும் சந்தோஷப்பட்டாரு. நானும், அவரும் ஜோடியா, ஸ்லோ மோஷன்ல ஓடிவந்து மாலை மாத்திக்கிறா மாதிரி ஒரு சீன் எடுத்தாங்க. அன்னிக்கு நாங்க ரெண்டு பேரும் பட்ட சந்தோஷம் இருக்குதே! அது ஆயுசுக்கும் மறக்காது!" ●

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

படம் : **ஸ்ரீஹரி**

**காதல் தேசம், சிறைச்சாலை ஆகிய படங்களுக்குப் பிறகு, தமிழின் பக்கமே தலை காட்டாத தபு, அண்மையில் பெங்களூர் விதான் சௌதாவுக்கு முன்னால் கோவிந்தாவுடன் டூயட் பாடிக் கொண்டிருந்தார். அந்த இந்திப் படப் பிடிப்பின் இடைவேளைகளில் நம்மிடம் பேசினார்...**

**"காதல் தேசம், சிறைச் சாலைக்குப் பிறகு தமிழ்ப் படங்களில் நீங்கள் நடிக்கவேயில்லையே?"**

"தமிழில் நடிக்க எனக்கும் ஆசைதான். நிறையப் பேர் என்னை அணுகியுமிருக்கிறார்கள். ஆனால் தயாரிப்பாளர்களெல்லாம் புதியவர்களாக இருப்பதால்தான் தயங்க வேண்டியிருக்கிறது. பெரிய தயாரிப்பாளர்களோ, பிரபலமான இயக்குனர்களோ அழைத்தால் நிச்சயம் நடிப்பேன். இப்படி யாரும் என்னை அழைக்காததுதான் ஆச்சரியமாக இருக்கிறது."

**"இப்போது டூயட் பாடிக் கொண்டிருக்கும் இந்திப் படத்தின் கதை என்ன? உங்களது பாத்திரம் என்ன?"**

"விவரம் புரியாத வயதில் திருமணம் முடிந்த கையோடு ஒருத்தியின் திருமணம் தோல்வியடைகிறது. எனவே கணவனைப் பிரிந்து வாழ்கிறாள். ஒரு நிறுவனத்தில் வேலை பார்த்துக் கொண்டு, சமூக சேவையும் செய்கிறாள். அவள் வாழ்வில், வேலை பார்க்கும் முதலாளி, ஒரு பத்திரிகையாளர் ஆகிய இருவர் குறிக்கிடுகின்றனர். இந்த நிலையில் அவள் முடிவு என்ன என்பது தான் கதை. இதுதான் எனக்கு முதலில் சொல்லப்பட்ட கதை. ஆனாலும் கடந்த பதினைந்து நாட்களாக நடந்த இதன் படப்பிடிப்பில் கதையின் போக்கு மாறி விட்டது போல்தான் தெரிகிறது. என்னால் என்ன செய்ய முடியும்? பெரிய இயக்குனர், பெரிய தயாரிப்பாளர் படம் என்பதால் கேள்வி கேட்காமல் நடிக்க வேண்டியிருக்கிறது. இது எனக்கு மட்டுமே நடப்பதல்ல; எல்லா நடிகைகளுக்கும் நேர்வதுதான்."

**"உங்கள் சினிமா அறிமுகமே ரொம்பவும் கவர்ச்சியாகத்தான் ஆரம்பித்தது இல்லையா?"**

"நான் அறிமுகமான புதிதில் பெரிய பெரிய நடிகர்களின் ஜோடியாகவே அறிமுகமானேன். கவர்ச்சியாக நடித்தால்தான் சினிமா உலகில் நிலைத்து நிற்க முடியுமென்று சில 'பெரிய மனிதர்கள்' எனக்கு அறிவுரை கூறினார்கள். அவர்கள் சொன்னதை நம்பித்தான் அப்படி நடித்தேன். அதுவே இன்றுவரை தொடர்கிறது!"

**"ஆக, உங்களால் கவர்ச்சியைத் தவிர்க்க முடியாமலே போய் விட்டது!"**

"ஆமாம். இருந்தாலும் நான் இப்போது நடித்துக் கொண்டிருக்கிற படங்களை இன்னும் பத்தாண்டுகள் கழித்து, நான் பார்க்கிறபோது, 'ச்சே! நானா இப்படியெல்லாம் நடித்தேன்?' என்று நானே முகம் சுளித்து விடக் கூடாது என்பதில் கவனமாக இருக்கிறேன்."

**"காதலைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?"**

"அது பற்றிய அபிப்பிராயமே எனக்கு இல்லை."

**"காதல் என்பது தப்பான விஷயம் ஒன்றும் இல்லையே?"**

''தவறு என்று சொல்லவில்லை. காதல் என்பது ஓர் உணர்வு. அது எனக்கு வராத போது அது பற்றி நான் எப்படி அபிப்பிராயம் சொல்ல முடியும்?''

**''அப்படியானால் சினிமாக்களில் எப்படி காதல் உணர்வை வெளிப்படுத்துகிறீர்கள்?''**

''முதலில் நடிக்கும்போது பயமாகத்தான் இருந்தது. இயக்குனர் சொன்னதை அப்படியே செய்வேன். அவ்வளவுதான். இதில் என்ன காதல் அனுபவம் வேண்டியிருக்கிறது?''

**''மும்பையிலுள்ள கடத்தல் புள்ளியொருவர்தான் உங்களுக்கு சினிமா வாய்ப்புகளை வாங்கித் தருவதாகச் சொல்கிறார்களே...''**

''ஓ! இதற்குத்தான் காதல் பற்றிய கேள்விகளா! சாரி. எனக்கு இதுவரை யாரும் சிபாரிசு செய்ததேயில்லை. எனது திறமையால் மட்டுமே படங்கள் கிடைக்கின்றன.''

**''நீங்கள் நடிக்கும் படங்களுக்கு பைனான்சியர் அந்தப் புள்ளிதான் என்றும் அவரது சிபாரிசு - கட்டாயம் காரணமாகவே உங்களுக்கு வாய்ப்புகள் வருகின்றன என்றும்...''**

''நோ. நோ! எனது படங்களுக்கெல்லாம் அவர்தான் பைனான்சியர் என்றால், காதல் தேசத்துக்கும், சிறைச்சாலைக்கும் யார் பைனான்சியர்? அவர் இல்லையே! இப்போதுகூட அபிஷேக்குடன் ஒரு படம் நடிக்கிறேன். அதற்கும் அவர் பைனான்சியர் இல்லையே! எனவே நீங்கள் சொல்வதோ அல்லது கேள்விப்பட்டதோ அப்பட்டமான பொய் என்பது நிருபணமாகவில்லையா!''

**''அபிஷேக் - தபு ஜோடி எடுபடுமா?''**

''வொய் நாட்? என்னை வயதானவள் என்று சொல்கிறீர்களா? நான் நடிக்க வந்த புதிதில் வயதானவர்களுக்கு ஜோடியாக நடிக்கவில்லையா? அது எடுபடாமலா போய் விட்டது? அது போலத்தான் இதுவும். சொல்லப் போனால் இந்தப் படம் எனக்கு நல்லதொரு 'பிரேக்' கொடுக்கும் என்று எதிர்பார்க்கிறேன்!''

சந்திப்பு: **நீலா**

**— தபு பேட்டி**



## காதில் விழுந்தவை:




● திண்டிவனம் ராமமூர்த்தி, தமிழக காங்கிரஸ் தலைவராக வருவதற்கு, பிரபுவின் சிபாரிசும் ஒரு முக்கியமான காரணம். அதனால் கட்சி நிர்வாகிகளை நியமிக்கும்போது, தமது கோஷ்டியை, திண்டிவனத்தார் கவனிப்பார் என்று நம்பினார் பிரபு. ஆனால் திண்டிவனத்தார் தயாரித்த நிர்வாகிகள் பட்டியலில் எதிர்பார்த்த அளவுக்குப் பிரபுவின் ஆட்களுக்குப் பொறுப்புகள் கொடுக்கப்படவில்லையாம். இதனால் மேலிட ஒப்புதலுக்காகத் தில்லி சென்ற திண்டிவனத்தார் நோஸ்கட்டுடன் சென்னை திரும்ப வேண்டியதாகி விட்டது. இப்போது, கலந்து பேசி, கருத்தொற்றுமை ஏற்பட முயற்சிகள் நடக்கின்றன. லஸ்ஸிலுள்ள தமிழக இ. காங்கிரஸ் அலுவலகத்தைவிட ராயப்பேட்டையிலுள்ள பிரபுவின் அலுவலகத்தில்தான் கதர்ச் சட்டைகளின் அணிவகுப்பு அதிகமாக இருக்கிறது. "நிர்வாகிகள் விவகாரத்தில் திண்டிவனத்தார் சொதப்புகிறார். தலைவர் பதவி கிடைக்கும்வரை ஆதரவு கேட்டுக் கெஞ்சுகிறார்கள். அதற்குப் பின் அவர்கள் வேலையைக் காட்டுகிறார்கள்!" என்று எரிச்சலுடன் நம்மிடம் சொன்னார் பிரபுவின் அணுக்கத் தொண்டர் ஒருவர்.

● 'அப்பாடா' என்று பெருமூச்சு விட்டுக் கொண்டிருக்கிறார் ஆர்க்காட்டார். ஜெயின் கமிஷன் விவகாரம் சூடு பிடித்த காரணத்தால் பொதுக்குழுவில் அவரது விவகாரத்தை யாரும் கண்டு கொள்ளவில்லை. ஆனால் அந்த அற்ப சந்தோஷம் நீடிக்காத வகையில் மாறன் பேசும்போது ஆர்க்காட்டின் செயல்பாட்டை ஒரு பிடி பிடித்தார். "எப்பவும் தலைவர் பின்னாடியே சுற்றிக் கொண்டு இருக்கிறார்... கவர்மெண்ட் வேலையையும் கொஞ்சம் பார்க்கச் சொல்லுங்கய்யா..." என்று கடந்த சில மாதங்களாகவே நெருங்கிய மூத்த உடன்பிறப்புகளிடம் மாறன் சொல்லிக் கொண்டிருந்தாராம். அந்த எரிச்சல் அன்று வெளிப்பட்டதாம். சில அமைச்சர்களை மாற்றிவிட்டு புது ரத்தம் பாய்ச்ச வேண்டும் என்று மாறன் பிடிவாதமாக இருக்கிறார். ஆனால் ஆட்சிக் கலைப்பு, ஜெயின் கமிஷன் என்று அரசியல் பிரச்னைகள் கலைஞரை அழுத்துவதால் அமைச்சர்கள் பாடு கொண்டாட்டமாய் இருக்கிறதாம். இதற்கிடையில் பொதுக்குழுவில் அசைவச் சாப்பாடு போடாதது குறித்துப் புலம்புகிறார் ஓர் உடன்பிறப்பு. பொதுக்குழு நடந்த ரஜினியின் கல்யாண மண்டபத்தில் அசைவத்துக்கு 144!

● கடத்தல் பொருட்களைப் பிடிப்பதில் சாதனை செய்யும் சுங்க அதிகாரிகளுக்கு ஜனாதிபதி பதக்கம் கொடுப்பார். அப்படி கொடுக்கும் விழா ஒன்று வரும் 19ம் தேதியன்று தில்லியில் நடக்க இருக்கிறது. ஆனால் இந்த முறை ஜனாதிபதி பதக்கத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட சிலரைப் பற்றி ஏக முணுமுணுப்பு இருக்கிறது. "கடத்தல்காரர்கள் கருணையால் ஜனாதிபதி அவார்டு வாங்குகிறார்கள்" என்ற ஒரு அதிர்ச்சித் தகவலைச் சொன்னார் ஓர் அதிகாரி. விஷயத்தை கொஞ்சம் விளக்கமாகச் சொல்லச் சொன்னோம். "அது ஒண்ணுமில்லை ஸார். போதை மருந்துக் கடத்தல் உட்பட பல்வேறு பொருட்களை கடத்தும் கடத்தல்காரர்கள், வருடம் முழுவதும் தங்களை சுங்க அதிகாரிகள் கண்டு கொள்ளக் கூடாது என்பதற்காகக் கொஞ்சம் 'கண்டு' கொள்வதுண்டு. சிலர் வேண்டுமென்றே தங்கள் கடத்தல் சரக்கைப் பற்றித் தாங்களே அதிகாரிகளுக்கு வருடத்தில் ஓரிரு முறை தகவல் சொல்லுவார்கள். அதிகாரிகளும் அந்தச் சரக்கைக் கைப்பற்றி 'சாதனை'யாளர்களாக மாறுவார்கள். அதிகாரியும் "கேஸுக்கு கேஸாயிற்று. அவார்டுக்கும் வழி செய்தாகி விட்டது" என்று சந்தோஷத்தில் வருடம் முழுதும் கடத்தல்காரர்களுக்கு எந்த இடைஞ்சலும் கொடுக்க மாட்டார். இதுதான் விவகாரம்!" என்று புட்டு வைத்தார் அவர்.

— தில்லப்பா

## கயவன், மர்மம், கணவன், தவிப்பு
## ஓர் இளம் பெண்ணை
## சூழ்ந்து வரும் விறுவிறுப்பான தொடர்.

உங்கள் விஜய் டி.வியில்
செவ்வாய்தோறும் இரவு 8.30 மணிக்கு
விறுவிறுப்பான ஒரு மர்மத்தொடர்



ஸ்டாப்ஏக் க்ரீம் பாம்-ன்

# 'புதிய பா(ர்)வை'

ஒரு சமூக விரோதியின் ஆசை வார்த்தைகளுக்கு
பலியான இளம் பெண் தன்னை மீட்டுக்கொள்ள
பெரும் புயலாய் மாறி
அந்தக் கயவனையே வேரோடு சாய்க்கும் உக்கிரம்.
காணத்தவறாதீர்
அச்சமூட்டும் அழகினை.

வழங்குபவர்கள்
**Stopache** CREAM BALM





# 71

பகவானிடத்திலே ஈடுபட்டு வைகுண்டத்தை 'வேண்டாமென்ற'வர்கள் வரிசையில் ஆஞ்சநேயனும் வருகிறான்! அவனை வைகுண்டத்துக்கு அழைத்தால் என்ன சொல்கிறான்? 'அங்கே பிரவசனம் உண்டா? ராமாயண உபன்யாஸம் உண்டா' என்று கேட்கிறான்.

'அங்கே பகவான்தான் உண்டு. அவன் எஜமானன். நாம் அவனுக்கு கிங்கரர்கள். அதுதான் இருக்குமேயொழிய உபன்யாசமெல்லாம் கிடையாது' என்று சொன்னால், 'ராமாயண உபன்யாசம் நடக்காத இடம் எனக்கெதற்கு..? அது வேண்டியதில்லை!' என்கிறான்!

ராமன் தன்னோடு சேர்த்தணைத்து ஆனந்தத்தினாலே மஞ்சனம் ஆட்டிய சரீரம் ஆஞ்சநேயருடையது! அதை விட்டுவிட்டுப் போவதற்கு அவருக்கு இஷ்டமில்லை.

ராம நாமம் கேட்காத வைகுண்டம் எனக்கு வேண்டாம் என்று சொல்லிவிட்டான்!

– இப்படியாக எம்பெருமானிடத்திலே ஈடுபட்டு, மகான்களெல்லாம் சர்வத்தையும் அர்ப்பணித்து, எங்கும் நிறைந்திருக்கும்படியான அர்ச்சாவதாரத்திலே கண்டு, ஈடுபட்டு, 'மற்றது வேண்டாம், உன்னையே பற்றினேன்' என்று பேசுவதைப் பார்க்கிறோம்.

இதிலிருந்து நமக்கென்ன தெரிகிறதென்றால், பரம போக்யமாய் – நாம் அனுபவிக்கும்படியானவனாய் பரமாத்மா இருக்கிறான். இந்த விஷ்ணு சஹஸ்ரநாமத்தையே நாம் எத்தனை நாழி அனுபவித்தாலும், 'போதும்' என்ற எண்ணம் யாருக்குமே தோன்றுவதில்லை. ஏன் தோன்றுவதில்லையென்றால் – பகவானின் அந்த போக்ய குணம் படுத்தும் பாடு அது! சொல்பவர் நன்றாகச் சொல்வதாலோ கேட்பவர் நன்றாகக் கேட்பதாலோ உண்டாகிற விசேஷமில்லை – சொல்லப்படுகிற விஷயத்துக்குரிய – குணத்துக்குரிய விசேஷம்! அது அவ்வளவுக்கு நம்மை இழுக்கிறது!

சிதா - சிந்தா இந்த இரண்டிலே எது

## முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

ஜெ.பத்மவாசன்

உயர்ந்தது என்று கேட்டால் அது ஒரு சுவாரஸ்யமான விவாதம்!

சிதா என்றால் ஸ்மசானத்திலே சவத்தை எரிப்பதற்காக அடுக்கப்படும் படுக்கை. கட்டையினாலேயும் விறகினாலேயும் விராட்டியினாலேயும் போடுகிற படுக்கைக்கு சிதை என்று பெயர்.

சிந்தை என்பது மனத்திலே எழுகிற வியாகூலம். 'இதிலே எது உயர்ந்தது?' என்று சாஸ்திரம் கேள்வி கேட்கிறது!

'ஸ்மசானத்திலே போடப்படும் சிதையே உயர்ந்தது' – என்பது பதில்!

ஏன்....?

பிராணனற்ற சரீரத்தை அது எரிக்கிறது. சிந்தையோ பிராணனுள்ள சரீரத்தை அணு அணுவாக எரிக்கிறது. சிதைக்கு இடம் கொடுத்தாலும் கொடுக்கலாம். சிந்தைக்கு இடங்கொடுக்கலாமா? சிந்தை, மனிதனை அப்படியே உருக்கிவிடுமே... அவனைப் படாத பாடு படுத்துமே!

"சிந்தை வேண்டும் என்றால் ஒரே ஒரு வழி இருக்கிறது. முன்னோர்களின் கதையைப் பதினெட்டு பாகங்களாக வியாசர் எழுதி

# றையொன்றுமில்லை

யிருக்கிறார். அதை நீ கேட்க வேண்டும்!" – என்றார் வைசம்பாயனர்.

இதைக் கேட்டுக் கொண்டிருந்த ஜனமேஜயன் பார்த்தான்... "சுவாமி! என்னை நிர்ப்பந்தப்படுத்தாதீர். கதை கேட்பதற்கு அவகாசமே கிடையாது இப்போது. ரொம்ப கஷ்டமாக இருக்கிறது. நீர் புறப்பட்டால் நான் உள்ளே எழுந்து போவேன்..." என்றான்.

அவன் எழுந்து போகச் சித்தமாயிருந்த போதிலும் இவர் உட்கார்ந்து விட்டார்! "இப்படிச் சொல்லக் கூடாது. நீ வருந்தி அழைத்தாலும் நான் வரத்தக்கவனா? நானே வந்து கதை சொல்கிறேன் என்கிறேன்... நீ கேட்க மாட்டேன் என்கிறாயே! சரி பதினெட்டுப் பகுதியும் கேட்காவிட்டால் பரவாயில்லை. ஒரு பர்வம் மட்டும் கேளேன்..."

"உமக்குத்தானே சொல்கிறேன்! ஏன் இப்படி என் பிராணனை வாங்குகிறீர்!" – அவனுக்கு இன்னும் வேகமாக வருகிறது வார்த்தை! "என்னாலே ஒரு பர்வம் கூட கேட்க முடியாது. நீர் போகிறீரா இல்லையா இப்போது?"

இவர் விடவில்லை. "சில பர்வங்களிலே 130 அத்தியாயம் இருக்கும். சிலதில் 42 அத்தியாயம்தான் இருக்கும்... ஏதாவதொரு அத்தியாயம் கேளேன்..."

"ஏன் சுவாமி என்னை இப்படி ஹிம்சை பண்ணுகிறீர். என்னால் முடியாது என்றால் முடியாது. நான் இப்போதே எழுந்து போகிறேன்" – எழுந்திருக்க ஆரம்பித்தான்.

"அப்பா, அப்படிச் சொல்லாதே! சில அத்தியாயங்களிலே 142 சுலோகங்கள் இருக்கும். சிலவற்றில் 26 சுலோகங்கள்தான் இருக்கும். ஏதாவது ஒரு சுலோகம் கேளேன்..." என்றார்.

எழுந்து போகச் சித்தமாயிருந்தவன் பார்த்தான். 'இவர் ஒரு லட்சம் சுலோகங்களிலிருந்து ஒரு சுலோகத்துக்கு இறங்கி வந்து



விட்டார். ஒரு சுலோகம் சொல்வதற்கு எவ்வளவு நேரம் ஆகிவிடும்? சொன்ன உடனே ஓடிப் போய்விடலாம்...' என்று முடிவு பண்ணி "சொல்லும்" என்றான். - ரொம்ப உதாசீனமாகத்தான் சொன்னான்!

வைசம்பாயனரும் சொல்ல ஆரம்பித்தார். அவர் சொன்ன ஒரு சுலோகம் வினை முற்றாமல் நின்றது!

கேட்டுக் கொண்டிருந்தவனுக்கு ஒன்றும் புரியவில்லை. சரியாக உட்கார்ந்து கொண்டான். உட்கார்ந்து கொண்டு, "சுவாமி! இப்படிச் சொன்னால் எனக்கு ஒன்றும் புரியவில்லையே... ஆநிரை மீட்பு என்று ஒன்று சொன்னீரே அப்படியென்றால் என்ன?" என்றான்.

உடனே வைசம்பாயனர் இன்னொரு சுலோகம் சொல்கிறார். விராட பர்வம் ஆரம்பிக்கிறது. அர்ஜுனன் பெருமை, அபிமன்யு உத்தரா கல்யாணம் - இதுவரைக்கும் ரொம்ப அழகாகச் சொல்லி முடித்தார்.

"அவ்வளவுதானா சுவாமி?" என்கிறான் அவன்!

உடனே பாரதம் மொத்தத்தையும் சொன்னார் அவர்!

அத்தனையையும் கேட்டுவிட்டு, "அவ்வளவுதானா...?" என்கிறான் திரும்பவும்! "'பல பங்கம்' என்று ஏதோ சொன்னீர்களே அதையும் சொல்லுங்கள்..." என்றான்.

உடனே சுந்தர காண்டத்தை ஆரம்பித்து ரொம்ப அழகாகச் சொன்னார்.

"இவ்வளவுதானா ஸ்வாமி?" என்கிறான் அவன் அப்புறமும்.

உடனே ராமாயணத்தை ஆதியிலேயிருந்து ஆரம்பித்துச் சொல்கிறார். புராணங்கள் பதினெட்டையும் சொன்னார்; உப புராணங்கள் பதினெட்டைச் சொன்னார். வேத வேதாந்தங்களைச் சொன்னார். சர்வ சாஸ்திரங்கள், ஸ்ம்ருதிகளைச் சொன்னார்... சொல்லிக் கொண்டேயிருக்கிறார். அனுபவிக்க அனுபவிக்கத் தெவிட்டாததாலே அவனும் கேட்டுக் கொண்டேயிருக்கிறான். 'போதும்' என்கிற எண்ணமே ஏற்படவில்லையாம் அவனுக்கு.

அப்படி அவன் கண்ணை மூடி தன்னை மறந்த லயத்திலேயிருக்கிறபோது, வைசம்பாயனர் பார்த்தார்... 'இவன் கண்ணைத் திறப்பதற்குள்ளே போய்விடலாம்' என்று ஓடியே போய்விட்டார்!

கதை கேட்டுக் கொண்டிருக்கிற நமக்கெல்லாம் ஒரு சந்தேகம்... அவனைப் போட்டு ஹிம்சை பண்ணியவர் 'ஒரு சுலோகமாவது கேள்' என்று ஹிம்சை பண்ணிவிட்டு 'ஜனமஜேயா நான் ஊருக்குப் போய் வரட்டுமா?' என்று சொல்லிக் கொண்டு போனால் என்னவாம்...? சொல்லாமல் கொள்ளாமல் ஏன் புறப்பட்டுப் போனார்?

ஏனென்றால், அவன் கண்ணைத் திறந்தால் இன்னும் எதையாவது சொல்லும்படி கேட்பான். சொல்வதற்கு இவரிடத்திலே விஷயம் என்ன மீதி இருக்கிறது...! எல்லா விஷயத்தையும் சொல்லி விட்டார் அல்லவா!

இப்போது இதிலே ஒன்றை நாம் நன்றாக கவனிக்க வேண்டும்: ஒரு சுலோகம் கூட கேட்க அவகாசம் இல்லை என்று சொன்னவன் அத்தனையையும் கேட்டுவிட்டு இன்னமும் கேட்க வேண்டும் என்கிறான்! ஏன்? அதை நாமாக நினைத்தால் கேட்க முடியுமா? கிடையாது! நாம் கேட்டனுபவிக்க வேண்டும் என்று பகவான் சங்கல்பித்ததனாலேதான் அது நடைபெறுகிறது.

அந்த பகவத் குணத்தைக் கேட்க வேண்டும் என்று உட்கார்ந்து கொண்டு விட்டோமானால் காலம் போவது தெரியுமா?

"ச்சு! ச்சு! அப்படியா! ஹாஹா!" என்றெல்லாம் சொல்லாதவர்கள் எதிரே கதை சொல்லாதே என்று சொல்லி விட்டார்கள்! எழுந்தும் பறந்தும் துள்ளாதாரிடத்தில் எதையும் சொல்லாதே! 'பக்தி இல்லாதவனுக்கு, தபஸ் இல்லாதவனுக்கு கீதையைச் சொல்லாதே' என்றான் பரமாத்மா... 'என்னிடத்

## அருள்வாக்கு

**பணத்துக்காக பகவானை ப்ரார்த்தனை பண்ணுவது தப்புதான். கஷ்டம் போகணும், வ்யாதி தீரணும் என்று ப்ரார்த்தனை பண்ணுவது கூட அவிவேகம்தான். பகவானுக்காகவே பகவான் என்ற ப்ரேமையோடு செய்கிற பக்திதான் நிஜமான பக்தி. ஆனால் பகவானோ (கீதையில் இன்னோரிடத்தில்) இப்படிப் பணத்துக்காகவும், கஷ்ட நிவ்ருத்திக்காகவும் ப்ரார்த்திக்கிறவர்களைக் கூட உயர்ந்தவர்கள் ("உதாரா:") என்கிறார். ஏன் அப்படிச் சொல்கிறாரென்றால், ப்ரார்த்தனை செய்வது, எதுவோ ஒன்றுக்காக பகவான் என்று ஒருத்தனை நினைப்பது, நம்மால் முடியாத ஒன்றைச் செய்கிற மஹா சக்தன்**

அவன் என்பதால் அவனிடம் வேண்டிக் கொள்வது (இதிலேயே நம் வேண்டுதலை நிறைவேற்றி வைக்கும் அருள் மனஸ் அவனுக்கு உண்டு என்ற நம்பிக்கையும் இருக்கிறது) – இப்படி அநேக நல்ல விஷயங்கள் பணத்துக்காகவும், கஷ்ட நிவ்ருத்திக்காகவும் ப்ரார்த்திப்பதில் கூட இருக்கத்தானே செய்கின்றன? அதனால்தான் இப்படி ப்ரார்த்திப்பவர்களையும் உசந்தவர்களாகச் சொன்னார். ''ஏதோ ஒரு தினுஸில் என்னிடம் வந்து விட்டால் போதும். அப்புறம் ஸரியான தினுஸில் வரும்படியான பக்வத்தை அவனுக்குக் கொஞ்சம் கொஞ்சமாகத் தந்து விடலாம்'' என்று நினைத்துத் தான் அப்படிச் சொன்னார்.

அன்போடு அவரை நினைக்கணுமென்பது கூட இல்லை. கம்ஸன் மாதிரி பயத்தோடு, சிசுபாலன் மாதிரி க்ரோதத்தோடு நினைத்தால் கூட ஸரி, அவர்களும் நினைத்தார்களோ இல்லையோ, அதனால் அவர்களுக்கும் உயர்கதி கொடுப்பது என்று எதிலும் நல்லதைப் பார்த்தவர் அவர். அநேகக் கெட்டதில் துளி நல்லது இருந்தாலும் நல்லதை 'என்கரேஜ்' பண்ணிக் கொண்டே போய் அப்புறம் நல்லது கெட்டது இரண்டையும் விட்டு விடும்படி பண்ணுவார். இதுதான் நம் வேத தர்மத்தின் வழி.



— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்

திலே அருமை உள்ளவனுக்குச் சொல்லாதே!'

பாத்திரம் நல்லதாக இருக்க வேண்டுமல்லவா? தவறான பாத்திரத்திலே விஷயம் வினியோகமாகி விட்டதென்றால் அது குரங்கு கை பூமாலை போலேதான்! நாற்சந்தி கூடுகிற இடத்தில் அவலைக் கொட்டினால் ஆளுக்கொரு கை எடுத்துக் கொண்டு போய் விடுவார்கள். யார் எதை எடுத்தார்கள் என்பது எப்படித் தெரியும்?

சரியான பாத்திரத்தில் போய்ச் சேர வேண்டும் என்பதற்காகத்தான் வைசம்பாயனர், சிந்தையோடு இருந்த ஜனமேஜயனுக்கு அவ்வளவு தூரம் சொன்னார். அவனும் நிறைய கேட்டான். இன்னமும் கேட்க ஆசைப்பட்டான். பகவத் விஷயமானது பரம போக்யமாய் இருப்பதனாலே யல்லவா அவன் அப்படி ஆசைப்படுகிறான்.

பகவத் கீதைக்கு பாஷ்யம் உண்டு – கீதா பாஷ்யம் என்று பெயர். ஆனால் திருவாய்மொழி 1102 பாசுரம் இருக்கிறதே... அதற்கு பகவத் விஷயம் என்றே பெயர்! ஏனென்றால் பகவானைத் தவிர, மற்றொரு விஷயம் கிடையாது அதிலே. அப்படிப்பட்ட பகவத் விஷயம் இருக்கிறது பாருங்கள்... அது எப்போதும் போக்யமாய் இருக்கும். பகவானை விடுத்த மற்ற விஷயங்களெல்லாம் நம்மைக் கெடுக்கும். பகவத் விஷயம் மட்டுமே கலி கல்மிஷத்தைப் போக்குகிறது.

கோபிகா கீதத்திலே 'தவகதாம்ருதம்' என்று கொண்டாடியிருக்கிறது எம்பெருமானுடைய சரித்திரத்தை. அவனை அனுபவிப்பது, அவன் திருநாமத்தைச் சொல்வது எல்லாமே போக்யமாய் இருப்பதனால்தான் போக்தாவும் அவனே; போக்யமும் அவனே என்றாகிறது. அந்த அனுபவமும் அவன் சங்கல்பித்தால்தான் கைகூடும் என்பதால் நியம்தா, நியாமகன் என்று அவனைச் சொல்லியிருக்கிறது.

எப்படி அவன் நியமிக்கிறான்...? நித்ய சம்சாரிகளாக உழன்று கொண்டிருக்கிற நம்மைப் போன்றவருக்கு எங்கும் நிறை பரப்ரும்மத்தை அனுபவிக்க முடியுமா?

எங்கும் நிறை பரப்ரும்மம்தான் ஒரு வடிவு கொண்டு வருகிறான். நாம் அனுபவிக்க வேண்டுமென்பதற்காக...

அதை எவ்வளவு அழகாகப் பாடியிருக்கிறார் பாருங்கள்...:

''எங்கும் நிறை பரப்ரும்மம் 'அம்மா' என்றழைக்க
என்ன தவம் செய்தனை, யசோதா...''

– உயர்ந்த க்ருதி அது. என்ன தவம் பண்ணினாயோ? என்று யசோதையிடம் கேட்கிறார்.

அந்த மாதிரி எம்பெருமான் ஒரு வடிவுடன் வந்து தன்னைக் காட்டிக் கொடுக்கிறான். அப்படி அவன் காட்டிக் கொடுக்கவில்லையானால், நம்மால் அவனை அனுபவிக்க முடியாது.

(தொடரும்)

## நெஞ்சில் உரமும்,
## நேர்மைத் திறமும் கொண்ட
## பூவையரின் புதிய தொடர்.

உங்கள் விஜய் டி.வி.யில் திங்கள் முதல் வெள்ளி வரை
பகல் 1 மணிக்கு சுவாசிக்கத் தவறாதீர்.

நெஸ்லே செரிலாக்கின்

# 'பூமணம்'

சமூக அவலங்களையும் அச்சுறுத்தல்களையும் தமது
வெவ்வேறான திறமைகளின் மூலம் மீட்கப் போராடும்
அந்த பெண்களின் துணிகரம்.
சிந்தைக்கு உரமூட்டும் புதிய சித்திரம்.

பூமணம், இனி நாள்தோறும் மணக்கும்.

வழங்குபவர்கள்

**Nestlé**
**CERELAC**



1998 ஆகஸ்ட் 16
வெகுதான்ய ஆடி 31
மலர் : 57
இதழ் : 3

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.

# ஜெயின் அறிக்கை : உரித்த வெங்காயம்!

ஏழு ஆண்டுகளாக மக்களின் வரிப்பணத்தைச் செலவிட்டு, சம்பந்தப்பட்ட, சம்பந்தப் படாத நபர்களையெல்லாம் விசாரணைக்குள்ளாக்கி, அலைக்கழித்து, எந்த உறுதியான முடிவுக்கும் வர இயலாமல் உதட்டைப் பிதுக்கியிருக்கிறது ஜெயின் கமிஷன் இறுதி அறிக்கை. ஆனால், ஒரு சில நபர்களைச் சந்தேகத்துக்குட்படுத்தும் ஆதாரமற்ற ஹேஷ்யங்களையும் உள்ளடக்கியிருக்கிறது. இந்த 'ஒரு சில நபர்களுள்' தமிழக முதல்வரும் அடக்கம் என்பது ஜெயலலிதாவுக்கு மிகவும் வசதியாகப் போய்விட்டது. 'கருணாநிதி உடனே ராஜினாமா செய்ய வேண்டும்' என்று அவர் முன்னிலும் உரத்த குரலில் வலியுறுத்திப் பேசி வருகிறார்.

சுப்ரமண்யம் சுவாமியோ, அறிக்கை தம் பேரில் அபாண்டமாகச் சந்தேகம் தெரிவிக்கிறது என்று கூறும்போதே தி.மு.க. தலைவரைச் சந்தேகிக்கும் பகுதியை மட்டும் மகிழ்ச்சியுடன் ஏற்கிறார்!

ஜெயின் கமிஷனின் இடைக்கால அறிக்கையின் அடிப்படையில் குஜ்ரால் தலைமையிலான மத்திய அரசையே கவிழ்த்த காங்கிரஸ், இப்போது இறுதி அறிக்கையை அதிருப்தியுடனேயே ஏற்கிறது! 'அரசியல் ரீதியான தூண்டுதலின் அடிப்படையில் தயாரிக்கப்பட்ட அறிக்கை இது' என்று அக்கட்சித் தரப்பில் விமர்சனம் எழுந்திருக்கிறது!

தி.மு.கவும் த.ம.காவும் இந்த அறிக்கையைக் கண்டித்திருப்பதில் ஆச்சரியமில்லை.

ஆக, இந்த அறிக்கை முற்றிலும் அரசியல் கண்ணோட்டத்தில்தான் உருவாகியிருக்கிறது




என்பதும் அதே அரசியல் கண்ணோட்டத்துடன்தான் இன்று அணுகப்படுகிறது என்பதும் தெள்ளத் தெளிவு.

ராஜீவ் காந்தி கொலைக்கு உள்நாட்டிலோ அல்லது அயல்நாட்டிலோ அல்லது கூட்டாகவோ சதி ஏதேனும் காரணமாயிருந்ததா என்பதை ஆராய அமர்த்தப்பட்டதே ஜெயின் கமிஷன். போதுமான ஆதாரங்கள் இல்லாததால், அது குறித்து எந்தவொரு உறுதியான முடிவுக்கும் கமிஷனால் வரமுடியவில்லை.

'சரி, இதோடு இந்த விஷயத்துக்கு முற்றுப்புள்ளி வைப்போம்' என்று முடிவு செய்திருக்கலாம் மத்திய அரசு. ஆனால், அவ்வாறு பி.ஜே.பி ஆட்சி செய்திருக்குமேயானால் எதிர்க்கட்சி வரிசையிலுள்ள காங்கிரஸ்காரர்கள் வயிற்றிலும் வாயிலும் அடித்துக் கொள்ளாத குறையாக எதிர்ப்புத் தெரிவித்திருப்பார்கள்! 'எங்கள் தலைவர் கொலைக்குப் பின் உள்ள சதியை மூடி மறைக்க முயற்சி!'' என்று குற்றமும் சாட்டியிருப்பார்கள்.

இதற்கு பயந்து கொண்டே அரசியல் ரீதியாகச் செயல்பட்டிருக்கிறது பி.ஜே.பி அரசு. ஜெயின் கமிஷன் அறிக்கை எழுப்பியிருக்கிற கேள்விகளை ஆராய இன்னொரு அமைப்பு நிறுவப்படும் என்று Multi Disciplinary Monitoring Agency என்ற புதுமைப் பெயருடன் ஓர் அமைப்பை அறிவித்திருக்கிறது. ஜெயின் கமிஷன் அறிக்கை அடிப்படையில் மத்திய அரசு எடுத்துள்ள நடவடிக்கை (Action taken) இவ்வளவுதான்! ஏழு ஆண்டுகள் விசாரணை நடத்தி, ஆயிரக்கணக்கான பக்கங்களுக்கு அறிக்கை சமர்ப்பித்த பிறகு, அதே பிரச்னைக்கு இன்னொரு விசாரணை!

'பி.ஜே.பி. அரசின் இந்த முடிவை அப்படியே ஏற்றுக் கொள்வதாவது!' என்று யோசித்து, தன் பங்குக்குக் கொஞ்சம் குட்டையைக் குழப்பியிருக்கிறது காங்கிரஸ் கட்சி :

'சி.பி.ஐ. அமைப்புக்குள் இந்த ஆய்வுக்குழு நிறுவப்படுவது ஏற்புடையதல்ல... ஜெயின் இறுதி அறிக்கையில் குறிப்பிடப்பட்டவர்கள் நீதிமன்ற விசாரணைக்கு உட்படுத்தப்பட வேண்டும்' என்று கூறியுள்ளது.

அரசியல் நெருக்கடிகளைப் பொருத்து பி.ஜே.பி. அரசு இது விஷயத்தில் தன் நிலையைத்




திருத்திக் கொள்ளவோ மாற்றிக் கொள்ளவோ கூடும்.

ராஜீவ் காந்தி கொலைக்குக் காரணம் விடுதலைப் புலிகளின் பழிவாங்கல் மனோபாவம் தான் என்பது ஊரறிந்த ரகசியம். ஆரம்பகாலத்தில் புலிகள் இயக்கத்துக்கு இந்திய அரசு அளித்த உதவிகளும் பின்னர் இந்தியா - ஸ்ரீலங்கா ஒப்பந்தத்தின் அடிப்படையில் அமைதிப் படையை அனுப்பி புலிகளை எதிர்த்ததும் சரித்திர நிகழ்வுகள். ஆதரவு எதிர்ப்பாக மாறியபோது ஆத்திரமடைந்த புலிகள் பழி தீர்த்துக் கொண்டனர். இந்த நிகழ்வுகளுக்கு இந்திய அரசாங்கத்தின் நிலைதான் காரணமேயொழிய அவ்வப்போது தமிழகத்தில் பதவியில் இருந்த முதல்வர்கள், ராஜீவ் காந்தி மரணத்துக்குத் திட்டமிட்டு உதவவில்லை. அவர்களுடைய செயல்பாடு மத்திய அரசின் கொள்கைகளுக்கு ஏற்பவே இருந்தது. வேறு விதமாக இருப்பது சாத்தியமும் அல்ல.

கொலைத் திட்டத்தில் நேரடியாகத் தொடர்பு கொண்டிருந்தவர்களும் அவர்களுக்கு உதவியவர்களும் சிறப்புப் புலனாய்வுக் குழுவினால் விசாரிக்கப்பட்டு மரண தண்டனையும் விதிக்கப்பட்டு விட்டார்கள். வழக்கு உச்ச நீதிமன்றத்துக்குப் போயிருக்கிறது.

இந்தச் சூழ்நிலையில் மேலும் ஒரு ஆய்வுக் குழு அமைப்பதன் மூலம் திரும்பவும் இவ் வழக்கை ஆராய முற்படுவது உச்சநீதிமன்றத் தீர்ப்பைத் தாமதப்படுத்தத்தான் உதவுமேயொழிய, புதிதாக எதையும் வெளிப்படுத்திவிட முடியாது.

அரசியல் காரணங்களுக்காக – பதவியில் நீடிக்கவும், அரசியல் விரோதிகளைப் பதவியிலிருந்து இறக்கவும், வெறுமே அரசியல் ரீதியாக எதிர்ப்பைத் தெரிவிக்கவும், ஆளுங்கட்சியைப் பந்தாடி மிரட்டவும் இப்படி ஒரு கமிஷன் அறிக்கையை நமது அரசியல்வாதிகள் கருவியாக்கிக் கொள்வது இந்திய அரசியல் எவ்வளவு தூரம் சீரழிந்து கிடக்கிறது என்பதையே உணர்த்துகிறது.

நாட்டு நலனில் அக்கறையுள்ளவர்களாக இருந்தால், நம் அரசியல்வாதிகள் ஜெயின் கமிஷன் அறிக்கையை அதற்குரிய இடமான குப்பைத் தொட்டியில் போட்டுவிட்டு அடுத்து ஆகவேண்டிய வேலையைப் பார்ப்பார்கள். ஆனால், சுயநலவாதிகள் அரசியல்வாதிகளாகும் போது, இத்தகைய நேர்மையான, துணிச்சலான நடவடிக்கைகளை எதிர்பார்க்க முடியாது.

# காலேஜ் கார்னர்

# பார்க்கறவங்க

**"நீங்கள் தூர்தர்ஷனின் டைரக்டராக இருந்தால் என்ன செய்வீர்கள் என்று வேலூர் (வடார்க் காடு) ஊரிஸ் கல்லூரி மாணவ - மாணவி யரிடம் கேட்டோம்...**

**1. சுகுமாரன் (எம்.எஸ்ஸி, கணிதம்) :** முதல்ல டப்பிங் தமிழ்த் தொடரையெல்லாம் கட் பண்ணிடுவேன். ஏன், தமிழில் ஆளே இல்லையா? நாலு நாற்காலியைப் போட்டு ஒரு ரூமுக்குள்ளே தமிழ் நாடகம் நடத்துறாங்க. பார்க்கறவங்க என்ன கேனயங்களா? அப்புறம்.. விளையாட்டுக்குன்னு ஒரு சேனல் ஆரம்பிச்சுடலாம்.

**2. சுஜாதா (எம்.எஸ்ஸி, கணிதம், இரண்டாமாண்டு) :** 'காண்போம் கற்போம்' மாதிரி மாணவர்களுக்கு உதவும் ப்ரோகிராம்களை நிறைய பண்ணுவோம். அதை மாணவர்கள் காலேஜுக்கு போற நேரத்துல போடாம, அவர்கள் பார்க்கற நேரத்துல ஒளிபரப்புவேன்.

**3. சாலை வாக்குமி (எம்.எஸ்ஸி, கணிதம்) :** டிடில வர்ற நியூஸ் யாருக்குமே யூஸ் இல்லே! உலகம் முழுக்க ரிப்போர்ட்டர்ஸ் அப்பாயிண்ட் பண்ணி உடனுக்குடன் நியூஸ் தரணும்! அப்பத்தான் மத்த சாட்டிலைட் மூவிக்களை ஜெயிக்க முடியும். நம்ம நியூஸையும் யாராவது பார்க்க வாய்ப்புக் கிடைக்கும். மதத்துக்கோ, அரசியல்வாதிகளுக்கோ முக்கியத்துவம் தராமல், சாதனையாளர்களுக்கு முக்கியத்துவம் தருவேன். அவங்களாலதான் நாடு முன்னேறும்.

**4. எ. ஹரிகிருஷ்ணன் (பி.எஸ்ஸி.) :** மத்த சேனல கம்பேர் பண்ணும்போது டிடி ப்ரோகிராம்ஸ் கேவலமா இருக்கு! ப்ரோகிராமோட தரத்தை உலக அளவுக்கு மாத்தணும். சமூகத்துல நடக்கற நிகழ்வு களை அலசும் 'டெலி டாக்'கே டிடியில் கிடையாது. அதை முதல்ல ஏற்பாடு பண்ணுவேன்.

**5. ஷோபா (எம்.எஸ்ஸி.) :** டாக்டரோ, என்ஜி னியரோ அவங்கவங்க துறை மட்டுமே அவங்களுக்கு தெரியும். அத னால் எல்லோரும் எல்லாத் துறையை பத்தி யும் தெரிஞ்சு வச்சுக்கற மாதிரி ப்ரோகிராம் ஸை 'இண்ட்ரஸ்டிங்'கா போட்டுக் காட்டுவேன்.

**6. பாக்யலட்சுமி (எம்.எஸ்ஸி, கணி**












17


16

களைப் பார்த்தாலே ப்ரோகிராமையே நிறுத்திடலாமான்னு தோணுது. பார்க் கறதுக்கு லட்சணமான ஆட்களை அறிவிப்பாளராகப் போடுவேன்.

**9. சிவகாமி (எம்.எஸ்ஸி, கணி தம், இரண்டாவது ஆண்டு) :** கிராமங்களில்தான் இந்தியா இருக்கிறது! குக்கிராமங்களை கூட அடைவது டிடிதான். வெளி உலகம் தெரியாம, பின்தங்கி இருக் கும் கிராமத்துப் பெண்களுக்கு விழிப்புணர்ச்சி ஏற்படுத்தும் நிகழ்ச்சிகளை முதலில் கொண்டு வருவேன். பொதுவாக் பெண்கள் முன்னேற் றத்திற்காக நிறைய நேரம் ஒதுக்குவேன்.

**10. லாவண்யா (எம்.எஸ்ஸி, இரண்டாம் ஆண்டு) :** நான் டிடியே பார்க்கறது கிடை யாது. அப்புறம் எப்படி டைரக்டர் ஆவது? என்ன செய்யறது? வேணும்னா... இழுத்து மூடிடுவேன். யாருமே பார்க்காத சேனல் இருந்து என்ன பிரயோஜனம்?!

# கலையங்களா?

தம்) : மக்கள் விரும் பிப் பார்க்கிற சினிமா படங் களை ஏதோ 'கோடவுன்'ல இருந்து எடுத் துப் போடாம, கொஞ்சமாச்சும் புதுசாப் போடுவேன்.

**7. கிருஷ்ணமூர்த்தி (பி.எஸ்ஸி, இரண் டாம் ஆண்டு) :** தூர்தர்ஷனுக்கு என்ன குறைச்சல்? மத்த சானல்களை கம்பேர் பண் ணாலும் தூர்தர்ஷன் பெட்டராவே இருக்கு. கிராபிக்ஸ் போன்ற தொழில் நுட்பங்களை மட்டும் கொண்டு வந்து இன்னும் சூப்பராக் கிடுவேன். மத்தபடி எந்த மாற்றமும் கொண்டு வர மாட்டேன்.

**8. சாந்தி (எம்.எஸ்ஸி) :** விசேஷ தினங்களில் ஒளிபரப்பாகும் நிகழ்ச் சிகளில் சினிமாக்காரர்கள் அதிகம் இடம் பெறுவதை நிறுத்துவேன். இப்ப வர்ற நிகழ்ச்சி அறிவிப்பாளர்


14


13


15


12


10


11

**11. சிந்து (எம்.எஸ்ஸி, இரண்டாம் ஆண்டு) :** நாட்டிய நாடகம் போன்ற பஞ்சாங்க மேட்டருக்கெல் லாம் கல்தா கொடுத் துடுவேன். சின்ன பசங்க கூட திட்டறாப் போல பழைய கார்ட்டூன்ஸ் லாம் போடமாட்டேன். இப்போ சமூகத்துல

என்ன நடக்கறதோ அதைப் பிரதிபலிக்கிற மாதிரி மாற்றி அமைப்பேன்.

**12. சுவலேகா (எம்.ஏ. வரலாறு) :** கல்ச்சர், கல்ச்சர்னு சொல்லிக்கிட்டு நாட்டையே நாசம் பண்ணிக்கிட்டு இருக்காங்க. உலகத்தில் எய்ட்ஸ் எங்கே அதிகமா இருக்கு? இந்தியாவுல தான். அதை வராம தடுத்துக்கக் கூட இங்கே இருக்கறவங்களுக்குத் தெரியல. அதனால முதல்ல செக்ஸ் எஜுகேஷன டி.வில கொண்டு வருவேன்.


18


19

**13. அம்சவேணி (எம்.ஏ, வரலாறு, இரண்டாம் ஆண்டு) :** எல்லாமே சென் சார்டு! தொலைக்காட்சியை சுதந்தரமா செயல்பட வைக்கிறதுக்கு முயற்சி பண்ணு வேன்.

**14. லக்ஷ்மி (எம்.ஏ. வரலாறு, இரண்டாம் ஆண்டு) :** நாட்டோட முதுகெலும்பே இன் றைய மாணவர்கள்தான்! 10, 12, டிகிரி எனப் படிப்பவர்களுக்கு அடுத்தது என்ன என்பது போன்ற வாய்ப்பு பற்றிய தகவல்களுக்குத் தான் முக்கியத்துவம் தருவேன்.

**15. ஷண்முகப்ரியா (எம்.ஏ. வரலாறு) :** மத்த சேனல்ல பொழுது போக்கு சமாசாரங் கள்தான் அதிகம். அந்தத் தப்ப நான் பண்ண மாட்டேன். பப்ளிக் என்ன நினைக்கறாங் களோ அதை அப்படியே சொல்ற மத்த சேனல்களைப் பார்த்தாவது நானும் அப்டு டேட்டா நிகழ்ச்சி பண்ணுவேன்.

**16. டி.எஸ். சித்ரா (எம்.காம் இறுதி யாண்டு) :** கம்ப்யூட்டர், அறிவியல் நிகழ்ச்சி கள் எல்லாம் ஒண்ணு இங்கிலீஷ்ல இருக்கு, இல்லன்னா ஹிந்தியில் இருக்கு. நான் வந் தேன்னா எல்லாத்தையும் தமிழ் பண்ணிடு வேன். முழுநேர தமிழ் சேனலா மாத்திட முயற்சி பண்ணுவேன்.

**17. கே. ஜான்சிராணி (எம்.காம்) :** நாமெல்லாம் ஏதோ நல்லாயிருக்கோம். கிரா மத்துல இருக்கறவங்க நிறைய பேருக்கு உலகம் பத்தி தெரியல. தன்னை யாராவது குறை சொன்னாக் கூட ரிப்ளை பண்ணத் தெரியாம இருக்காங்க. அவங்களுக்காக எதையாச்சும் பண்ணுவேன்.

**18. ப்ரியா (எம்.காம், இரண்டாம் ஆண்டு) :** தமிழைக் கொல பண்ற தப்புத் தப்பான தமிழாக்கத் தொடர்களுக்குத்தான் முதல்ல 'டாட்டா' சொல்வேன். ஒரு ஹிந்தி தொடருக்கு மக்கள் வரவேற்பு இருக்குன்னா அதை தமிழ்லயே தயாரிக்கச் சொல்வேன்.

**19. எம். சிவசங்கரி (எம்.காம், இரண் டாம் ஆண்டு) :** சிட்டியில இருக்கறவங்க ஏமாத்தறதுக்கும், கிராமத்துல இருக்கறவங்க ஏமாறவும் தயாரா இருக்காங்க. அதனால ஏமாத்தறது, ஏமாறமா இருக்கறது ரெண்டு பத்தியும் ப்ரோகிராம் பண்ணி மக்களை எச் சரிக்கை பண்ணுவேன்.

**20. சுகுணா (எம்.காம்) :** குழந்தைகளை எடுத்துக்கிட்டா நிகழ்ச்சிகளை விட விளம்பரங்களைத்தான் ரசிக்க றாங்க. அதிலும் பெண்கள் உப யோகப்படுத்தும் சில பொருட் களை பற்றிய விளம்பரங் களைப் பார்த்து விட்டு அவர்கள் கேட்கும் கேள்வி களுக்கு நம்மால் பதில் சொல்ல முடியவில்லை. அந்த மாதிரி விளம் பரங்களை கட் பண்ணுவேன். அல்லது லேட் நைட்ல போடறாப்போல பார்த்துப்பேன். அதே மாதிரி நிகழ்ச்சிதான் முக்கியமே தவிர, வருமானம் அல்ல. அடிக்கடி தொல்லை பண்ணுகிற விளம் பரங்களின் எண்ணிக்கையைக் குறைச்சுடுவேன்.


20

21


22

**21. கவிதா (எம்.காம், இரண்டாம் ஆண்டு) :** இந்தி யாவுல வேல இல்லா வாலிப,


23

வாலிபிகளின் பிரச்னைதான் பெரிசா இருக்கு. அதைச் சரிபண்ணினாலே இந்தியா டெவலப் ஆகும். எனவே இளைஞர்களுக்கான வேலை வாய்ப்பு மற்றும் சுயதொழில் பற்றிய நிகழ்ச்சி களுக்குத்தான் முக்கியத்துவம் தருவேன்.

**22. சங்கீதா (எம்.காம்)** : மத்த சேனல்ஸ் என்டர்டெயின் பண்ணா... பண்ணிட்டு போவட்டுமே? தூர்தர்ஷன் மக்களுக்கானது. அதுல மக்களுக்குப் பயனுள்ளது மட்டுமே பண்ணுவேன். சினிமா, ஒளியும்-ஒலியும் போன்றவற்றில் கவர்ச்சிக்கு இடம் தர மாட் டேன். போட்ட படத்தையே திரும்பத் திரும்ப போட்டுக்கிட்டும் இருக்க மாட்டேன்.

**23. மணிகண்டன் (எம்.எஸ்ஸி, இரண் டாம் ஆண்டு)** : தமிழன் அமெரிக்கா போய் கலக்கறான் சார்! ஆனா அமெரிக்க டெக்னா லஜி இன்னும் நம்ப டி.விக்கு வரல. 30 கோடி யில தமிழ்ப்படம் எடுக்கறான். ஏன் மூனு லட்சம் போட்டு நல்ல டிராமா பண்ண முடி யாது? எவ்வளவோ இருக்குங்க பண்ணறதுக்கு.

**24. சுந்தரலஷ்மி (எம்.எஸ்ஸி, கணி தம் இரண்டாம் ஆண்டு)** : போர டிக்கற எந்த நிகழ்ச்சியா இருந் தாலும் சரி இரக்கமே இல்லாம தூக்கிடு வேன். ஆனா 'வயலும் வாழ்வும்' வேணும் சார். ஏன்னா விவசாயத்த நம்பித் தான் நாம இருக்கோம். அதை மறக்காம நிகழ்ச்சி பண்ணு வேன்.

**25. சிவக்குமார் (பி.எஸ்ஸி இறுதியாண்டு)** : திரும்பத் திரும்ப ராமாயணம், மகாபார தம்தான். என்னோட தலை முறையிலயாச்சும் அதை மாத் துவேன். இன்டர்நெட்டை டி.வியில இணைக்க எல்லோ ரும் பார்க்குறாப் போல செய் வேன். அதனால இந்தியாவில பல மாற்றங்களைக் கொண்டு வரமுடியும்னு நினைக்கிறேன்.

**26. ஜெயலஷ்மி (எம்.எஸ்ஸி)** : பதி னைஞ்சு, பதினாறு வயசுலதான் பசங்க திசை மாறிப் போறாங்க! அவங்கள நல்வழிப்படுத் தும் நிகழ்ச்சிகள் நிறைய பண்ணுவேன்.

**27. கமலக்கண்ணன் (எம்.எஸ்ஸி கணி தம், இரண்டாம் ஆண்டு)** : இந்த ஒளியும் ஒலியும் இருக்கு பாருங்க அதையே 24 மணி நேரமும் போடணும்னு ஆசைங்க. வேணும்னா, தமிழ்ப் பாட்டுக்கென்றே தனிச் சேனல் ஆரம் பிக்கலாம்.

**28. சுதாகர் (பி.எஸ்ஸி மூன்றாம் ஆண்டு)** : ஜாதி, மதம், தீவிரவாதம், பிரி வினை இல்லாம இந்தியன் என்கிற உணர் வைத் தூக்கி நிறுத்தும் அளவுக்கு தேசப்பற்றை டி.வி. மூலம் பரப்புவேன்.

**29. எஸ். மதன்குமார் (கணிதம் மூன்றாமாண்டு)** : இருக்கறது எதையும் உடனே மாற்ற மாட்டேன். கொஞ்ச கொஞ்சமா அதுல மாற்றங்கள் செய் வேன். சில விளம்பரங்கள் ஆபாசமாக வருவதைத் தடுக்கணும். இன்னொன்று – நேரிடையான (live) நிகழ்ச்சிகள் நிறைய பண்ணுவேன்.

**30. பாலமுரளி (பி.எஸ்ஸி)** : இது கம்ப் யூட்டர் உலகம். கம்ப்யூட்டரை பத்தி டெய்லி ப்ரோகிராம் பண்ணுவேன். கல்விக்கென்றே தனிச் சேனல் ஆரம்பிக்க அதுல படிப்பு, வேலை வாய்ப்பு, இளைஞர்கள் முன்னேற் றம்னு ஒளிபரப்ப முயற்சி எடுப்பேன். என்னு டைய நல்ல எண்ணங்களை எனக்கு மேலுள் ளவர்கள் உதாசீனப்படுத்தினால் பதவியை ராஜினாமா செஞ்சுடுவேன். ●

பேட்டி, படங்கள் : **ஞானசேகர்**



# வீட்டைப் பற்றி அவருக்கு ஒன்னும் தெரியாது!

அல்லி நகரத்தைச் சேர்ந்த பெரிய கருப்பத் தேவருக்கு ஒரு ஆசை. தன் பேரன்களில் துறுதுறு என்று இருப்பவன் பால்பாண்டியன். பேத்திகளில் ரொம்ப சூட்டிகை என்று சந்திரலீலாவைச் சொல்லலாம். இந்த இரண்டு பேருக்கும் திருமணம் செய்து வைக்க வேண்டும் என்பது தான் அவரது ஆசை. அந்த ஆசை நிறைவேறவும் செய்தது.

ஆனால், உற்றார், உறவினர்கள், 'பையன் சினிமாவுல அசிஸ்டெண்டா, டைரக்டரா இருக்கிறானே! கொஞ்சம் யோசிச்சு முடிவு செய்!' என்று பெண்ணின் பெற்றோருக்கு ஆலோசனை சொன்னபோது 'சந்திராவை யாருக்குக் கட்டி வைக்கிறோம்? அவ மாமா பையனுக்குத்தான்! அதனால, பையன் என்ன வேலை பார்த்தாலும் சரி!' என்று கண்டிஷனாய்ச் சொல்லி விட்டார்களாம்.

"அல்லி நகரத்தில் கல்யாணம். மூணு நாள் கழித்து சென்னை உட்லண்ட்ஸில் வரவேற்பு. இளையராஜா கச்சேரி! எஸ்.பி. பாலசுப்ரமணியம், மலேசியா வாசுதேவன் எல்லாரும் பாடினாங்க. கிராம வாழ்க்கையிலிருந்து முற்றிலும் மாறுபட்ட, ஆனால் அதே சமயம் அத்தனை வசதியில்லாத பட்டண வாழ்க்கையை நான் ஆரம்பித்தேன்" என்கிறார் சந்திரலீலா.

"அந்த பால்பாண்டியன், பாரதிராஜாவாகி, இயக்குனர் இமயமாகி நிற்கிறபோது, எப்படி உணருகிறீர்கள்?"

"வாழ்க்கை இப்போது யந்திரகதியாகி விட்டது. வசதிக்குறைவான ஆரம்ப நாட்களில், நாங்கள் இரண்டு பேருமாய் பீச்சுக்குப் போய் வந்த சந்தோஷமும், மவுண்ட் ரோடு தியேட்டர்களில் இரவு இரண்டாம் காட்சி சினிமா பார்த்து விட்டு, அங்கிருந்து, மந்தைவெளியில் இருந்த வீட்டுக்குக் காற்று வாங்கியபடி, ஜாலியாகக் கை கோத்து நடந்த நாட்களை மறக்க முடியுமா?" என்று பழைய நாட்களுக்குத் தன் நினைவுகளை ரீவைண்டு செய்கிறார்.

"பள்ளிப்படிப்பு உசிலம்பட்டியில். அதன் பின் திருச்சி ஹோலி கிராஸ் கல்லூரியில், பியூசி. முடித்துவிட்டு, பிஎஸ்ஸி முதல் வருடம் சேர்ந்தேன். அத்தோடு படிப்புக்கு முற்றுப் புள்ளி!"

ஏன்?

"கல்யாணம்தான். அதற்கு முன்பு, நிச்சயதார்த்தம் நடந்தது. வழக்கமாக, நிச்சயதார்த்தத்தின்போது, மாப்பிள்ளை வருவது வழக்க

பில்லை. ஆனால் இவர் திடுமென்று வந்து விட்டார். அது மட்டுமில்லை. என்னோடு தனியாய்ப் பேச வேண்டும் என்று சொன்னார். எனக்கு லேசாக உதற ஆரம்பித்து விட்டது. அவர் என்ன கேட்டார். நான் என்ன பதில் சொன்னேன் என்பது எனக்கு நினைவில்லை. ஆனால், இவர் இப்போதுகூட, 'அன்னிக்கு ஒரு மாதிரி லேசா வெட்கப்பட்டு, என்னை ஏமாத்திட்ட! நானும் ஒரு மயக்கத்துல இருந்திட்டேன்!' என்று சொல்லி, இண்டல் செய்வார்.

"இன்னும் கொஞ்சம் நினைவுகளை ரீவைண்ட் செய்யுங்களேன்!"

"அல்லி நகரத்தில், கீரைக்கல் தெரு என்று ஒரு தெரு. அங்கே பகலிலும், இரவிலும் கீரைக் கட்டுகள் விற்பனை நடக்கும். அந்தத் தெருவில் எதிரெதிர் வீடுகள் எங்களுடையது. எனக்கும், அவருக்கும் பத்து வயசு வித்தியாசம். என் கூடப் பிறந்தவர்கள். இரண்டு சகோதரர்கள்; இரண்டு சகோதரிகள். நாங்கள் விளையாடுவதற்காக, அவர் வீட்டுக்குள் போனால், 'இங்கே என்ன வேலை? போங்கள் உங்கள் வீட்டுக்கு' என்று மிரட்டி அனுப்பி விடுவார்.

"கல்லூரியில் கூடப் படித்தவர்கள் யாருடனாவது, இன்னும் டச் இருக்கிறதா?"

"ஓ! இந்திராணி என்று ஒரு சிநேகிதி. திருவல்லிக்கேணியில் இப்போது இருக்கிறார். மதுரையைச் சேர்ந்தவர்கள் தமயந்தி, லட்சுமி இரண்டு பேரும். இவர் டைரக்டராகிய பின், என் புகைப்படமும், பேட்டியும் ஒருதடவை ஒரு பத்திரிகையில் வெளியானதைப் பார்த்து விட்டு, சிநேகிதிகள் டெலிபோன் பண்ணினார்கள். பழைய சிநேகிதிகளுடன் மீண்டும் பேசின சந்தோஷம் எனக்கு. சினிமா டைரக்டர் மனைவியான பின்பும், பந்தா இல்லாமல் பழைய மாதிரியே நான் பழகினதில் அவர்களுக்கு மகிழ்ச்சி. சிநேகம் இன்னும் தொடர்கிறது.

"முதல் பையன் மனோஜ் பிறந்த பின்தான் இவருக்கு டைரக்ஷன் வாய்ப்பு கிடைத்தது. முதல் பிரசவம் ரொம்ப ரிஸ்க் ஆகிவிட்டது. 'மெட்ராசில்தான் டெலிவரி வைத்துக் கொள்ள வேண்டும். தேனியில் அத்தனை வசதியில்லை; நான் இவளை அனுப்ப மாட்டேன்; என் கூடத்தான் இருக்க வேண்டும்!' என்றார் இவர். எனக்கோ உடம்பு ரொம்ப பலவீனமாகி விட்டது. கூட இருந்த என் அம்மா, 'ஒண்டியாய் இங்கே இவளைப் பார்த்துக் கொள்ள கஷ்டமாய் இருக்கிறது. நான் ஊருக்கு அழைத்துக் கொண்டு போகிறேன்!' என்றார். கடைசியில், பிரிய மனமில்லாமல் ஊருக்கு அனுப்பி வைத்தார். ஊருக்குப் போனால், டாக்டர் பரிசோதித்து விட்டு, மஞ்சள் காமாலையின் ஆரம்ப அறிகுறிகள் இருப்பதாய்ச் சொன்னதும் பதறி விட்டேன். போதாக் குறைக்கு ஏழாவது மாதத்திலேயே மனோஜ் பிறந்து விட்டான்.

"அதே போல, இரண்டாவது குழந்தை பிறந்த போதும், சிக்கலாகி விட்டது. இவர் டென்ஷனுடன் மூகாம்பிகையை வேண்டிக் கொண்டே, 'குழந்தை நல்லபடியாய்ப் பிறந்தால் உன் பெயரையே வைக்கிறேன்' என்று நேர்ந்து கொண்டார். (அவர் டென்ஷனில் ஊதித் தள்ளிய சிகரெட் எண்ணிலடங்காது என்கிறார்கள்) அதன்படி, பெண்ணுக்கு ஜனனி ஐஸ்வர்யா என்று பெயர் சூட்டினோம். இப்போது பிளஸ் டூ படிக்கிறாள்."

"எப்படி பொழுது போகிறது?"

"எப்படிப் பொழுது போகிறதா? பொழுது போதவில்லை. மொத்த வீட்டு நிர்வாகமும் நான்தான். பசங்கள் படிப்புக்கும் நான்தான் பொறுப்பு. (அட்மிஷனில் தொடங்கி புரோகிரஸ் ரிப்போர்டில் கையெழுத்து போடுகிற வரை) இவங்க என்ன கிளாஸ் என்பதுகூட அவருக்குத் தெரியாது. (அட! தேசிய விருதை விஞ்சும் விருது மனைவியிடமிருந்து)

"டைரக்டர் என்ற முறையில் அவருக்கு ஏதாவது உதவி உண்டா உங்கள் பக்கமிருந்து?"

"ம். குடும்பப் பொறுப்புகள் எதுவும் இல்லாமல், அவரை ஃப்ரீயாக இருக்கச் செய்கிறேனே, அதைவிட பெரிய உதவி இருக்க முடியுமா?"

அவரது படங்களின் முதல் பிரதியைப் பார்த்துவிட்டு, கருத்துச் சொல்லுவீர்களா?"

"உண்டு. ஆனால் முதல் படமான பதினாறு வயதினிலே பார்த்த அனுபவத்தை மறக்க முடியாது. கிளைமாக்ஸ் பார்த்து விட்டு, தேம்பித் தேம்பி அழுதேன். படம் எப்படி? என்று அவர் கேட்க, 'என்னால் பேச முடியவில்லை' என்று அழுதுகொண்டே சொன்னேன். ஆனாலும் அவரது படங்களில் என்னைக் கவர்ந்த டாப் மூன்று: காதல் ஓவியம், முதல் மரியாதை, என் உயிர்த் தோழன்."

திருமதி. பாரதி ராஜாவைக் கவர்ந்த டாப் இரு டீவி நிகழ்ச்சிகள்: விசுவின் அரட்டை அரங்கம், ஏவி. ரமணனின் சப்த ஸ்வரங்கள்!

சந்திப்பு: **பாரதி மௌலி,**
படங்கள்: **யோகா**



**— திருமதி. சந்திரலீலா பாரதிராஜா**



# கரண்ட் பில்லைக் கட்டுப்படுத்தலாம்!

**மின் செலவைக் குறைப்பது எப்படி? நாட்டுக்கும் பயன்படக் கூடிய சில வீட்டுக் குறிப்புகள்:**

1. சூரிய வெளிச்சத்துக்கு ஈடான ஓர் ஒளி உண்டா? வெளியே சூரியன் தகதகத்துக் கொண்டிருக்கும்போதே உள்ளே லைட்டைப் போட்டுக் கொள்வதா? போதிய சூரிய ஒளி உள்ளே நுழையும்விதத்தில் அறை கட்டப் பட்டிருப்பது நல்லது. போதிய ஜன்னல்கள் தேவையான கோணத்தில் அமைந்திருப்பது காற்றோட்டத்துக்கு வழி வகுக்கும். சொந்த வீடு என்றால் இது போன்ற சில சிறு மாறுதல்களைச் செய்து, அதிக இயற்கை வெளிச்சத்தை அறைக்குள் பாய விடுங்கள். ஃபிளாட் வாங்குபவர்களும் பார்த்து வாங்குவது அவசியம்.

2. வெளிர் நிறங்களில் சுவருக்குப் பெயிண்ட் அடித்தால், வெளிச்சத்தை அதிகம் பிரதிபலிக்கும். அப்போது குறைவான சக்தி கொண்ட பல்பே அந்த அறைக்குப் போதும். அழுத்தமான வண்ணம் என்றால், தன் மீது படும் ஒளியில் கணிசமான பகுதியை தானே விழுங்கிக் கொள்ளும்.

3. ஜன்னலுக்கு வண்ணக் கண்ணாடிகள் வேண்டாம். அடர்ந்த மங்கலான வெள்ளைக் கண்ணாடியும் வேண்டாம். தெளிவான (ப்ளெய்ன்) கண்ணாடிகள் அதிக வெளிச்சத்தை உள்ளே அனுப்பும். ஜன்னல் கண்ணாடியின் மீது படியும் தூசியை அவ்வப்போது துடைத்து விடுங்கள்.

4. ஓர் அறைக்குள் நுழைந்ததும் லைட், மின்விசிறி ஆகிய இரண்டு ஸ்விட்சுகளையும் ஆன் செய்து விடுவது பலருக்கு வழக்கம். ஜன்னலைத் திறந்தால் இயற்கைக் காற்றோட்டம் வரும் என்றால் மின்விசிறி தேவையில்லையே.

5. வழக்கமாகப் புழக்கத்தில் இருந்து வரும் ரெகுலேட்டர்களைப் பொறுத்தவரை மின்விசிறியை எவ்வளவு வேகமாகச் சுற்ற விட்டாலும் ஒரே அளவு மின்சாரம்தான் செலவாகும். ஆனால் சமீபகாலமாக அறிமுகமாகியுள்ள எலக்ட்ரானிக் ரெகுலேட்டர்களைப் பயன்படுத்தினால் மின்விசிறியின் வேகத்துக்கு ஏற்ற மாதிரிதான் மின்சாரம் செலவழியும்.

6. இருட்டான அறைக்குள் நுழையும் போது விளக்கைப் போடும் கரிசனத்தில் பாதியைக் கூட, அறையை விட்டு வெளியேறும்போது அதை ஆஃப் செய்ய வேண்டும் என்பதில் காண்பிக்க மாட்டார்கள் - முக்கியமாக சிறுவர் சிறுமியர். எனவே கண்காணிப்பு தேவை.

7. சில பொருள்களின் மீது அதிக கண்காணிப்பு இருந்தால் மின்செலவை அதிகம் குறைக்கலாம். ட்யூப் லைட், மின் விசிறி, டீ.வி, ஃபிரிட்ஜ், ஏசி இவற்றுக்கான மின் சாரச் செலவு ஏறுமுகத்தில் என்பதை நினைவில் கொள்ளவும்.

8. வாங்கும்போதே அறையின் அளவுக்கேற்ற மின்விசிறியை வாங்குங்கள். தானாக டீ-ஃப்ராஸ்ட் ஆகும் ஃபிரிட்ஜ்களுக்கு அதிக மின்சாரம் தேவை. ஏ.சி பொருத்துபவர்கள், அறைக்கேற்ற சரியான மாடலைத் தேர்வு செய்யுங்கள். அடிக்கடி அணைத்துப் போட்டால் ஏ.சியால் அதிக மின் செலவு.

9. சில பகுதிகளில் வோல்டேஜ் சப்ளை குறைவாக இருக்கும். "சாயந்திரம் ஐந்து மணிக்கே ஆன் செய்தால்தான் ட்யூப்லைட் எரியும்" என்பார்கள். இப்படி மின்சாரத்தை வேஸ்ட் செய்வதைவிட ட்யூப்லைட்களுக்கான பூஸ்டர்கள் வந்து விட்டன. அவற்றைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

10. தேவைக்கதிகமான தண்ணீரைப் பயன்படுத்துவதுகூட (மோட்டார்) அதிக மின் செலவுதான். இதுபோன்ற ஓட்டைகளை அடைக்க முயற்சி செய்யுங்கள்.

— ஜி.எஸ்.எஸ்

**பத்துக் கட்டளைகள்**

**கோவை மாநகராட்சி பல ஆரம்பப் பள்ளிகளை மூடிவிட தீர்மானம் நிறைவேற்றியுள்ளது. ஏன்? உண்மை நிலை அறிய சம்பந்தப்பட்ட பள்ளிகளை அலசப் புறப்பட்டோம்...**

# பள்ளிகளை மூடும் கோவை மாநகராட்சி!

**எஸ்**.எஸ்.எல்.ஸி., ப்ளஸ்டூவில் தேறும் முதல் மூன்று மாணவ-மாணவி யருக்கு கோல்டு மெடல்கள், அபரிமித மார்க்குகள் பெறுபவருக்கு கேஷ் அவார்டு + மெரிட் சர்டிபிகேட், பொதுத் தேர்வுகளில் அதிக விழுக்காடு காட்டின பள்ளி ஆசிரியர் களுக்குப் பாராட்டுப் பத்திரங்கள்... என் றெல்லாம் கல்விக்கு முக்கியத்துவம் கொடுப் பதாக மார்தட்டிக் கொள்ளும் கோவை மாநகராட்சி, தற்போது மாநகரின் மையப் பகுதியில் உள்ள ஆறு ஆரம்பப் பள்ளிகளை மூடிவிட முடிவு செய்துள்ளது.

ஏற்கெனவே ஒரு பள்ளிக் கட்டடம் மூடப்பட்டு (வேறு இடத்தில் தற்போது அது செயல்படுகிறது) கல்யாண மண்டபத்திற்கு அடிக்கல் நாட்டியிருக்கும் சூழலில், இந்தப் பள்ளிகளையும் அதேபோல் வேறு பள்ளிகளுடன் இணைத்து விட்டு அந்த இடங்களிலும் கல்யாண மண்டபம், வணிக வளாகம் கட்ட ஏற்பாடுகள் நடப்பதாகவும், அவை ஆளுங்கட்சி ஆட்கள் பயன் பெறும் வகையில் டெண்டர் விடுவதற்கு மறைமுகச் செயல்பாடுகள் நடப்ப தாகவும் அரசல் புரசலான தகவல்கள்...

இந்தப் பள்ளிகளில் மாணவர்களின் எண்ணிக்கை குறைவு என்பது இப் பள்ளிகள் வேறு பள்ளிகளுடன் இணைப் பதற்கு மாமன்றத் தீர்மானத்தில் கூறப்பட் டுள்ள காரணம்.

உண்மையிலேயே அப்பள்ளிகளில் மாணவர் -எண்ணிக்கை குறைவுதானா? அதற்கு என்ன காரணம்? சர்வே செய்ய சம் பந்தப்பட்ட பள்ளிகளுக்கே விசிட் அடித் தோம்!

கோவை வெரைட்டி ஹால் ரோடு மாநகராட்சி ஆரம்பப் பள்ளி 1968-ல் தலித் குடியிருப்புகளுக்காகவே (சுற்றுப்புறத்தில் அம் மக்கள் ஆயிரக் கணக்கில்) கட்டப்பட் டது என சொல்லப்படுகிறது. பள்ளியின் மொத்த எண்ணிக்கை 105 குழந்தைகள் என் றாலும் வந்திருந்த குழந்தைகள் 20-30தான். பெரிய கட்டடத்தில் இரண்டு அறைகளில் ஐந்து வகுப்புகள். இரண்டு ஆசிரியர்கள். ஒரு சத்துணவு ஆயா.

சுற்றிலும் ஒரே அசுங்கை. மூக்கைப் பிடித் துக் கொள்ள வேண்டிய நிலை. அந்தப் பகுதி மக்களின் கழிப்பிடம் பள்ளிச் சுற்றுப்புறம் மட்டுமே. வெள்ளையடித்தே பத்து வருடங் களுக்கு மேலாகி விட்டதாய்ப் பேச்சு. 1972 லிருந்தே பள்ளிக் குழந்தைகளின் எண்ணிக்கை 150-க்கு மேல் இருந்து வந் திருக்கிறது. இப்போதெல் லாம் சத்துணவுக்கு மட்டும் ஆஜர். மதியத்திற்கு மேல் அனைவரும் மட்டம்.

**மா**ற்றப்படுவதாகக் கூறப்படும் இன் னொரு மாநகராட்சிப் பள்ளி யாதவர் வீதிப் பள்ளி. 1922-ல் கட்டப்பட்ட புராதனக் கட்டடம் இப்போதோ எப் போதோ என்று விழுந்து விடும் நிலையில்! தினம்தோறும் செத்து விழுந்து நாற்ற



• இடிந்து விழும் நிலையில் யாதவர் வீதி ஆரம்பப்பள்ளி

மெடுக்கும் பெருச்சாளிகளைக் கண்டு பிடிக்கவே ஆசிரியர்களுக்கும், மாணவக் குழந்தைகளுக்கும் நேரம் சரியாயிருக்கும் என்கிறார்கள் சுற்றுப்புற பெற்றோர்கள். இரண்டாண்டுகளுக்கு முன்பு கூட 200 பேருக்கு மேல் படித்த பள்ளியில் இப்போது 30, 40 பேர் மட்டுமே. இதற்கும் பத்து வருடங்களுக்கு மேலாக பராமரிப்புக்கு எழுதி எழுதி அலுத்துப் போய் விட்டனராம் ஆசிரியர்கள்.

இவற்றைப் போலவேதான் காலி செய்யப்படும் மற்ற பள்ளிகளின் நிலையும்.

'இப்பகுதி மக்கள் வசதி படைத்தவர்களாகி விட்டதால் இங்கிலீஷ் மீடியம் பள்ளிகளுக்குக் குழந்தைகளை அனுப்ப ஆரம்பித்துவிட்டனர். ஆதலால் அரசுப் பள்ளிகளுக்கு மாணவர் வருகை குறைந்து விட்டது' என்பது அதிகாரிகளின் விளக்கம். "ஆனால் உண்மை அதுவல்ல" என்கிறார் இப் பகுதி கவுன்சிலர் ஹேமா ஜெயசீலன்.


• ஹேமா ஜெயசீலன்

''உள்ளாட்சி அமைப்புகள் செயல்பட ஆரம்பித்த இந்த முதல் கவுன்சில் கூட்டத்திலேயே இது பற்றிப் பேசியுள்ளேன். மாநகராட்சி பள்ளிகளில் மாணவர் எண்ணிக்கையைக் கூட்டணும்ன்னா... தரமா நடத்தணும்; நம் பள்ளிகளிலும் எல்.கே.ஜி., யு.கே.ஜி. திட்டத்தைக் கொண்டு வரணும்ன்னு சொன்னேன். இவங்க யாரும் கண்டுக்கல. ஆனா சென்னை மாநகராட்சி இப்ப அதை நடைமுறையில கொண்டு வந்திடுச்சு. சரி, இப்ப இவங்க அதைப் பார்த்தாவது இங்கே கொண்டு வந்திருக்கலாம்ல? ஏன் கொண்டு வரல...? ஏற்கெனவே சென்றாண்டு மூடப்பட்ட தர்மராஜா கோவில் வீதி ஆரம்பப் பள்ளியின் கதி என்ன? கல்யாண மண்டபம்ன்னு அடிக்கல் நாட்டியிருக்காங்க. அந்த ஏரியாவுலயே ஏராள கல்யாண மண்டபங்கள். (நாம் விசாரித்த அளவில் 12) சரி, அந்தப் பள்ளியைக் கொண்டு போய் இணைச்ச கெம்பட்டி காலனி பள்ளிக் கூடத்தில் மட்டும் அடிப்படை வசதிகளைச் செஞ்சு கொடுத்திருக்காங்களா? அதுக்குள்ளேயே இன்னொரு ஆரம்பப் பள்ளி, ஒரு உயர் நிலைப் பள்ளி!

''பள்ளிக்கூடத்துல மாணவர் எண்ணிக்கை குறைஞ்சதுக்குப் பரிகாரம் தேடாம, அதை வேற பள்ளிகளோட இணைச்சுட்டு ஷாப்பிங் காம்ப்ளக்ஸ் கட்டறேன். கல்யாண மண்டபம் கட்டறேன்ங்கறது படு அபத்தம். காமராஜர் அன்னிக்கு நம்ம பிள்ளைக படிக்கணும் படிக்கணும்னு பள்ளிக் கூடங்களா திறந்தார். இப்ப அதை மூடறதுக்கு காமராஜர் பெயரைச் சொல்ற ஒரு கட்சி (மேயர் த.மா.க) முடிவெடுக்கலாமா?'' என்றார் உணர்ச்சி வசப்பட்டு.

இது குறித்து கடைசியில் மேயர் வி. கோபாலகிருஷ்ணனை அணுகியபோது, மாநகராட்சி பள்ளிகளுக்கும் மாணவர்களுக்கும் மாநகராட்சி செய்து வரும் நல்ல காரியங்களைப் பட்டியலிட்டார்.


• மேயர் கோபாலகிருஷ்ணன்

''நீங்கள் ஆயிரம் சமாதானம் கூறினாலும் கல்விக்கென ஒதுக்கப்பட்ட எந்த ஒரு சதுர அடி நிலமும் வேறொரு உபயோகத்திற்குப் பயன்படுத்தலாமா?' என்றோம் நாம்.

"நீங்க சொல்ற பள்ளிக்கூடங்களில் குழந்தைகளே இல்லை. எல்லோருமே பிரைவேட் ஸ்கூல்களுக்குப் போயிட்டாங்க. அப்படியே இருக்கிற குழந்தைகளை விடலாம்ன்னா கட்டடங்களைச் சரி செய்ய வேண்டியிருக்கு. குழந்தைகளை அங்கே வச்சுட்டே அதைச் சரி செய்து விட முடியுமா? வேறொரு இடத்திற்கு மாற்றித்தானே ஆகணும்?''

"அப்போ... கட்டடங்கள் சரி செய்யப்பட்டவுடன் மறுபடியும் பள்ளிகளைத் திறப்பீர்களா...?"

"ஏழை எளிய மக்கள் பயன்பட மாதிரி ஏற்பாடுகள் செய்யப்படும்!"

"அதாவது கல்யாண மண்டபங்களாக, ஷாப்பிங் காம்ப்ளக்ஸ்களாக... இல்லையா?"

''அதிலென்ன தப்பு? இன்றைக்குக் கல்யாண மண்டபங்களில் ஏழை எளியவர்கள் பயன்படுத்தற அளவிலா கட்டணம் வசூலிக்கறாங்க? அதை மாநகராட்சி செய்து 500, 1000க்கு விடுவதில் என்ன தப்பு? மாநகராட்சி கலையரங்கத்தையே 2000 ரூபாய்க்குத்தான் விடறோம்!'' என்றார் மேயர். ●

கட்டுரை, படங்கள்:
**கா.சு. வேலாயுதன்**

# சுதந்திரதின
# நல் வாழ்த்துகள்!

**HMV வழங்கும் தேசபக்திப்பாடல்களின்**
**ஒலி நாடாக்கள்**









**பாரதியார் பாடல்கள்**









RPG




**அனைத்து கேஸட் கடைகளிலும் கிடைக்கும்**




# அப்துல் கரீமுக்குத் துணை நிற்கும் யோக நரசிம்மர்!

திருவல்லிக்கேணி பார்த்தசாரதி பெருமாள் சன்னதிக்குப் பின்புறம் உள்ள யோக நரஸிம்மர் சன்னதியை ஒட்டி உள்ள நான்கைந்து கடைகளில் அப்துல் கரீமின் கடையும் ஒன்று. பரம்பரை, பரம்பரையாக எலும்பு சம்பந்தப்பட்ட சிகிச்சை அளிக்கும் குடும்பம் அவருடையது. 'King of bone setters' என்று கடையின் பெயர்ப் பலகை சொல்கிறது. பச்சிலை வைத்தியம் செய்யும் நூற்றுக் கணக்கான மருத்துவர்களில் அப்துல் கரீமும் ஒருவர் என்று அலட்சியமாக நாம் ஒதுக்கித் தள்ள முடியாத வண்ணம்; அவரது கடை (consulting room?) பெயர்ப் பலகையின் மூலையில், 'யோக நரஸிம்மர் துணை' என்று சிறிதாக எழுதப்பட்டுள்ள வாசகம் நம்மை யோசிக்க வைக்கிறது!

ஆம்! அப்துல் கரீமுக்கு யோக நரஸிம்மர் துணையாக நிற்கிறார். விழிகள் கொஞ்சம் வியப்பால் விரிய, கரீமிடம் ஆச்சர்யத்தோடு பேசினோம்.

"எல்லாம் ஒரே கடவுள்தான். அல்லா, யேசு, ராமர், கிருஷ்ணர்... நமக்கு எல்லாமே ஒண்ணுதான் ஸார்!" என்று சொல்கிறார் கரீம். சுமார் ஏழு வருடங்களுக்கு முன்னர் வைத்தியம் பார்க்க இந்தக் கடைக்கு வந்த போது, கரீமிடம் எலும்பு முறிவு சிகிச்சைக்காக ஒரு வைணவப் பெரியவர் வந்திருக்கிறார். கரீமின் கை வண்ணத்தில் குணமாகி விட்டது. அந்தப் பெரியவர் காலப் போக்கில் கரீமின் நண்பராக, வழிகாட்டியாக, தத்துவப் பரிமாற்றம் செய்யும் தோழராக ஆகி விட்டார்.

"டேய்... யோக நரஸிம்மரே ஒரு வைத்தியர்தான். அவரை வேண்டிக்கிட்டு எந்தச் சிகிச்சை செய்தாலும் சக்ஸஸ்தான்!" என்று கரீமின் மனத்தில் எம்மதமும் சம்மதம் என்கிற விதையை விதைத்தவர் அவர்தான்.

கடையைத் திறந்ததும் முதலில் துவஜஸ்தம்பம் அருகில் போய் கைகூப்பி நின்றபடி நரஸிம்மரைத் 'தொழுதார்' கரீம்.

"எப்படி வணங்கினீர்கள்?"

"எனக்கு இன்றுவரையிலும் எந்த சமஸ்கிருத ஸ்லோகமும் தெரியாது. 'லா இலாஹா இல்லல்லாஹு...' என்று சொல்லித்தான் நரஸிம்மரை வணங்கினேன். எந்தச் சிக்கலான எலும்பு முறிவு சிகிச்சை என்றாலும் ஒரு மண்டலம் சன்னதியைச் சுற்றி வருவதாக வேண்டிக் கொண்டு, சிகிச்சையைத் தொடர்ந்தால் வெற்றிதான்!" என்று சொல்லும் கரீமின் கடையில், பார்த்தசாரதி பெருமாள் படத்தோடு விசிறி சாமியாரின் படமும் இருக்கிறது.

காலையில் கடைக்கு வந்ததும் ஊதுவத்தி ஏற்றி வைத்து விட்டுத் தவறாமல் துவஜஸ்தம்பம் அருகில் நின்று நரஸிம்மரை வணங்கி விட்டுத்தான் தொழிலைத் துவங்குகிறார். சில சமயங்களில் உள்ளே போய் துளசி தீர்த்தம் பெற்றுக் கொள்கிறார். வாரத்திற்கு ஒரு முறை அப்படியே பார்த்தசாரதி பெருமாளையும் தாயாரையும் 'சேவித்து'விட்டு வருகிறார் கரீம். வைகுண்ட ஏகாதசி சமயத்தில் சொர்க்க வாசல் சேவையையும் விடுவ



# தி ட்ரூமேன் ஷோ

**ஒ**ரு தீவில் வசிக்கின்ற இளைஞனின் பிறப்பு முதல் அவனது முப்பது வயது வரையான அன்றாட நடவடிக்கைகள் ஒவ்வொன்றும் அவனுக்குத் தெரியாமல் படம் பிடிக்கப்பட்டு, 24 மணிநேர டி.வி. ஷோவாக ஒளிபரப்பப்படுகிறது. அவனைத் தவிர அந்த தீவிலிருப்பவர்கள்- இவ்வளவு ஏன் அவன் குடும்பம் உட்பட அத்தனைபேரும் அவனுடன் நடிக்க வந்தவர்கள்.

தினமும் ரோட்டில் அவனுடன் கைகுலுக்குபவர்களுக்கு அவன் ஒரு 'ஸ்டார்'. ஆனால் அவனுக்கு அவர்கள் வெறும் நண்பர்கள். திடீரென்று தன் போட்டோ நாளிதழில் வருகிறபோதுதான் இதுநாள் வரை தான் மறைமுகமாக எவராலோ கண்காணிக்கப்படுகிறோம் என்று தெரியவருகிறது. தான் டாய்லெட் போவதிலிருந்து படுக்கப்போவதுவரை கவனிக்கப்படுகிறோம் என்றால் யாருக்குத்தான் சலிப்பு வராது. நொந்துபோய் தீவைவிட்டே ஓடிப்போக முயற்சி செய்கிறான். அந்த டி.வி. தயாரிப்பாளரே அவனை சமாதானப்படுத்தித் தடுக்கிறார். கதாநாயகன் கேர்ரி.

பட்டனைத் தட்டியதும் இரவு பகலாகிறது. கடலலைகள் கொந்தளிக்கிறது. நம்ப முடியாததாய் இருப்பினும் காட்சிகள் பிரமிப்பூட்டுகின்றன.

திடீர் திடீரென்று தண்ணீரைப் பார்க்கிறபோது கடலில் விழுந்து இறந்து போன தன் அப்பா ஞாபகம் வந்து தவிக்கும் கேர்ரி... பல வருடங்களுக்குப்பின் தன் அப்பாவை உயிருடன் பார்க்க தவித்து ஓடும் காட்சி... ஆக்ஷனுக்குள் ஆர்ட்.

'தி ட்ரூமேன் ஷோவை படம் பார்த்து முடிப்பவர்களுக்கு ஒருநாவலை தொடர்ந்து படித்து முடிக்கும் திருப்தி ஏற்பட்டால் அதுவே எனக்கு வெற்றி!' என்கிறார் இயக்குனர் பீட்டர் வெய்ர். அந்த வகையில் வெற்றிதான்.

**– என். ரமேஷ்**

தில்லை. சில சமயங்களில் தாயார் சன்னதியில் இருந்து மஞ்சள்காப்பும் பெற்றுக் கொள்கிறார்.

கோயிலின் உள்ளே இருக்கும் பட்டாச்சார்யார்கள் தோஸ்துகளாகிவிட கடையைத் தேடி துளசியும் தேங்காய் மூடிகளும் வருகின்றன. யோக நரஸிம்மரின் மீது ப்ரீதி கொண்டிருந்தாலும், வெள்ளிக்கிழமை மதியம் நமாஸையும் தவற விடுவதில்லை கரீம்.

"இந்த ஏரியா வாசிகளின் நல்லெண்ணத்தைப் பெறத்தான் இது போலவெல்லாம் நடந்து கொள்கிறீர்களா?" என்று கொஞ்சம் தர்ம சங்கடமான கேள்வியை நாம் கேட்டுவிட்ட போதும் கரீமுக்குக் கோபமே வரவில்லை.

"என் மனசுக்கு ஒத்துப் போற விஷயம் இது. நாலு பேருக்காகவோ அல்லது இதனால என் பிராக்டீஸ் வளருமுன்னோ இப்படி நான் வேஷம் போடல்ல!" என்று அமைதியாகப் பதில் சொல்லும் கரீம், தமது மனைவியையும், குழந்தைகளையும் தம்மைப் போலவே வழிபட வேண்டுமென்று வற்புறுத்துவதில்லை.

"உங்கள் மதத்தைச் சேர்ந்தவர்கள் உங்கள் நடத்தையைப் பற்றிக் கிண்டலடிக்கிறார்களா?"

"கிடையாது... எங்க ஆளுங்களும் நிறைய பேர் என்னிடம் சிகிச்சைக்கு வர்றாங்க. இந்த சாமி படங்களைப் பார்த்துக் கொஞ்சம் ஆச்சர்யப்பட்டுப் போவாங்களே தவிர, எந்த கமெண்ட்ஸும் சொல்ல மாட்டாங்க!" என்று சொல்லும் கரீமின் ஒரே வருத்தம் என்னவென்றால், எலும்பு முறிவால் பாதிக்கப் பட்டவர்கள்... பலவிதமான சிகிச்சை எடுத்துக் கொண்டும் குணமாகாமல் போகும் போது – கடைசி கட்டமாக இவரிடம் வருவதுதான்.

"ஆனாலும் நமக்கு நரஸிம்மர் துணை இருப்பதால் குணமாக்கி அனுப்பிச்சுடுவேன்" என்று பெருமிதத்துடன் சொல்கிறார்.

"தினசரி நரஸிம்மர் தரிசனத்தோடு உங்களுக்கு அவரிடம் வேண்டுதலும் உண்டா?"

"யோகத்தில் இருப்பவர் அவர். ரொம்ப தொந்தரவு செய்யக் கூடாது. அப்படிச் செய்தால் உக்கிரமாகி விடுவார்!" என்று பக்தியுடன் சொல்கிறார் கரீம்.

அயோத்தி, கோயம்புத்தூர் குண்டு வெடிப்பு, அல் உம்மா... என்றெல்லாம் கேள்வி கேட்கத் துவங்கினால் தலைக்கு மேல் கை கூப்புகிறார்.

"நமக்கு அதெல்லாம் வேண்டாம் ஸார். அல்லா, யேசு, ராமர், கிருஷ்ணர் என்று நமக்கெல்லாம் ஒண்ணுதான் ஸார்" என்று முதலில் சொன்னதை மீண்டும் ரிபீட் செய்கிறார்.

சந்திப்பு : **ஸ்ரீநிவாசன்**
படம் : **யோகா**

# எஸ்.வி. சேகரின் புது சானல்!



**சமீபத்தில் நடிகர் எஸ்.வி. சேகர் தனியார் டீ.வி. சானல் ஒன்றை ஆரம்பிக்கப் போகிறார் என்று ஒரு செய்தி. பல தனியார் சானல்கள் விளம்பரமின்றித் தவித்துக் கொண்டிருக்கையில், இத்தனை துணிச்சலோடு ஒரு புது சானலா? எஸ்.வி. சேகரையே கேட்டோம்.**

● ***திடீரென்று தனியார் டீ.வி. சானல் ஆரம்பிக்கும் எண்ணம் எப்படி வந்தது?***

○ இப்போது தமிழிலுள்ள எல்லா தனியார் சானல்களிலும் சினிமா சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகள்தானே வருகின்றன. சினிமா இல்லாத ஒரு சானல் வேண்டுமென்றுதான் இதை ஆரம்பிக்கப் போகிறோம். டீ.வி. ஒரு பொழுதுபோக்குச் சாதனமல்ல. அது எல்லாவிதத்திலும் உபயோகப்படுகிற மாதிரி கொண்டு வர வேண்டும்.

இது செயற்கைக்கோள் இணைப்பு சானல் அல்ல. வெறும் கேபிள் இணைப்புதான். அதுவும் சென்னை நகருக்கு மட்டும் தான். 'எஸ்.வி. கேபிள் சிட்டி' என்றுதான் பெயரே வைத்திருக் கிறோம். நிகழ்ச்சிகள், பார்ப்பவர்களுக்கு உபயோகப்படுகிற மாதிரி அதாவது பலமொழிகள் கற்றுக் கொடுப்பது, கம்ப்யூட்டர் கற்றுக் கொடுப்பது, ஷாப்பிங் குறித்து, மருந்துகள் குறித்து, ரயில், விமான நேரங்களைப் பதினைந்து நிமிடத்திற்கொருமுறை ஒளிபரப்புவது என்று! முக்கியமாக சென்னை மாநகராட்சியின் பிரச்னைகள், டிராஃபிக் ஜாம் இதுபோல எந்த பிரச்னைகளையும் மக்கள் எங்களுக்குத் தொலைபேசி மூலம் தெரிவித்து தீர்வுகாணும்படியான நிகழ்ச்சிகள் ஒளிபரப்பாகும். எங்கள் அலுவலகம் 24 மணி நேர தொலை பேசித் தொடர்பு கொண்டதாக இருக்கும். எந்த நேரமும் மக்கள் எங்களோடு பேச முடியும். தற்போது ஒரு NRIயோடு சேர்ந்து இதை நடத்த விருக்கிறோம்.

● ***வியாபார ரீதியாக இது பற்றிச் சொல்லுங்கள்?***

○ இதை கேபிள் ஆப்பரேட்டர்களிடம் வாங்கும் சந்தா தொகையை நம்பித்தான் ஆரம்பிக்கிறோம். சென்னையிலேயே இரண்டு லட்சம் கேபிள் ஆப்பரேட்டர்கள் இருக் கிறார்கள். அவர்கள் மூலம் பத்து லட்சம் மக்களை எங்கள் சானலை பார்க்க வைக்க முடியும். ஆரம்பத்தில் கொஞ்சம் சுமாராக இருந் தாலும் சென்னையிலேயே இருக்கும் வியாபாரிகள் தங்கள் விளம்பரங்களை எங்களுக்குக் கண்டிப்பாகத் தர முன்வருவார்கள் என்று நம்புகிறோம்.

● ***பல தனியார் சானல்கள் எல்லாம் வியாபார ரீதியாகத் தாக்குப் பிடிக்க முடியாமல் மூடப்படும் அபாயத்தில், உங்கள் முயற்சி எவ்வளவு வெற்றி பெற முடியும்...?***

○ இப்போதுள்ள தனியார் சானல்கள் சலிப்பைத் தருவதற்கு முக்கிய காரணம் என்ன? அதில் வரும் நிகழ்ச்சிகள், சீரியல்கள் எல்லாமே பார்த்தீர்களானால் திரும்பத் திரும்ப ஒரே தயாரிப்பாளர்கள், ஒரே நடிகர்கள், ஒரே இயக்குனர்கள்... ஏன் டிடியையும் சேர்த்துத்தான் சொல்கிறேன். போதாததற்கு 'மெகா சீரியல்' வேறு. பின் எப்படி மக்கள் உற்சாகமாக அதைப் பார்ப்பார்கள்? அதைத் தொடர்ந்து விளம்பரதாரர்களும் டிடிமாதிரியே எடுக்க வேண்டிய அவசியம் இல்லையே. அவர்கள் வேறு நல்ல உபயோகப்படுகிற மாதிரியான நிகழ்ச்சிகளைத் தர லாமே!

ஆரம்பத்தில் சினிமா சம்பந் தப்பட்ட நிகழ்ச்சிகள் டிடியை விட ரசிக்கும்படி இருந்ததால் மக்கள் அதை ஏற்றுக் கொண்டார்கள். ஆனால் இப்போது சலிப்புத்தட்ட ஆரம்பித்து விட்டது. 'நண்பர்கள் வாரம், காவலர் வாரம்' என்று சினி மாவையே வேறுமாதிரி தருகிறார் கள். இன்னும் கொஞ்ச நாள் போனால் 'ஆ'னா வாரம், 'கா'னா வாரமென்று தருவார்கள் போல!

சிங்கப்பூரில் 24 மணிநேர தனியார் ரேடியோ இருக்கிறது. எவ்வளவு நல்ல நிகழ்ச்சிகள் தரு கிறார்கள் தெரியுமா!

— நாஞ்சில் ரமேஷ்




# வயாக்ரா: வரலாற்று

சமீபத்தில் அறிமுகப்படுத்தப்பட்ட மருந்துகளிலேயே அதிகம் பேசப்பட்டதும், அதிகம் விற்கப்பட்டதும் இந்த 'வயாக்ரா'தான். மார்ச் மாதம் அமெரிக்காவில் விற்பனைக்கு வந்தது. முதல் மூன்று மாதங்களில் மட்டும் இந்தச் சின்ன மாத்திரை சுமார் 400 மிலியன் டாலருக்கு விற்பனை ஆகியிருக்கிறது. (கிட்டத்தட்ட ஒன்றரை மிலியன் பிரிஸ்கிருப்ஷன்கள்!)

அமெரிக்கப் பன்னாட்டு மருந்து நிறுவனமான ஃபைசர், இந்த மருந்தைத் தயாரித்திருக்கிறது.

கண்டுபிடித்த விஞ்ஞானியின் பெயர் நிக்கலஸ் டெர்ரட். யு.கே.யில் உள்ள சாண்ட்விச் நகரிலுள்ள ஃபைசாரின் ஆராய்ச்சிக்கூடத்தில், 1991ல் கண்டுபிடித்தார். கண்டுபிடித்தது என்னவோ இதயத்துக்கு இரத்தத்தை எடுத்துச் செல்லும் இரத்தக் குழாய்களை விரிவடையச் செய்து, இரத்த ஓட்டத்தை அதிகப்படுத்த வேண்டும் என்ற நோக்கத்தில்தான்.

கண்டுபிடித்த மூன்று வருடங்களுக்கு அப்புறம்தான் ஆண்மைக் குறைவுக்கும் இந்த மருந்து சரியான நிவாரணி என்று பரிசோதனைகள் மூலம் தெரிந்தது.

இந்தக் கண்டுபிடிப்பில் டெர்ரட்டுக்கு உதவிய இன்னொரு விஞ்ஞானி பீட்டர் எல்லிஸ். சில்டனாஃபில் சிட்ரேட்தான் வயாக்ராவில் இருக்கும் முக்கிய உட்பொருள்.

டெர்ரட்டுக்கு வயது நாற்பதுதான் ஆகிறது. மூன்று பெண்கள், இரண்டு பிள்ளைகள். (எல்லாம் 'வயாக்ரா' கண்டுபிடிக்கறதுக்கு முன்னால தான்!) டெர்ரட்டின் மனைவி ஷீலா, "வயாக்ரா இவ்வளவு பரபரப்பாக உலகின் மூலை முடுக்கில் எல்லாம் பேசப்படுவதைக் கேட்க சுவாரசியமாகத்தான் இருக்கு. ஆனா இப்படி சென்சேஷனலாக இருப்பதுதான் வெட்கக்கேடு!" என்கிறார்.

வயாக்ரா, ஆண்மைக் குறைவுக்கு ஒரு சிகிச்சையாகத்தான் அளிக்கப்படுகிறதே யொழிய அது ஏதோ 'செக்ஸ் டானிக்' என்று எண்ணுவது தவறு. 'வயாக்ரா கதைகளும்' 'வயாக்ரா ஜோக்குகளும் இப்படியொரு தவறான எண்ணத்தைப் பரப்பி வருகின்றன.

# உண்மைகள்

ஜூன் மாத முதல் வாரத்தில், அமெரிக்க நகரம் சான் டீகோவில் யுரோலாஜிகல் (சிறுநீரகச் சிகிச்சை) நிபுணர்களின் வருடாந்தரக் கூட்டம் நடந்த போது, உலகம் முழுவதுமிருந்து டாக்டர்கள் வந்திருந்தார்கள். வழக்கமாக போர் அடித்துத் தூங்கி வழியும் இந்த மாநாட்டில், இந்த முறை 'வயாக்ரா' எல்லாரையும் உசுப்பி விட்டிருக்கிறது. ஸ்டால் போட்டிருந்த ஒரு அமெரிக்க மருந்து கம்பெனி, வெளிநாட்டு டாக்டர்களுக்கு இதை விற்றதற்காக, மாநாட்டுப் பந்தலுக்கு உள்ளேயே வரக் கூடாது என்று தடை உத்தரவு போட்டு விரட்டி விட்டார்கள்! ஓர் எகிப்து டாக்டர் மட்டும் பத்தாயிரம் டாலருக்கு வயாக்ரா வாங்கினாராம்! ஃபிரான்சில் 13 மாத்திரைகள் 500 டாலருக்கு விற்கிறார்களாம். கிழக்கு ஐரோப்பிய நாடுகளில் வயாக்ராவை அறிமுகப் படுத்துவது பற்றி, மருந்துகளின் தரத்தை மதிப்பீடு செய்யும் குழு இன்னும் முடிவு செய்யவில்லை.



• நிக்லஸ் டெர்ரட்

ஹார்ட்டுக்கு மாத்திரை சாப்பிடுபவர்கள் – குறிப்பாக நைட்ரோ கிளிசரின் சாப்பிடுகிறவர்கள் – வயாக்ரா' பக்கம் தலை வைத்துக் கூடப் படுக்கக் கூடாது என்று அமெரிக்க உணவு மருந்துகள் கட்டுப்பாட்டு அமைப்பு சொல்லி விட்டது. ஜெர்மானியர்கள் பலர் ஸ்விட்சர்லாந்து வந்து 'வயாக்ரா'வை வாங்கித் தள்ளுகிறார்கள்.

உடலுறவு நாட்டம் ஏற்படுகிறபோது, இந்த மருந்தில் உள்ள நைட்ரிக் ஆக்சைடு, தசைகளைத் தளர்த்தி உதவுகிறது. (ஆனால் பக்க விளைவுகளும் உண்டு. தலைவலி, வயிற்று வலி, வயிற்றுப் போக்கு, யுரினரி டிராக்ட் இன்ஃபெக்ஷன், இன்ன பிற...)

தங்கள் கடைகளில் தனியே 'வயாக்ரா நேரம்' என்றே ஒதுக்கி டெலிபோன் எண்ணையும் தனியே கொடுக்கிறார்கள் சில அமெரிக்க கெமிஸ்ட்டுகள்! சில பார்மசிகளில் வெயிட்டிங் லிஸ்ட் பாட்டுக்கு நீண்டு கொண்டே போகிறது!

மெடிகல் இன்ஷூரன்ஸ் கிளெய்ம்களில் 'வயாக்ரா' இருந்தால் நிராகரிக்கப்படுகிறது. 'இதை எல்லாமா கிளெய்மில் சேர்ப்பது?' என்று இன்ஷூரன்ஸ் கம்பெனிகள் கேட்கின்றன, காட்டமாக.

''வருகிற மூன்று வருடங்களில் மட்டும் 'வயாக்ரா' போன்ற மாத்திரைகளின் விற்பனை சுமார் ஆயிரம் கோடி ரூபாயைத் தாண்டி விடும்'' என்கிறார் லூபின் என்கிற மருந்து தயாரிப்பு நிறுவன அதிகாரி சங்க்ராம் மொகாந்தி.

ஜப்பானில் '99ல் வயாக்ராவை அறிமுகப்படுத்தப் போகிறது ஃபைசர்.

பெண்களுக்கான பிரத்தியேகமான 'வயாக்ரா' மாத்திரைகளும் வரப் போகின்றன!

இந்தியாவில் ஆர்க்கிட் பார்மா, சிப்லா, ரான்பாக்ஸி, டாக்டர் ரெட்டீஸ் லாப், டாரன்ட், லூபின், ஹெடரோ டிரக்ஸ் என்று பல இந்திய மருந்து கம்பெனிகள் வயாக்ராவுக்குப் போட்டி மருந்து தயாரிப்பில் முழு மூச்சாக இறங்கியிருக்கின்றன. ●

— சித்தார்த்

எழும்பூர் ஸ்டாப்பிங்கில் கூட்டத்தோடு கூட்டமாக, சுந்தரமூர்த்தியும் பிதுக்கப்பட்டார். கையைத் தூக்கி வைத்து, மேலிருந்த பஸ் கம்பியைப் பிடித்துக் கொண்டு வந்ததில் கை வலித்தது. உதறிக் கொண்டார். சட்டையைக் கீழிறக்கிச் சரிப்படுத்தினார். தோளிலிருந்து நழுவிக் கொண்டிருந்த அம்பிகா ஜுவல்லர்ஸ் பையை நன்றாக மாட்டிக் கொண்டார். வேட்டியை மடித்துக் கட்டிக் கொண்டு நடந்தார். செருப்பை மீறிக் கால் சுட்டது. மனசும்தான்.

என்னமாய்ப் பேசி விட்டார்கள் மகளும், மருமகனும். வழியனுப்பும் போது கூட பணம்தானே குறியாய் இருந்தது.

''பாருங்க சார், இதுவரைக்கும் நான் உங்கள எதுவும் கேட்டதில்ல. நீங்க, எங்க கல்யாணத்துக்குன்னு செஞ்ச செலவுதான். இப்பக் கூட நான் என்னோட சுயநலத்துக்குன்னு கேக்கலை. உங்க பொண்ணும்தானே நாளைக்கு அனுபவிக்கப் போறா. இன்னும் ஒரு வாரம் கூட எடுத்துக்குங்க. நீங்களும் யோசிங்க; உங்க பையன் கிட்டயும் கலந்து பேசிட்டு, நல்ல முடிவாச் சொல்லுங்க. போயிட்டு வாங்க.''

யோசிக்கவோ, கலந்து பேசவோ என்ன இருக்கிறது? வந்ததிலிருந்து எத்தனை முறை, எத்தனை விதத்தில் சொல்லியாகி விட்டது. இருந்தால்தானே பணம்... தருவதற்கு, என்பதை யார் சொல்லிப் புரிய வைப்பது இவர்களுக்கு?

சுயநலம் இடையாதாம்! பேசிய நகையில், அரை பவுன் குறைவதாய் அம்மா சொன்னதைக் கேட்டு, முகூர்த்த நேரத்தில் தாலி கட்ட மறுத்தவன்தானே! கடைசி நேரத்தில் செய்யக் கொடுத்திருந்ததோடு, கிடைக்கவில்லை என்பதை எவ்வளவு எடுத்துச் சொல்லியும் கேட்காமல், அவசரத்துக்கு சிவகாமியின் காதில் போட்டிருந்த தோட்டைக் கழற்றிக்





கல்கி கலெக்ஷன்

# ரூ. 3,000 மூன்றாம் பரிசு பெறும் கதை - 1

## ரவி பாலாஜி

(அறிமுக எழுத்தாளர்)

கொடுத்தபின்தானே தாலி கட்டச் சம்மதித்தான். சாராம், சார்...! இத்தனை நாள் மாமா என்று அழைத்தவன். நிமிடத்தில் சார் என்று அந்நியப்படுத்தி விட்டதை ஜீரணிக்க முடியவில்லை அவரால்.

"சார்... சார்..."

இரண்டாவது அழைப்பில் தான், தாம் அழைக்கப்படுவது உணர்ந்து திரும்பினார். கிட்டத்தட்ட, இவர் வயதிலிருந்த அந்த ஆள், இவரைப் பார்த்து நமுட்டுச் சிரிப்பு சிரித்தார். காவிப் பற்கள். கையில் ஒரு மஞ்சள் பை. ஏதோ ஒரு ஜவுளிக் கடையில், அன்பளிப்பாகப் பெற்றிருக்க வேண்டும்.

"சார், உங்க பையைப் பாருங்களேன்."

"ஏன்?" என்று வாய் கேட்டாலும், அனிச்சைச் செயலாய் பையைத் தொட்டுப் பார்த்ததில் ஏதோ வித்தியாசம் தெரிந்தது. தோளிலிருந்து பையைக் கழற்றிப் பார்த்ததில், 'எல்' வடிவத்தில் கிழிக்கப்பட்டிருந்தது தெரிந்தது. பையில் வைத்திருந்த டவல், கிழிசலின் வழியாக வெளியே நீட்டிக் கொண்டிருந்தது. சட்டென்று பர்ஸின் ஞாபகம் வந்தது. டவலை உள்ளே தள்ளி விட்டு, கிழிசலின் வழியாகவே கை விட்டுத் துழாவிப் பார்த்தார். ஜிப்பைத் திறந்து துணிகளை விலக்கிப் பார்த்தார். இல்லை.

"என்ன தேடுறீங்க, பணம் ஏதாவது உள்ள வச்சிருந்தீங்களா, என்ன?" குரலிலேயே கிண்டல் தெரிந்தது. அடுத்தவன் ஏமாந்ததைப் பார்த்ததும், 'நான் ஏமாறவில்லையாக்கும்!' என்று தனது சாதுரியத்தை மெச்சிக் கொள்ளும் சுகமோ?

கண்ணில் படாமல் பர்ஸை அடித்துக் கொண்டு போனவனை விட, எதிரில் நின்று கொண்டு கேலி பேசும் இந்த ஆள் மீது எரிச்சல் வந்தது. கடனே என்று பதில் சொன்னார். பர்ஸ் போய் விட்டது. அடுத்தது? டிக்கெட்.. நல்லவேளையாக, சட்டைப் பாக்கெட்டில் இருக்கிறது. இருக்கிறதா என்று எடுத்துப் பார்த்தார். எழும்பூர் வரை வந்த பஸ் டிக்கெட், மூன்று ரூபாய் எண்பது பைசா சில்லறைக் காசுடன், டிரெயின் டிக்கெட்டும் இருந்தது.



மஞ்சள் பைக்காரர் எட்டிப் பார்த்து, "வைகையா சார்? அடடே பக்கத்துப் பக்கத்து சீட்டுதான் போலருக்கு" என்று ஏதோ ஜோக் சொல்லி விட்டது போல் சிரித்தார். 'டிரெயினிலும் இவன் தொல்லையா?' என்று சலித்துக் கொண்டார் சுந்தரமூர்த்தி.

வைகை, பிளாட்பாரத்தில் நின்றிருந்தது. தங்கள் கம்பார்ட்மெண்டைப் பார்த்து

ஏறிக் கொண்டார்கள். மஞ்சள் பைக்காரர், பையிலிருந்து வெற்றிலைச் சிவலை எடுத்துக் கொண்டு, பையைக் கொக்கியில் மாட்டி வைத்தார். காலியாய் இருந்த எதிர் சீட்டில் கால் நீட்டி அமர்ந்து, நிதானமாக வெற்றி லையை மடிக்கத் தொடங்கினார்.

மஞ்சள் பைக்காரர் வெற்றிலையைக் குதப்பிக் கொண்டே கேட்டார், "சென் னைக்கு என்ன காரியமா வந்தீங்க?"

"இங்க, மக வீட்டுக்கு வந்தேன்."

"எங்க?" என்று விட்டு, எழுந்து வாஷ் பேசினுக்குப் போனார்.

சுந்தரமூர்த்திக்கு ஆயாசமாக இருந்தது. இவனென்ன, எங்கே, ஏன், எப்படின்னு கேள்வியாத் துளைக்கிறான்! சற்று நேரம் பேசாமலிருந்தால், நன்றாக இருக்கும்போல் இருந்தது. பையில் கிழிந்த பக்கத்தை மடியில் குப்புறப் போட்டு வைத்துக் கொண்டு கண்ணை மூடினார்.

**சு**ந்தரமூர்த்தி எப்போதும் உழைப்பை மதிப்பவர். உழைத்துச் சம்பாதித்த பணம் வீணாய்ப் போகும் என்று அவர் நினைத்த தேயில்லை. மகள் சொன்னதைக் கேட்டு, தாம் பர்ஸைப் பையில் வைத்ததை நினைத் துக் கொண்டார். வார்த்தைகளால் நோக டித்து விட்டு, கிளம்பும் போது சொன்னாள் மகள் : "சென்னையில் திருடங்க அதிகம். பர்ஸை பத்திரமா பையில வச்சுக்கங்க. கொஞ்சம் ஏமாந்தா அடிச்சே பிடுங்கிடு வாங்க!"

'நீயும் அதே பணத்தைப் பிடுங்கத்தானே இத்தனை நேரம் வார்த்தைகளால் வதைத் தாய்!' என்று நினைத்தாலும், பர்ஸைப் பையில் வைத்திருந்தார். அதிக எச்சரிக்கை யுடன் இருந்தால்தான் பறிபோனதோ? சரி, போனது போய் விட்டது. இனி இதைப் பற்றி நினைப்பதில் அர்த்தமில்லை என்று சமாதானப்படுத்திக் கொண்டார்.

வண்டியின் இலேசான குலுங்கலில் கண் திறந்தார். எதிர் இருக்கையில், இரு இளை ஞர்கள் உட்கார்ந்திருந்தார்கள். தாடி வைத்த வன் ஏதோ பிஸினஸ் புத்தகத்தில் மூழ்கி யிருந்தான். பக்கத்தில் இருந்தவன் பாக்கெட் டேப் ரிகார்டரில் பாட்டுக் கேட்டுக் கொண்டிருந்தான். மஞ்சள் பைக்காரர், மறுபடி ஏதும் கேட்கும் முன் கண்ணை மூடிக் கொண்டார்.

"வண்டி மாடு எட்டு வச்சு முன்னால்
போகுதம்மா,
வாக்கப்பட்ட பொண்ணு மனம்
பின்னால் போகுதம்மா."

டேப்ரிகார்டரிலிருந்து பாட்டு கசிந்தது. கேட்டு உள்ளுக்குள் சிரித்துக் கொண்டார். வாக்கப்பட்டவுடன் வேண்டுமானால் மனம் பின்னால் போகலாம். வளர்ந்த வீட்டை, வளர்த்த உறவுகளை, தோட்டத் தில் வைத்த ரோஜா செடியை... இன்னும் என்னென்னமோ நினைத்து ஏங்கலாம். கொஞ்சம் காலம்தான். பிறகு லகான் போடப்பட்ட குதிரை கணக்காய், முன் னால் மட்டுமே. என் வீடு... என் கணவன் என்று மட்டுமே பார்க்கிறது. இல்லை யானால், போன ஏழாவது நிமிடமே, பணம் பற்றிப் பேசியிருக்க முடியாது. பர்ஸை மறந்து விட்டாலும், பாசம் மனத்தைக் கனக்கச் செய்தது.

**"வா**ங்கப்பா, உட்காருங்க. தண்ணி கொண்டு வர்றேன்."

"ஏங்க, அப்பா வந்திருக்காரு" என்று உள்ளே பார்த்துச் சொல்லிக் கொண்டே போனாள்.

"வாங்க மாமா. பத்து நாளைக்கு முன்னாடியே வருவீங்கன்னு நெனைச்சேன். லெட்டர் போட்டேனே மாமா, கிடைச் சிருக்குமே?"

"லெட்டர் கிடைச்சது மாப்பிள. ஆனா வர முடியாத சூழ்நிலை. அதான்..."

"அப்படி என்னப்பா வர முடியாத சூழ்நிலை?" தண்ணீர்ச் சொம்பை டீப்பா யில் வைத்தவாறே கேட்டாள் வித்யா.

"சொல்றேம்மா. உங்கம்மா திடீர்னு பாத்ரூம்ல வழுக்கி விழுந்து, வலது கால்ல பலமான அடி. ஒரு வாரத்துக்கு மேல எந்திரிக்கவே முடியலை. இப்பத்தான் கொஞ்சம் பரவால்ல..."

"இப்ப நல்லாயிருக்கில்லப்பா. நானும் ஊருக்கு வரணும்னுதான் பாக்குறேன். எங்க, இவருக்கு வேலையை விட்டுட்டு வர முடிய மாட்டேங்குது."

இலேசாய் எழுந்த மௌனத்தை ரமேஷ் கலைத்தான் : "இங்க ஒரு ஃப்ளாட் விலைக்கு வருது மாமா. லெட்டர்லயே எழுதியிருந்தேனில்ல. நல்லா டெவலப் ஆகுற ஏரியா, ஒண்ணு வாங்கிப் போட்டா பின்னால உதவுமேன்னுதான்."

"இவரு முக்கால் பங்குக்கு மேல புரட் டிட்டாருப்பா. மீதி அம்பதுதான் வேணும். பணம் கொண்டு வந்திருக்கீங்கல்லப்பா?"

"அது வந்து..." எப்படித் துவங்குவ தென்று குழம்பி, டீப்பாயில் வைத்திருந்த




தண்ணீரை எடுத்துக் குடித்தார். தீர்மானம் பண்ணிக் கொண்டவராய்ப் பேச ஆரம்பித்தார்.

"வந்து மாப்பிள, சேர்த்து வச்ச பணம், நகை எல்லாம் பெரியவனோட கல்யாணத்துலயே கரைஞ்சு போயிட்ட நிலைமையில, வித்யா கல்யாணத்துக்கு எவ்வளவு சிரமப்பட்டேன்னு உங்களுக்கே தெரியும். ஆபீசுல இருந்த லோனெல்லாம் போட்டும் பத்தாம, அஞ்சு வட்டிக்கும், பத்து வட்டிக்கும் ஃபைனான்ஸ்ல வாங்கித்தான் இந்தக் கல்யாணச் செலவே செய்ய முடிஞ்சது."

"இப்பத்தான் உங்க ரிட்டையர்மெண்டுப் பணம் வந்திருக்குமேப்பா."

வந்ததும்மா. ஒண்ணேகால் இலட்சம் வந்தது. உன் கல்யாணத்துக்கு வாங்கின கடன் வட்டியோட சேர்த்து எழுபதாயிரம் ஆயிருச்சும்மா. போன வாரம்தான், நானும் பிரகாஷும் போய்க் கட்டிட்டு வந்தோம்."

"அப்படியே பார்த்தாலும், இன்னும் அம்பதாயிரம் இருக்குமே மாமா?"

தான் உழைத்துச் சம்பாதித்த ஒவ்வொரு காசுக்கும் இப்படிப் பதில் சொல்ல வேண்டி வந்து விட்டதை நினைத்து அவருக்குச் சிரிப்பு வந்தது. ஆனாலும் பதில் சொல்ல வேண்டியது அவசியம்.

"வாஸ்தவம்தான் மாப்பிள. அம்பதாயிரம் ரூவா இருக்கு. கூடவே பிரகாஷ் இருக்கான். அவனுக்குன்னு தர வீடோ, நிலமோ ஒண்ணும் இல்ல என்கிட்ட. மைதிலியையும், வித்யாவையும் படிக்க வைச்சேன். கல்யாணம் பண்ணி வைச்சேன். அவனுக்கு ரெண்டுமே பண்ணலை."

"நீங்களும் அவனைப் படிக்க வைக்கணும்னு எவ்வளவோ முயற்சி பண்ணீங்க. ஆனா அவனுக்குப் படிப்பு ஏறலை. அதுக்கு யார் என்னப்பா செய்ய முடியும்? அவன்தான் அவனோட வழியப் பாத்துக்கணும்."

அது எப்படிம்மா, உன்னப் போல அவனும் என் பிள்ளைதானே? அவனுக்குப் படிப்பு வரலைங்கிற குறையைத் தவிர, மத்த பசங்களைப் போல ஒரு கெட்ட பழக்கமும் கிடையாது. தனக்குப் படிப்பு வரலைங்கிறதை உணர்ந்துதான் அவனும் ஒரு மெடிக்கல்ல வேலைக்குப் போனான். மருந்து வகையெல்லாம் நல்லாத் தெரிஞ்சுக்கிட்டானாம். தெரிஞ்ச டாக்டர் ஒருத்தர் கிளினிக் தொடங்கறாராம். பக்கத்துலயே கடை ஒண்ணு இருக்குன்னு, மெடிக்கல் வைக்கச் சொல்லி. இவன் கடையையே சிபாரிசு பண்றேன்னு சொன்னாராம். நல்லா பிக்கப் ஆகற ஏரியாதான். இவனும், இன்னொரு பையனும் பார்ட்னர்ஷிப் போட்டுக் கடை வைக்கலாம்னு பிளான் பண்ணியிருக்காங்க. அதுக்குத்தான் இந்தப் பணத்தைத் தரலாம்னு வைச்சிருக்கேன். இப்படியாவது அவனுக்கு ஒரு வழி பிறக்கட்டுமேன்னு பாக்கறேன்."

"அப்படின்னா, முடிவு பண்ணிட்டுத்தான் வந்திருக்கீங்க இல்லையாப்பா?"

இதற்கு என்ன பதில் சொல்வதென்று விளங்காமல் அவஸ்தையாய் உணர்ந்தார் சுந்தரமூர்த்தி. வித்யாவே திரும்பக் கேட்டாள், "இங்க என்னப்பா, வேற ஏதும் வேலையா வந்தீங்களா?"

பணம் தரப் போவதில்லை என்று முடிவு செய்த பிறகு, இங்கு ஏன் வந்தாய் என்று கேட்கிறாளோ? சுந்தரமூர்த்திக்கு, பிரமிப்பாய் இருந்தது. வித்யாவிடமிருந்து இப்படி ஒரு வார்த்தையை அவர் நிச்சயம் எதிர்பார்க்கவில்லை. இரண்டு வருடங்கள்! இரண்டே வருடத்தில் இத்தனை மாற்றம் வருமா? குழந்தைச் சிரிப்பு சிரிக்கும் வித்யாவுக்கு இவ்வளவு சூசகமாகக் கூடப் பேசத் தெரியுமா! இத்தனைக்கும், இவள் கல்யாணத்திற்குத் தான் பட்ட சிரமத்தைப் பார்த்து, இந்தக் கல்யாணமே எனக்கு வேண்டாம்ப்பா என்று காலைப் பிடித்துக் கொண்டு அழுதவள் இந்த வித்யா!

அழுகை வந்தது அவருக்கு. கேவலம், இந்தப் பணம், எப்படியெல்லாம் மாற்றி விடுகிறது மனிதனை!

"நாலு நாளா ஏன்டா ஸ்கூலுக்கு வரலே?"
"கடுமையான செலக்டிவ் அம்னீஷியா, ஸார்!"
– உ. ராஜாஜி

"என்ன சார், கண்ணை மூடிட்டே அழறீங்க, பர்ஸ் போயிடுச்சேன்னா?"



''நம்ம பையன் சரியான பொண்டாட்டி தாசனா ஆகப் போறான் பாருங்க.''

''எப்படிச் சொல்றே?''

''தாலி கட்டறதுக்கு முன்னாடி முடிச்சுப் போட பர்மிஷன் கேக்கறானே!''

– சி.பி. செந்தில்குமார்

---

சட்டென்று கண்களைத் துடைத்துக் கொண்டார். தாடிக்கார இளைஞன் இவரை ஒரு வினாடி நிமிர்ந்து பார்த்து விட்டு, மறுபடி புத்தகத்தில் ஆழ்ந்தான். பக்கத்தில் இருந்தவளைக் காணவில்லை. சாப்பாட்டுப் பொட்டலத்தைப் பிரித்துக் கொண்டிருந்த மஞ்சள் பைக்காரரின் உதட்டில் இன்னும் சிரிப்பு தேங்கியிருந்தது. சின்ன வயதில், உடன் விளையாடியவன் கீழே விழுந்ததைப் பார்த்துத் தொடங்கிய சிரிப்பு இன்னும் மாறவில்லையோ என்று தோன்றியது. பர்ஸுக்காக அழவில்லை என்று சொன்னால், வேறு எதற்கு என்று கேட்பார் இந்த ஆள். எதற்கு இந்த வம்பு என்று பொதுவாய்ச் சிரித்து வைத்தார்.

இரண்டு வாய் சாப்பிட்ட பின் திடீரென ஞாபகம் வந்தவராய், ''சாப்பிடறீங்களா? உங்களுக்கென்ன, மக வீட்டுல மூக்குப் பிடிக்க சாப்பிட்டு வந்திருப்பீங்க'' என்றார் மஞ்சள் பைக்காரர்.

சாப்பிடக் கூப்பிட்டு விட்டு, 'கூப்பிட்டேன் என்பதற்காக உடனே நாக்கைத் தொங்கப் போட்டுக் கொண்டு வந்து விடாதே' என்றும் நாசூக்காகச் சொல்லக் கற்றுக் கொண்டிருக்கிறோம். சுந்தர மூர்த்திக்கு ஆயாசமாய் இருந்தது. கண்களை மூடிக் கொண்டார். வெளிச் சத்தங்கள் குறைந்து கொண்டே வந்தன. வண்டியின் சீரான குலுங்கலிலும், இலேசான பசியிலும் அவருக்குத் தூக்கம் வரும்போல் இருந்தது.

"பெரியவரே, பெரியவரே!"

எங்கோ கிணற்றுக்குள்ளிருந்து குரல் வருவது போலிருந்தது. கண்ணைத் திறந்தார். தாடிக்கார இளைஞன்தான் கூப்பிட்டிருக்க வேண்டும் என்பது, அவன் இவரையே பார்த்துக் கொண்டிருந்ததிலிருந்து தெரிந்தது.

''பெரியவரே, ஏதாவது சாப்பிடறீங்களா?'' என்றான்.

தூக்கக் கலக்கத்தில் புரியாமல் பார்த்தார், சுந்தரமூர்த்தி.

அவனே மறுபடி கேட்டான். ''உங்க பர்ஸ் தொலைஞ்சிருச்சு இல்லையா?''

ஆமாம் என்பதாய்த் தலையசைத்தார்.

"எங்க போகணும் நீங்க?''

"திண்டுக்கல்.''

"அங்க, ஸ்டேஷன்லயிருந்து வீடு போய்ச் சேர்றதுக்கு, இப்ப சாப்பிடுறதுக்கு, காசு ஏதாவது வச்சிருக்கீங்களா? நான் பேண்ட்ரிக்கு போறேன். சாப்பிட ஏதாவது வேணும்னா சொல்லுங்க. வாங்கிட்டு வர்றேன்.''

அவருக்குப் பேச வரவில்லை. உதடு ஒட்டிக் கொண்டது. போதும்; இந்த ஒரு வார்த்தை போதும்! உதவி அப்புறம். உனக்குப் பிரச்னை என்றால், உதவி செய்ய நானிருக்கிறேன் என்று சொல்லும் இந்த அனுசரணை போதும்! அவன் கைகளைப் பற்றிக் கொண்டார்.

"தயக்கப்படாம சொல்லுங்க. என்ன வாங்கிட்டு வரட்டும்?''

"ரொம்ப நன்றி தம்பி. எனக்கு இப்ப பசியில்லை. வேணுங்கிறப்போ நான் கேட்டு வாங்கிக்கறேன்'' என்றார்.

உண்மையில் அவருக்கு அப்போது பசியில்லை; களைப்பில்லை. தாம் ஏன் இவ்வளவு வருத்தப்பட்டோம் என்று அவருக்கு ஆச்சர்யமாய் இருந்தது. இப்போது யோசித்தபோது, வித்யா தானாகவே அப்படிப் பேசியிருக்க முடியாதென்று தோன்றியது. கணவன், தன் அப்பாவை அவமரியாதைப்படுத்திவிடக் கூடாது என்பதற்காகவே அவள் முந்திக் கொண்டிருக்க வேண்டும். கிளம்பும் போது கூட குழந்தை, சாப்பிட்டுப் போகும்படிதானே வற்புறுத்தினாள். நாம்தானே பிடிவாதமாய்ப் பசியில்லை என்று கிளம்பி விட்டோம்.

மகளைப் புரிந்து கொண்ட நெகிழ்ச்சியில் கண்ணீர் வழிந்தது. மறுபடி மஞ்சள் பைக்காரன் பரிகசிப்பானோ என்று தோன்றிய எண்ணத்தை விரட்டினார். சிரித்து விட்டுப் போகட்டுமே! அவன் சுபாவமே அப்படியாயிருக்கும். அவனே பர்ஸைத் தொலைத்தாலும், இப்படித்தான் ஏதும் சொல்லிச் சிரிப்பானோ, என்னவோ! எங்கோ படித்தது அவருக்கு நினைவுக்கு வந்தது. "தேடிப் பார்த்தால் எங்குதான் மனிதர்கள் இல்லை?''

# பொன்னியின் செல்வன்

எட்டாம் அத்தியாயம்

## பூதத் தீவு

வானமா தேவி இருக்கிறாளே, அவள் புத்தி விசாலத்தில் மனித குலத்தை ஒத்தவள்தான் போலும்! பரஞ்சோதியாகிய இறைவனை மனிதர்கள் தங்கள் இதய ஆகாசத்திலிருந்து நழுவிச் செல்ல விட்டு விடுகிறார்கள். பிறகு, இருண்ட ஆலயங்களின் பிராகாரங்களிலும், கர்ப்பக் கிருஹங்களிலும் லட்ச தீபம் ஏற்றி அந்தப் பரஞ்சோதியைத் தேடுகிறார்கள்!

வானமாதேவியும் அத்தகைய புத்திசாலித்தனமான காரியத்தைத் தினந்தோறும் செய்கிறாள்! ஜோதிமயமான சூரிய பகவானைத் தன் வசத்திலிருந்து கடலில் நழுவ விட்டு விடுகிறாள். பிறகு தன் நாதனைக் காணவில்லையே என்ற கவலை அவளுக்கு உண்டாகி விடுகிறது. லட்ச தீபம் ஏற்றிச் சூரியனைத் தேடுகிறாள்? லட்ச தீபம் மட்டுமா ஏற்றுகிறாள்? கோடானு கோடி தூங்கா விளக்குகளை ஏற்றி இரவெல்லாம் அவளும் தூங்காமல் சூரியனைத் தேடிக் கொண்டிருக்கிறாள்.

வந்தியத்தேவனுக்கு உணர்வு வந்து கண்ணைத் திறந்து பார்த்த போது, தன்




கல்கி கலெக்ஷன்

அமரர் கல்கி

கண் முன்னே பல்லாயிரம் தீபச் சுடர்கள் மின்னுவதைக் கண்டான். எந்தக் கோவிலிலே இவ்வளவு அலங்காரமாக லட்ச தீபம் ஏற்றியிருக்கிறார்கள் என்று வியந்தான். பின்னர், அவை தீபங்கள் அல்லவென்றும் வானத்தில் சுடர்விடும் நட்சத்திரங்கள் என்றும் உணர்ந்தான். படகில் தான் அண்ணாந்து படுத்திருப்பதையும் தன் இடுப்பைச் சுற்றி ஈரத் துணியின் மீது கயிறு ஒன்று கட்டியிருப்பதையும் அறிந்தான்.

ஜிலுஜிலுவென்று குளிர்ந்த காற்று அவன் உடல் மீது பட்டு அவனுக்கு எல்லையற்ற சுகத்தையும் அமைதியையும் அளித்தது.

அமைதியான கடலில் எழுந்த ஓங்கார நாதம் அவன் உள்ளத்தில் அபூர்வமான சாந்தியை உண்டாக்கியது.

அந்த நாதத்தினிடையே ஒரு கீதமும் கேட்டது. அது என்ன கீதம்? அதை அவன் இதற்கு முன் எங்கே எப்பொழுது கேட்டிருக்கிறான்?

**"வாரிதியும் அடங்கி நிற்க**
**மாருதமும் தவழ்ந்து வர**
**காரிகையென் உளந்தனிலே**
**காற்று சுழன் றடிப்பதுமேன்?**
**அலைகடலும் ஓய்ந்திருக்க**
**அகக்கடல் தான் பொங்குவ**
**தேன்?"**

ஆகா! அந்த விசித்திரமான பெண்! பூங்குழலி! சற்று நிமிர்ந்து உட்கார்ந்து எதிரே பார்த்தான். ஆம், அவள்தான்! படகு தள்ளிக் கொண்டிருக்கிறாள்! அந்தச் சோக கீதத்தைப் பாடிக் கொண்டு படகு வலிக்கிறாள்! காரிருளிலே ஒரு மின்னல் மின்னிப் பல பொருள்களை ஒரு நொடிப் பொழுதில் காட்டி விடுவது போல், முன்னிரவில் நடந்ததெல்லாம் வந்தியத்தேவனுக்குப் பளிச்சென்று ஞாபகம் வந்தது. அதாவது, அவன் கடலில் தத்தளித்தபோது பூங்குழலியும் கடலில் குதித்து அவனை நோக்கி வந்த வரையிலேதான். பிறகு நடந்தது ஒன்றும் அவனுக்கு நினைவில் இல்லை. தன்னை அந்தப் பெண் காப்பாற்றிப் படகில் ஏற்றியிருக்க வேண்டும். படகு அசையும்போது, தான் மீண்டும் கடலில் விழுந்து விடாமலிருப்பதற்காக இடுப்பில் கயிற்றைச் சுற்றிப் படகின் குறுக்குக் கட்டையில் சேர்த்துக் கட்டியிருக்கிறாள். கயிறு உடம்பின் தோலில் பட்டு வலிக்காதபடி அரை ஆடையின் மீது சுற்றிக் கட்டியிருக்கிறாள்.

இடுப்புத் துணியைச் சுற்றியிருந்த அரைச்சுருளை வந்தியத்தேவன் தொட்டுப் பார்த்துக் கொண்டான். பணமும் ஓலையும் பத்திரமாயிருக்கக் கண்டான். ஆகா! இந்தப் பெண் மீது, தான் சந்தேகங் கொண்டது எவ்வளவு பெரிய தவறு? வேறு விதமான துர்நோக்கம் இவளுக்கு இருந்தால் தன்னைக் காப்பாற்றியிருக்க வேண்டிய அவசியமில்லையே? கை களைத்து உணர்விழந்த தன்னைக் கடலிலிருந்து படகில் ஏற்றுவதற்கு இவள் எவ்வளவு கஷ்டப்பட்டிருக்க வேண்டும்? எப்படித்தான் தன்னந்தனியாகச் செய்தாளோ? அபூர்வமான நங்கை இவள்!

இதோ அவள் எழுந்திருக்கிறாளே, ஏன்? தான் விழித்து விட்டதைப் பார்த்துவிட்டுத்தான் தன்னை நெருங்கி வருகிறாளோ? வந்து என்ன செய்யப் போகிறாள்? இல்லை, இல்லை! வேறு ஏதோ செய்கிறாள். ஆகா! பாய் மரத்தில் பாயைக் கட்டப் போகிறாள்! எவ்வளவு கடினமான வேலை! அதுவும் தன்னந்தனியாகச் செய்வது?

"பூங்குழலி! பூங்குழலி!"

"ஓகோ! விழித்துக் கொண்டு விட்டாயா?"

"என் கட்டை அவிழ்த்து விடு! நானும் உனக்கு உதவி செய்கிறேன்."

"நீ சும்மாயிருந்தால் போதும்; அதுவே பெரிய உதவி. கயிற்றை அவிழ்க்க வேண்டுமென்றால் நீயே

அவிழ்த்துக் கொள்ளலாம். ஆனால் மறுபடியும் கடலில் குதித்து விடாதே!''

வந்தியத்தேவன் தன்னைக் கட்டியிருந்த கயிற்றை அவிழ்த்து விட்டுக் கொண்டான்.

பூங்குழலி பாய் மரத்தைத் தூக்கி நிறுத்தினாள்; அதில் பாயை விரித்துப் பறக்க விட்டாள். படகு இப்போது உல்லாசமாகச் சென்றது. விரைவாகவும் சென்றது.

''சமுத்திர குமாரி!''

''ஏன்?''

''தாகமாயிருக்கிறது.''

உப்புத் தண்ணீர் குடித்திருக்கிறாய் அல்லவா? தாகமெடுக்காமல் என்ன செய்யும்?''

சுரைக் குடுக்கை ஒன்றை எடுத்துக் கொண்டு சமுத்திரகுமாரி வந்தியத்தேவன் அருகில் வந்தாள்.

''உனக்குச் சாப்பாடு கூடக் கொண்டு வந்தேன். நீ கடலில் குதித்தபோது அதுவும் விழுந்து விட்டது! நல்லவேளையாக இந்தச் சுரைக் குடுக்கை தப்பிப் பிழைத்தது.''

இப்படிச் சொல்லிக் கொண்டே சுரைக் குடுக்கையை மூடியிருந்த தக்கையை எடுத்து விட்டுக் கொடுத்தாள். வந்தியத்தேவன் அதை வாங்கித் தண்ணீர் குடித்தான்.

தொண்டையைக் கனைத்துச் சரிப்படுத்திக் கொண்டு, ''உன்னைப் பற்றித் தவறாக எண்ணிக் கொண்டு விட்டேன். அதற்காக வருத்தப்படுகிறேன்'' என்றான்.

''அதனால் ஒன்றும் பாதகமில்லை. நீ யாரோ? நான் யாரோ? பொழுது விடிந்தால் பிரிந்து விடப் போகிறோம்.''

''இப்போது நேரம் என்ன?''

''வானத்தைப் பார்த்துத் தெரிந்து கொள்: சப்தரிஷி மண்டலத்தைப் பார்!'' என்றாள் பூங்குழலி.





வந்தியத்தேவன் வட திசையில் அடிவானத்தைப் பார்த்தான். அவன் படகு ஏறும்போது பார்த்ததற்கு இப்போது சப்தரிஷிகள் இடம் மாறிப் பாதி வட்டம் வந்திருந்தார்கள். அந்த அருந்ததி நட்சத்திரம் வசிஷ்டருடன் எப்படி ஒட்டிக் கொண்டே வருகிறது! அதிசயந்தான்! துருவ நட்சத்திரம் மட்டும் இருந்த இடம் விட்டு அசையவில்லை. வான வெளியும் மூலைக் கடலும் சேரும் அந்த இடத்தில் துருவ நட்சத்திரம் யுக யுகமாக நிலைத்து நின்று வருகிறது! எத்தனை எத்தனையோ கப்பல் மாலுமிகளுக்கு வழியும் திசையும் காட்டிக் கொண்டு வருகிறது. துருவ நட்சத்திரம் – அதை யாருக்கோ உதாரணமாகச் சொன்னார்களே? யார் சொன்னது? யாரைச் சொன்னது? ஞாபகம் வருகிறது. குடந்தை ஜோசியர் சொன்னார். இளவரசர் அருள்மொழி வர்மருக்கு வடதுருவத்தை உதாரணமாகச் சொன்னார். இளவரசரைப் பார்க்கும் பேறு நமக்கு உண்மையிலேயே கிடைக்கப் போகிறதா? இந்தப் பெண்ணின் உதவியினால் கிடைக்கப் போகிறதா?

பூங்குழலி தன் இடத்தில் போய் உட்கார்ந்து கொண்டாள்.

"நேரம் என்னவென்று தெரிந்ததா? மூன்றாம் ஜாமத்தில் பாதி நடக்கிறது. காற்றுத் திரும்பி விட்டது. பொழுது விடிய நாகத் தீவுக்குப் போய் விடுவோம்'' என்றாள்.

''நாகத் தீவா?'' என்று வந்தியத்தேவன் திடுக்கிட்டுக் கேட்டான்.

"ஆமாம்; இலங்கையின் வடபகுதி ஓரத்தில் பல தீவுகள் இருக்கின்றன. அவற்றில் ஒன்று நாகத்தீவு. அதில் இறங்கினால் மறுபடியும் கடலைக் கடக்கும் அவசியமில்லாமல் கரை வழியாகவே இலங்கைத் தீவை அடைந்து விடலாம்...''

"என்னை இறக்கி விட்ட பிறகு நீ என்ன செய்வாய்?''

''என்னைப் பற்றி உனக்கு என்ன கவலை?'' என்றாள் பூங்குழலி.

"எனக்கு இவ்வளவு பெரிய உதவி செய்தாய் அல்லவா? உன்னிடம் நான் நன்றி செலுத்த வேண்டாமா? என்னிடம் ஏதோ பிரதி உபகாரம் கேட்கப் போவதாகச் சொன்னாயே, அது என்ன?'' என்றான்.

"அந்த எண்ணத்தை நான் மாற்றிக் கொண்டு விட்டேன். உன்னிடம் ஒன்றும் நான் கேட்கப் போவதில்லை. நீ நன்றி இல்லாதவன்.''

அவள் அவ்விதம் குற்றம் சாட்டுவதற்குக் காரணம் உண்டு என்பதை வந்தியத்தேவன் உணர்ந்தான். மீண்டும் ஒருதடவை அரைச் சுருளைத் தடவிப் பார்த்துக் கொண்டு ஓலை இருக்கிறது என்று உறுதி பெற்றான்.

"சமுத்திரகுமாரி! நேற்று முன்னிரவில் உன்னைச் சந்தேகித்து நடந்து கொண்டதை நினைத்தால் எனக்கு வெட்கமாயிருக்கிறது. அதற்காக என்னை மன்னித்துவிடு!''

"ஆகட்டும்; நீயும் அதை மறந்து விடு! நடக்க வேண்டியதைப் பற்றி யோசி! இலங்கையில் உன்னை நான் இறக்கி விட்ட பிறகு என்ன செய்வாய்? இளவரசர் இருக்குமிடத்தை எப்படிக் கண்டுபிடிப்பாய்?''

"இந்தக் கடலை கடப்பதற்கு எனக்கு உதவி செய்த கடவுள் அதற்கும் உதவி செய்வார்!''

''கடவுளிடம் உனக்கு மிக்க நம்பிக்கை போலிருக்கிறது. நம்மைப் போன்ற அற்ப மனிதர்களின் காரியங்களில் கடவுள் சிரத்தை கொள்கிறார் என்று நினைக்கிறாயா?''

''அவ்வளவு தூரம் நான் தத்துவ விசாரணை செய்ததில்லை. ஏதாவது கஷ்டமோ, அபாயமோ நேர்ந்தால் கடவுளைப் பிரார்த்திப்பேன். கடவுளும் சமயத்தில் உதவி செய்வார். இந்தக்

கடலில் எனக்குப் படகு தள்ளுவதற்காகக் கடவுள் உன்னை அனுப்பி வைத்தார் அல்லவா?"

"அவ்வளவு கர்வம் உனக்கு வேண்டாம். நான் உனக்காகப் படகு தள்ள வரவில்லை. என்னை உனக்கு உதவி செய்யும்படி கடவுள் கனவிலே சொல்லி அனுப்பவும் இல்லை..."

"பின் எதற்காக நேற்று என்னைத் தப்புவித்தாய்? எதற்காக இப்போது படகு தள்ளிக் கொண்டு வருகிறாய்?"

"அதைப் பற்றி நீ கேட்க வேண்டாம். அது என் சொந்த விஷயம்."

வந்தியத்தேவன் மௌன சிந்தனையில் ஆழ்ந்தான். அவனுடைய கர்வங் கொண்ட உள்ளத்தில் ஓர் எண்ணம் தோன்றியது. தன்னுடைய வீர சௌந்தரிய வடிவழகைக் கண்டு தன் பேரில் இப்பெண் மோகங் கொண்டு விட்டாளோ என்று நினைத்தான். உடனே அந்த எண்ணத்தை மாற்றிக் கொண்டான். இவளுடைய பேச்சும் நடவடிக்கைகளும் அம்மாதிரி எண்ண இடந் தரவில்லை. வேறு ஏதோ மர்மமான காரணம் இருக்கிறது. இவளுடைய வாயைப் பிடுங்கி அதைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

"ஒரு விஷயத்தை நினைத்தால் கொஞ்சம் எனக்குக் கவலையாகத்தான் இருக்கிறது..." என்றான்.

"அது என்ன? உனக்குக் கூடவா கவலையாயிருக்கிறது?"

"இலங்கையில் காடும் மலையும் அதிகம் என்று சொல்கிறார்கள்."

"இலங்கையில் பாதிக்கு மேலே காடும் மலையுந்தான்."

"காட்டு மிருகங்கள் அங்கே அதிகம் என்று சொல்கிறார்கள்."

"காட்டு யானைகள் மந்தை மந்தையாகச் சஞ்சரித்துக் கொண்டிருக்கும். சில சமயம் காடுகளுக்கு வெளியிலும் யானைக் கூட்டம் வந்து விடும்."

"இலங்கையில் உள்ளவர்கள் காட்டு மிராண்டி மக்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறேன்."

"அது முழுப் பொய்."

"அப்படியானால் சரி; நீ சொன்னால் உண்மையாகத்தானிருக்கும். அப்படிப்பட்ட காட்டுப் பிரதேசத்தில் இளவரசர் அருள்மொழி வர்மா எங்கே இருக்கிறார் என்று தேடிக் கண்டு பிடிக்க வேண்டும்."

"அது ஒன்றும் கஷ்டமில்லையென்று சற்று முன் சொன்னாயே?"

"ஆமாம்; சொன்னேன். சூரியன் இருக்குமிடத்தைக் கண்டுபிடிப்பதில் என்ன கஷ்டம் இருக்க முடியுமென்று முதலில் நினைத்தேன்."

"இப்போது ஏன் வேறு விதமாக நினைக்கிறாய்?"

"சூரியனை மேகங்கள் மறைத்திருக்கலாம்; அல்லது கடலுக்கடியில் சென்றிருக்கலாம்."

"இந்தச் சூரியனை எந்த மேகமும் கடலும் மறைத்து விட முடியாது. பொன்னியின் செல்வரை மறைக்க முயலும் மேகமும் ஒளி பெறும்; கடலும் ஜொலிக்கும்!"

இளவரசரைப் பற்றிப் பேசும் போது இவளுடைய உற்சாகம் எப்படிப் பொங்குகிறது? சோழ நாட்டுப் பிரஜைகள் பலரையும் போல இந்தப் பெண்ணும் அவரைத் தெய்வமாகக் கருதுகிறாள்! அருள்மொழி வர்மரிடம் அப்படி என்ன வசீகர சக்தி இருக்கும்? - இவ்விதம் மனத்தில் எண்ணிக் கொண்டு, "அப்படியானால் இலங்கையில் இளவரசரைக் கண்டுபிடிப்பது கஷ்டமில்லையென்றா சொல்லுகிறாய்?" என்றான்.

"சோழ சைன்யம் எங்கே இருக்கிறது

என்று விசாரித்துக் கொண்டு போனால், இளவரசர் இருக்கும் இடம் தானே தெரிகிறது.''

''அது எப்படி? இலங்கையில் பாதி அளவு சோழ சைன்யம் பரவியிருக்கிறது என்று கேள்விப்பட்டேனே?''

''ஆமாம்; மாதோட்டத்திலிருந்து புலஸ்திய நகரம் வரையில் சோழர் படை பரவியிருக்கிறது என்றுதான் நானும் கேள்விப்பட்டேன்...''

''பின்னே? அவ்வளவு பெரிய பிரதேசத்தில் இளவரசர் எங்கே இருக்கிறாரோ? காட்டு வழிகளில் தேடிச் சென்று அவரைக் கண்டுபிடிக்க அதிக

உன்னைக் கேட்டேன்.''

''காலையில் நாகத்தீவில் உன்னை இறக்கி விடுவதாகச் சொன்னேன் அல்லவா?''

''ஆமாம்.''

''நாகத் தீவுக்குப் பக்கத்தில் பூதத் தீவு இருக்கிறது.''

''தீவின் பெயரே கேட்கப் பயங்கரமாயிருக்கிறதே!''

''பயப்படாதே! ஆதியில் அந்தத் தீவின் பெயர் போதத் தீவு. புத்த பகவான் ஆகாச மார்க்கமாக இலங்கைக்கு வந்தபோது முதன் முதலில் அந்தத் தீவிலேதான் இறங்கினாராம். அங்



நாள் ஆகலாம். இந்த ஓலையை உடனே அவரிடம் நான் சேர்ப்பித்தாக வேண்டும். நீதான் ஓலையைப் பார்த்து விட்டாயே? எவ்வளவு அவசரம் என்று உனக்குத் தெரிந்திருக்குமே?''

சமுத்திரகுமாரி இதற்கு மறுமொழி எதுவும் சொல்லாமல் மௌனமாயிருந்தாள்.

''இளவரசர் இருக்குமிடம் நிச்சயமாகத் தெரிந்தால் வீண் அலைச்சல் அலையாமல் அவர் இருக்குமிடத்துக்கு நேரே போய் விடலாம்'' என்றான் வந்தியத்தேவன்.

''அதற்கு ஒரு வழி இருக்கிறது'' என்றாள் பூங்குழலி.

''இருக்கும் என்று நம்பித்தான்

கிருந்த அரச மரத்தினடியில் வீற்றிருந்த புத்த தர்மத்தைப் போதித்தாராம். அதனால் போதத் தீவு என்ற பெயர் வந்தது...''

''பின்னால் அது 'பூதத் தீவு' என்று ஆகிவிட்டதாக்கும்!''

''ஆமாம்! 'பூதத் தீவு' என்ற பெயரைக் கேட்டே உன்னைப் போல் பலர் பயங்கரமடைந்தார்கள். பிறகு அந்தத் தீவுக்குச் சாதாரணமாக யாரும் போவதில்லை. பூதத்துக்குப் பயப்படாதவர்கள்தான் போவார்கள்.''

''அதாவது உன்னைப் போன்ற தைரியசாலிகள். கொள்ளிவாய்ப் பிசாசுகளுக்குப் பயப்படாதவள் அல்லவா நீ? சரி; பூதத் தீவைப் பற்றி என்ன

சொல்ல வந்தாய்?''

"பூதத் தீவின் கரையில் ஒரு நாழிகை நேரம் நீ தாமதித்தால், 'பொன்னியின் செல்வர்' இப்போது இலங்கையில் எங்கே இருக்கிறார் என்று விசாரித்துச் சொல்வேன்...''

"பூதத் தீவில் யாரை விசாரிப்பாய்?''

"பூதத் தீவில் ஒரு பூதம் இருக்கிறது. அதை விசாரிப்பேன்...''

''அந்த பூதத்தை எனக்கும் காட்டுவாய் அல்லவா?''

"அதுதான் முடியாது. நீ என்னைத் தொடர்ந்து தீவுக்குள் வரக் கூடாது. கரையில் படகைப் பார்த்துக் கொண்டு காத்திருப்பதாகச் சத்தியம் செய்து கொடுத்தால் நான் போய் விசாரித்துக் கொண்டு வந்து சொல்வேன்.''

''சரி, அப்படியே ஆகட்டும்!'' என்றான் வல்லவரையன்.

காற்று சுகமாக அடித்தது. பாய் மரத்தின் உதவியினால் படகு விர்ரென்று கடலைக் கிழித்துக் கொண்டு சென்றது. கடலின் ஓங்கார நாதம் கேட்டுக் கொண்டே இருந்தது.

வந்தியத்தேவனுடைய கண்களைச் சுழற்றிக் கொண்டு தூக்கம் வந்தது. விழிப்பு நிலையிலிருந்து உறக்க நிலைக்கு லேசாக நழுவிச் சென்றான்.



## ஒன்பதாம் அத்தியாயம்

# "இது இலங்கை!''

மறுபடியும் வந்தியத்தேவன் கண் விழித்தபோது, அவன் எதிரேயும் சுற்றிலும் தோன்றிய காட்சி அவனைப் பிரமிக்கச் செய்தது. கிழக்கே வான முகட்டில் சூரியன் உதயமாகிக் கொண்டிருந்தான். அங்கே கடல் உருக்கி விட்ட தங்கக் கடலாகித் தகதக வென்று திகழ்ந்தது. உதயகுமாரி, தங்கப் பட்டாடை புனைந்து கொண்டு ஜொலித்தாள். அவனுக்கு எதிரே படகு போய்க் கொண்டிருந்த திசையில் ஒரு மரகதத் தீவு நீலக் கடலாடை போர்த்துக்கொண்டு விளங்கியது. வலப் புறத்தில் அதே மாதிரி இன்னொரு பச்சை வர்ண பூமிப் பிரதேசம் காணப் பட்டது. அது நாலு புறமும் கடல் சூழ்ந்த தீவா அல்லது நீண்டு பரந்து வியாபித்துள்ள பூமிப் பிரதேசமா என்று நன்றாகத் தெரியவில்லை. இரண்டு மரகதப் பிரதேசங்களுக்கும் ஊடே பார்த்தால் தூரத்தில் அத்தகைய இன்னும் பல தீவுகள் பச்சை நிறத்தின்

பல்வேறு வகைக் கலவைகளுக்கு உதாரணமாகத் தோன்றிக் கொண்டிருந்தன. படகிலிருந்த படியே நாலு புறமும் சுற்றிப் பார்த்தால், வான வில்லின் ஏழு வித வர்ணங்களும் அதன் ஏழாயிரம் வகைக் கலவை நிறங்களும் திகழ்ந்தன. மொத்தத்தில் அந்தக் காட்சி கண்ணெதிரே காணும் உண்மைக் காட்சியாகவே தோன்றவில்லை. ஓவியக் கலையில் தேர்ந்த அமர கலைஞன் ஒருவன் "இதோ சொர்க்க லோகம் எப்படியிருக்கும் என்று காட்டுகிறேன்!" என்று சபதம் பூண்டு தீட்டிய வர்ண சித்திர அற்புதம் போலவே தோன்றியது.

இந்தக் காட்சியைக் கண்டு மெய்மறந்து நினைவிழந்திருந்த வந்தியத்தேவனுடைய செவியில் "இது சொர்க்கம் அல்ல; இது இலங்கை!" என்ற வார்த்தைகள் விழுந்து, அவனை விழிப்படையச் செய்தன.

"ஆம்; இது சொர்க்கமோ என்று நான் சந்தேகித்தது உண்மைதான்!" என்றான் வந்தியத்தேவன்.



''இது சொர்க்க பூமி அல்ல; ஆனால் சொர்க்கம் போன்ற பூமி. இந்த சொர்க்கத்தை நரகமாக்குவதற்கு மனித உருக் கொண்ட அசுரர்கள் வெகு கால மாகப் பிரயத்தனப்பட்டு வருகிறார்கள்'' என்றாள் பூங்குழலி.

''யாரை அசுரர்கள் என்று சொல் கிறாய்?'' என்றான்.

''உன்னைப் போல் யுத்தமே தொழி லாகக் கொண்டவர்களைத்தான்.''

''பொன்னியின் செல்வர் கூடவா?''

''அவரைப் பற்றி என்னை எதற்காகக் கேட்கிறாய்?''

''இளவரசரைப் பற்றி விசாரித்துச் சொல்வதாகக் கூறினாயே?''

''அவர் இருக்கக் கூடிய இடத்தை விசாரித்துச் சொல்வதாகக் கூறினேன். அவர் மனிதரா, அசுரரா, தேவரா என்று கண்டு பிடித்துக் கூறுவதாகச் சொல்லவில்லையே?''

படகு தீவுகளை நெருங்கிக் கொண்டிருந்தது. கடல் நடுவே கேட்கும் ஓங்காரத் தொனிக்



குப் பதிலாகக் கடல் அலைகள் கரையிலே மோதும்போது உண்டாகும் சல சலப்புச் சத்தம் கேட்கத் தொடங்கியது.

"என்ன சொல்கிறாய்? எதிரே தெரிகிறதே, அதுதான் பூதத் தீவு; வலப் புறத்தில் உள்ளது நாகத் தீவு. எங்கே போகட்டும்? நாகத் தீவிலேயே உன்னைக் கொண்டு போய் இறக்கி விட்டு விடட்டுமா? விசாரித்துக் கொண்டு போகிறாயா?"

"இல்லை; பூதத் தீவுக்கே போகலாம். கொஞ்ச நேரம் தாமதமானாலும், இளவரசர் எங்கே இருக்கிறார் என்று தெரிந்து கொண்டு போவதுதான் நல்லது."

"அப்படியானால் சரி; நீ எனக்குக் கொடுத்த வாக்குறுதி ஞாபகம் இருக்கட்டும்!"

சிறிய தீவின் கரையில் வந்து படகு நின்றது. படகைப் பார்த்துக் கொள்ளும்படி வந்தியத்தேவனிடம் சொல்லி விட்டுப் பூங்குழலி அந்த மரகதத் தீவிற்குள்ளே சென்றாள். வந்தியத்தேவன் அவள் சென்ற திக்கைப் பார்த்தான். பச்சை மரங்களுக்கிடையில் அவள் விரைந்து மறைந்து விட்டாள்.

போதத் தீவு மக்களின் வாக்கில் மருவிப் பூதத் தீவாக மாறியது பற்றி வந்தியத்தேவன் முதலில் சிந்தித்தான். பிறகு அத்தீவுக்குள்ளே இப்போது குடியிருக்கும் பூதம் எப்படிப்பட்ட பூதமாயிருக்கும் என்று எண்ணமிட்டான். பின்னர், இந்த அதிசயமான பெண்ணின் உள்ளத்தில் மறைந்திருக்கும் மர்மம் என்னவாயிருக்கும் என்று வியந்தான்.

பூங்குழலி கூறியபடி ஒரு நாழிகைக்குள் திரும்பி வந்தாள். படகில் ஏறிக் கொண்டு வந்தியத்தேவனையும் ஏறிக் கொள்ளச் சொன்னாள். நாகத் தீவை நோக்கிப் படகு சென்றது.

"விசாரித்து விஷயத்தைத் தெரிந்து கொள்ள முடிந்ததா?" என்று வல்லவரையன் கேட்டான்.

"முதன் மந்திரி அநிருத்தப் பிரமராயர், பொன்னியின் செல்வரைப் பார்ப்பதற்காக மாதோட்டத்துக்கு வந்திருக்கிறாராம். நேற்றைக்கு இளவரசரும் மாதோட்டத்துக்கு வந்திருக்க வேண்டும். எத்தனை நாள் மாதோட்டத்தில் இருப்பார் என்று தெரியாது. நீ அங்கே போய்த் தெரிந்து கொள்ளலாம்" என்றாள் பூங்குழலி.

"மாதோட்டம் இங்கிருந்து எத்தனை தூரம் இருக்கும்?"

"ஐந்து, ஆறு காத தூரம் இருக்கும். வழியெல்லாம் ஒரே காடு. கோடிக்கரை காடு மாதிரி இருக்கும் என்று நினைக்காதே. வானை எட்டும் மரங்கள் அடர்ந்த காடு. பட்டப் பகலில் சில இடங்களில் இருட்டாக இருக்கும். யானைக் கூட்டங்களும் வேறு துஷ்ட மிருகங்களும் உண்டு. நீ ஜாக்கிரதையாகப் போய்ச் சேர வேண்டும்."

"காட்டில் வழி காட்டுவதற்கு உன்னைப் போல் ஒரு கெட்டிக்காரப் பெண் மட்டுமிருந்தால்...?" என்று வல்லவரையன் பெருமூச்சு விட்டான்.

"அப்போது நீ ஒருவன் என்னத்திற்காக? ஓலையை என்னிடம் கொடுத்து விடு! நானே கொண்டு போய்க் கொடுக்கிறேன்... இல்லை, முடியாது! ஏதோ பைத்தியக்காரியைப் போலப் பேசுகிறேன். என்னால் முடியவே முடியாது. இளையபிராட்டியிடம் ஒப்புக் கொண்டு வந்தாயல்லவா? அதை நீதான் செய்து முடிக்க வேண்டும்!" என்றாள்.

"ஆகட்டும், பூங்குழலி! நானே செய்து முடிப்பேன். இன்னொருவர் கெஞ்சிக் கேட்டாலும் கொடுக்க மாட்டேன். நீ இவ்வளவு உதவி செய்தனையே? அதுவே போதும்!"

படகு நாகத்வீபத்தை நெருங்கிக் கொண்டிருந்தது. பூங்குழலியின் கைகள் துடுப்பை வழக்கம் போல வலித்துக் கொண்டிருந்தன. ஆனால் அவளுடைய உள்ளம் வேறு எங்கேயோ கனவுலோகத்தில் சஞ்சரித்துக் கொண்



டிருந்தது என்பது முகத்திலும் தெரிந்தது.

"சமுத்திரகுமாரி!" என்று வந்தியத்தேவன் அழைக்கவும், அவள் திடுக்கிட்டு இவ்வுலகத்துக்கு வந்தாள்.

"ஏன் கூப்பிட்டாய்?" என்று கேட்டாள்.

"ஏதோ என்னிடம் பிரதி உபகாரத்தை எதிர்பார்ப்பதாகச் சொன்னாயே? இதை இப்போது சொன்னால்தான் சொன்னது. இதோ கரை நெருங்கி வருகிறது."

பூங்குழலி உடனே மறுதலிக்கவில்லை. சிந்திப்பதாகத் தோன்றியது. ஆகையால் வந்தியத்தேவன் தைரியம் கொண்டு மேலும் கூறினான்.

"நீ எனக்குச் செய்த உதவி மிகப் பெரியது. எனக்கு மட்டும் நீ உதவவில்லை; சோழ சாம்ராஜ்யத்துக்கே உதவி புரிந்திருக்கிறாய். சோழ சக்கரவர்த்தியின் குலத்துக்கு மாபெரும் உதவி புரிந்திருக்கிறாய். இதற்குப் பிரதியாக நான் ஏதாவது செய்யா விட்டால் என் மனம் நிம்மதியடையாது" என்றான்.

"இதையெல்லாம் நீ உண்மையாகச் சொல்லுகிறாயா? அல்லது உலகத்திலுள்ள மற்ற ஆண் மக்களைப் போல் வஞ்சகம் பேசுகிறாயா?"

"சமுத்திரராஜன் அறியச் சத்தியமாகச் சொல்கிறேன்."

"அதாவது தண்ணீரில் எழுதி வைக்கிறேன் என்கிறாயா?"

"ஆகாசவாணியும் பூமாதேவியும் அஷ்ட திக்குப் பாலகர்களும் சூரிய சந்திரர்களும் அறிய ஆணையிட்டுச் சொல்லுகிறேன்."

"உன்னுடைய சத்தியத்தையும் ஆணையையும் நம்பி நான் சொல்ல

வில்லை. பொய் சொல்லும் வஞ்சகர்கள் சத்தியத்துக்கும் ஆணைக்கும் மட்டும் பயந்து விடுவார்களா? உன்னை முதன் முதல் பார்த்தவுடனேயே நீ நல்லவன் என்று எனக்குத் தோன்றியது. ஆகையினால், சொல்லுகிறேன்...''

''முதலில் தோன்றிய எண்ணந்தான் எப்போதும் மேலானது; அதை நீ மாற்றிக் கொள்ள வேண்டாம்.''

''பொன்னியின் செல்வரைப் பார்த்து அவரிடம், ஓலையைக் கொடுத்த பிறகு, சொல்ல வேண்டியதையெல்லாம் பேசிய பிறகு, அவர் அவகாசமாக இருக்கும்போது, **'சமுத்திர குமாரியை உங்களுக்கு ஞாபகம் இருக்கிறதா?'** என்று கேள். 'ஞாபகம் இருக்கிறது' என்று அவர் சொன்னால், 'அவள்தான் எனக்குப் படகு வலித்துக் கொண்டு வந்து இலங்கையில் இறக்கி விட்டாள்' என்று கூறு!''

பூங்குழலி! அவ்வளவு உயரத்திலேயா நீ பறக்கப் பார்க்கிறாய்? சிட்டுக்குருவி ஒன்று சுகன ராஜாவாகிய கருடன் பறக்குமிடத்துக்கு நானும் போவேன் என்று பறக்கத் தொடங்கலாமா? இது உனக்கு நல்லதல்லவே? – இவ்வாறு வந்தியத்தேவன் மனத்தில் எண்ணிக் கொண்டான். வெளிப்படையாக, ''இதைச் சொல்லத்தானா இவ்வளவு தயங்கினாய்? என்னமோ பெரிதாகக் கேட்கப் போகிறாய் என்று நினைத்தேன். இளவரசரிடம் கட்டாயம் நான் சொல்லுகிறேன்! அவர் கேட்காமற் போனாலும் நானே சொல்லுகிறேன்!...

''ஐயையோ! அவர் கேட்காவிட்டால் நீயாக ஒன்றும் சொல்ல வேண்டாம்!''

''அதெல்லாம் முடியாது; சொல்லித்தான் தீருவேன்.''

''என்ன சொல்லுவாய்?''

''நடந்தது நடந்தபடிதான் சொல்லுவேன். 'இளவரசே! பொன்னியின் செல்வரே! சமுத்திர குமாரியை உங்களுக்கு ஞாபகம் இருக்கிறதல்லவா? ஞாபகம் இல்லாவிட்டால், இப்போது ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள்! அவள்தான் என்னைப் பழுவேட்டரையரின் கொலைகார ஆட்களிடம் சிக்காமல் காப்பாற்றினாள். அவள்தான் தன்னந்தனியாகப் படகு தள்ளிக் கொண்டு வந்து என்னை இலங்கையில் சேர்த்தாள். கடலில் விழுந்து தத்தளித்து என்னை அவள்தான் காப்பாற்றிப் படகில் ஏற்றி விட்டாள். சமுத்திர குமாரியின் உதவியிராவிட்டால் நான் உயிருடன் உங்களை வந்து பார்த்திருக்க முடியாது. இந்த ஓலையும் உங்களுக்குக் கிடைத்திராது!' என்று சொல்லுவேன். சரிதானே?''

''இதுவரை சொன்னது சரிதான். மேலும் ஏதாவது சேர்த்துக் கொண்டு விடாதே! இதையெல்லாம் நான் அவரிடம் சொல்லச் சொன்னதாகச் சொல்லி விடாதே!''

''சேச்சே! என்னை முழுப் பைத்தியம் என்று நினைத்தாயா?''

''இளவரசர் அதற்கு ஏதேனும் மறுமொழி சொன்னால், அதை உள்ளது உள்ளபடி என்னிடம் சொல்ல வேண்டும். கூட்டியோ, குறைத்தோ சொல்லக் கூடாது.''

''உன்னை மறுபடி நான் எங்கே பார்ப்பது?''

''என்னைப் பார்ப்பதில் என்ன கஷ்டம்? கோடிக் கரையிலோ, இந்தப் பூதத் தீவிலோ, அல்லது இரண்டுக்கும் மத்தியில் படகிலோ இருப்பேன்.''

''ஊருக்குத் திரும்பும்போது இந்த வழியாக வந்தால் பூதத் தீவில் நீ இருக்கிறாயா என்று பார்க்கட்டுமா?''

''தீவுக்குள்ளே எந்தக் காரணத்தைக் கொண்டும் வரக் கூடாது; வந்தால் விபரீதமாகும். இந்தப் படகு கடலோரத்தில் இருக்கிறதா என்று பார்! இருந்தால், ஏதாவது ஓர் அடையாளம் வைத்துக் கொண்டு சத்தம் செய்! நான் நேற்றுக் குயில் மாதிரி கூவினேனே, அந்த மாதிரி நீ கூவ முடியுமா?...



''குயில் மாதிரி கூவ முடியாது! ஆனால் மயில் மாதிரி சத்தம் செய்வேன். இதைக் கேள்!''

வந்தியத்தேவன் வாயைக் கையினால் மூடிக் கொண்டு மயில் கத்துவது போன்ற கோரமான குரலில் கத்திக் காட்டினான்.

அதைக் கேட்டுப் பூங்குழலி கல கல வென்று சிரித்தாள்.

படகு நாகத்தீவின் கரையை அணுகியது. இருவரும் படகிலிருந்து இறங்கினார்கள். வந்தியத்தேவன் கரையில் ஏறி விடை பெற்றுக் கொண்டான். பூங்குழலி படகைத் திருப்பினாள். வந்தியத்தேவன் சபலத்துடன் திரும்பிப் பார்த்தான். ''உன்னுடன் வருகிறேன்'' என்று சொல்லி அவளும் வரமாட்டாளா என்ற ஆசை அவன் மனத்தில் இன்னமும் கொஞ்சம் இருந்தது. ஆனால் பூங்குழலி அவனைக் கவனிக்கவேயில்லை. அதற்குள் அவள் கனவு லோகத்தில் சஞ்சரிக்கப் போய் விட்டாள் என்பதை அவள் முகம் எடுத்துக் காட்டியது.

(தொடரும்)

**கல்கி கலெக்ஷன்**

***இவ்வாண்டு எண்பதாவது வயதில் அடியெடுத்து வைக்கிறார் டி.கே. பட்டம்மாள். அவர் பதினெட்டு வயது யுவதியாகப் பாடியபோது எழுதப்பட்ட கட்டுரை இது. கல்கி தீர்க்கதரிசனத்துடன் குறிப்பிட்டது போலவே டி.கே.பி ஹிருதய பாவ சங்கீதத்துக்குப் பெயர் பெற்றவராகி இசையுலகில் உன்னதமான நிலையை அடைந்திருக்கிறார்.***

# பட்டம்மா பாட்டு

இந்த 1936-ம் வருஷத்தில் சங்கித வானத்தில் ஒளி வீசும் புதிய நட்சத்திரம் ஸ்ரீமதி D.K. பட்டம்மாள். சென்னையில் இவ்வருஷம் அடிக்கடி ஏதேனும் ஒரு சபையில் இவருடைய கச்சேரி நடந்து கொண்டிருந்தது. சமீபத்தில் மயிலாப்பூர் சங்கித சபையிலும், கோகலே ஹாலிலும் இவர் செய்த கச்சேரிகள், இவ்வருஷ ஆரம்பத்தில் நமக்கு இவரைப் பற்றி ஏற் பட்ட நம்பிக்கையை மெய்ப்படுத்தின.

... ... ... ... ... ... ... ... ...

காங்கிரஸ் தலைவர் ஸ்ரீமான் எஸ். சத்தியமூர்த்தி அவர்களுக்கு சங்கித்தில் ரொம்பக் 'கிறுக்கு' உண்டென்பது நேயர்கள் அறிந்ததே. சட்டசபையில் பக்கத்து ஆசனத்தில் படுத்திருந்தவரைப் பார்த்து "ஏன் பள்ளிகொண்டீர், ஐயா!" என்று அவர் பாடத் தொடங்கியதாகக் கேள்வி. சங்கீதம் சம்பந்தமாகச் சில திட்டமான அபிப்பிராயங்கள் அவருக்கு உண்டு; அவைகளை அப்பட்டமாகப் போட்டு அவர் உடைத்தும் விடுவார்.

சென்ற வருஷக் கடைசியில் காங்கிரஸ் மண்டபத்தில் நடந்த சங்கித விழாவின் போது ஒரு நாள் அவர் "ஸ்திரீகள்தான் பாட வேண்டும்; புருஷர்கள் பாடக் கூடாது; புருஷர்கள் பாட்டு சொல்லித் தான் கொடுக்கலாம்" என்றார். அதற்கு, ஸம்ஸ்கிருத சுலோகத்திலிருந்து ஆதாரமும் எடுத்துக் காட்டினார். ஸ்திரீ சாரீரத்தில் தான் இனிமை உண்டென்பது அவர் கருத்து.

இது ஒரு கட்சி. இதற்கு மாறான கட்சிக்காரர்களும் இருக்கிறார்கள். இவர்கள் "சிவ சிவா! ஸ்திரீகள் பாடுவதும் பாட்டா? வழவழ குழகுழவென்று இழுத்தால் பாட்டாகி விடுமா? தாளம் பேதாளந்தான்! தாளக்கட்டு இல்லாத பாட்டு என்ன பாட்டு?" என்பார்கள்.

இந்த இரண்டு கட்சிக்காரர்களும் ஸ்ரீமதி பட்டம்மாள் பாட்டில் திருப்தியடைய இடமுண்டு. நலங்கிலும் ஊஞ்சலிலும் தவிர ஸ்திரீகள் பாட்டு என்று வாய் திறக்கக் கூடாது என்று சொல்பவர்கள்கூட, ஸ்ரீமதி பட்டம்மாள் பாடலாம் என்று ஒப்புக் கொள்வார்கள்.

உயர்தர சங்கீதத்தில் செவிக்கு இன்பமும், மூளைக்கு உற்சாகமும், இருதயத்துக்கு உணர்ச்சியும் அளிக்கும் அம்சங்கள் இருக்க வேண்டுமென்று பார்த்தோம். இந்த மூன்று முக்கிய அம்சங்களுக்கும் அஸ்திவாரம்



• டி.கே. பட்டம்மாள் இன்றும்....

அதுபோலவே, அபிப்பிராய பேதத்துக்கு இடமின்றி எல்லாரும் ஒப்புக்கொள்ளக் கூடிய சாரீரம் ஸ்ரீமதி பட்டம்மாளுடையது. கீச்சுக்குரல் இல்லாமல் சுகபாவம் உள்ளது. துரித காலத்தில் பிர்காக்கள் போடுவதற்கும், சவுக்க காலத்தில் நின்று பாடுவதற்கும் ஏற்றதாய்



.... அன்றும்

ஸ்ரீமதி பட்டம்மாளின் பாட்டில் அமைந்திருக்கிறது.

**சாரீரம்:** இவருடைய சாரீரத்தில் இனிமையும் கம்பீரமும் கலந்திருப்பதைக் காண்கிறோம். ஸ்திரீகளுக்குள் இத்தகைய சாரீரம் அமைவது மிகவும் துர்லபம்.

எது இனிமையான சாரீரம் என்பதைப் பற்றிக் கூட அபிப்பிராய பேதத்துக்கு இடமுண்டு என்று சொல்லியிருக்கிறேன். சிலருக்குக் கீச்சுக்குரல்தான் இனிமையான குரலாகத் தோன்றும்; வேறு சிலரோ கீச்சுக் குரலைக் கேட்டால் காதைப் பொத்திக் கொள்வார்கள். இரட்டை நாத சாரீரத்தில் தான் சிலர் பூரண சுகபாவத்தைக் காண்பார்கள்; வேறு சிலர் அதையே "மூக்கால் பாடுவது" என்பார்கள். அபிப்பிராய பேதத்துக்கு இடமில்லாமல் எல்லாரும் ஒப்புக் கொள்ளக்கூடிய சாரீரம் சிலருக்குத் தான் உண்டு.

ஸ்திரீகளுக்குள் இன்னும் இது அருமை. உதாரணமாக, ஸ்ரீமதி பால சரஸ்வதியின் தாயார் ஸ்ரீமதி ஜயம்மாள் அத்தகைய மேலான சாரீரத்தைப் பெற்றிருக்கிறார்.

**அமரர் கல்கி**

அமைந்தது. பெரிய சபைகளில் கடைசி வரையில் கேட்கும்படியான கம்பீரமும் பொருந்தியது.

**வித்தை:** சுருதி, லயம் இரண்டிலும் அணுவளவு குறை சொல்வதற்கு இடமில்லாமலிருப்பது மட்டுமல்ல; ஸ்வரங்களைக் கையாளுவதிலும், தாள வித்தையிலும் இவரிடம் சில அபூர்வ வேலைப்பாடுகளைக் காண்கிறோம்.

இவர் ஸ்வரஜதிகள் பாடும்போது, ஸ்ரீமான் ராஜரத்தினத்தைப் போல், இனிமை குன்றாமல் வக்கிரமாக ஸ்வரங்களைச் சேர்க்கும் சக்தி வெளியாகிறது. நாலுகளைச் சவுக்கப்பல்லவி மூன்றாவது அட்சரத்தில் எடுத்து, அதை மூன்று காலங்களிலும் பாடுகிறார். சதுச்ர நடையிலிருந்து திச்ர நடைக்கும் திச்ர நடையிலிருந்து சதுச்ர நடைக்கும் மாறுகிறார். இது மிகவும் அபூர்வமான திறமை; காலஞ் சென்ற நாயனாப் பிள்ளை அவர்களினால் சமீப காலத்தில் திறமையுடன் கையாளப்பட்டு அவருக்கு அழியாத புகழைத் தந்தது. உண்மையில் ஸ்ரீமதி பட்டம்மாள், தாள வித்தையைப் பொறுத்த வரையில்

நாயனாப் பிள்ளையைப் பின்பற்றுகிறார் என்று சொல்லலாம்.

ஸ்ரீமதி பட்டம்மாளின் மற்றொரு விசேஷ திறமையையும் காண்கிறோம். உயர்தர வித்வான்களை அப்படியே பின் பற்றிப் பாடும் சக்தி அவரிடம் இருக்கிறது. ஸ்ரீமான்கள் நாயனாப்பிள்ளை, அரியக்குடி இராமானுஜ அய்யங்கார், முசிரி சுப்பிரமணிய ஐயர், செம்மங்குடி சீனிவாச அய்யர். இவர்களிடம் நாம் ரொம்பவும் அனுபவித்திருக்கும் பாட்டுக்கள் சிலவற்றை இவர் போட்டோ பிடித்தது போல் பாடுகிறார். சுய ஞானம் இல்லாமல் வெறும் 'இமிடேஷன்' செய்வதாக மட்டுமிருந்தால் நமக்குச் சிரிப்புத்தான் உண்டாகும். அப்படியின்றி இவர் அந்தச் சரக்குகளையெல்லாம் தம்முடையதாகவே ஆக்கிக் கொண்டு அனுபவத்துடன் பாடுகிறபடியால், நமக்கு வியப்பும் உவகையும் உண்டாகின்றன. ஒவ்வொரு வித்வானிடத்தும் உள்ள நல்ல அம்சங்களையெல்லாம் ஏற்க வேண்டுமென்னும் ஆர்வத்துக்கும் முயற்சிக்கும் அந்த 'போட்டோ' பாட்டுக்கள் அறிகுறியாகின்றன. மேற்கண்ட வித்வான்களுடைய பாணிகளெல்லாம் ஒன்றுடன் ஒன்று மாறுபட்டு நிற்பவை. அப்படி மாறுபட்ட வழிகளையெல்லாம் கற்றுக் கொண்டு, பாடி வெற்றியடைவது ஓர் அதிசயமான திறமையென்பதில் சந்தேகமில்லை.

**ஹிருதய பாவம்:** பிரசித்த வித்வான்களில் கூட இரண்டொருவரிடந்தான் நாம் கண்டிருக்கும் இந்த அம்சத்தை இந்த யுவதியிடம் எதிர்பார்க்க முடியாது. ஆனால் இந்த அம்சமும் வருங்காலத்தில் இவருடைய பாட்டில் நன்கு பிரகாசிக்கும் என்று நம்புவதற்கு இடமிருக்கிறது. ஸாஹித்யத்தில் கவனம் செலுத்தி அக்ஷரங்களைச் சுத்தமாக உச்சரித்துப் பாடுகிறார். அவற்றின் பொருளையும் உணர்ந்து, சொற்களை இசையுடன் கலந்து பாடத் தொடங்கும்போது, உயர்தர சங்கீதத்தில் நாம் எதிர்பார்க்கும் எல்லா அம்சங்களும், இவருடைய பாட்டில் பொருந்தி விளங்குவதைக் காண்போம்.

இளம் வயதிலேயே சங்கீத வித்தையில் பிரசித்தியடைபவர்களின் அபிவிருத்திக்கு ஒரு பெரிய தடை ஏற்படுவதுண்டு. அவர்களுக்கு அடிக்கடி கச்சேரிகள் கிடைக்கின்றன; பக்கத்திலுள்ளவர்கள் அசாத்தியமாய்ப் புகழ்கிறார்கள். ஆகவே மற்ற சிறந்த வித்வான்களின் பாட்டுகளைக் கேட்பதற்கு சந்தர்ப்பமும், ஊக்கமும் அவர்களுக்கு இல்லாமல் போய் விடுகின்றன. ஆகவே, ஓரிடத்திற்கு வந்ததும் அதற்கு மேல் அபிவிருத்தியடையாமலே நின்று விடுகிறார்கள். ஸ்ரீமதி பட்டம்மாள் விஷயத்தில் அப்படி ஏற்படக் கூடாதென்பது நம்முடைய கோரிக்கை. இதுவரையில் அத்தகைய தடை ஏற்பட்டிருப்பதாகத் தெரியவில்லை. சென்ற ஒரு வருஷ காலத்தில் இவருடைய கச்சேரிகளில் சிறந்த அபிவிருத்தியைக் காண்கிறோம். "முன்னுராவணா" "சிவே பாஹிமாம்" "மானஸ குருகுஹ" "அக்ஷயலிங்க விபோ" முதலிய கீர்த்தனங்கள் வர வர மெருகு பெற்று வருகின்றன. கல்யாணி, தோடி, கரகரப்ரியா, ஜகன் மோஹினி, மலய மாருதம் முதலிய ராகங்களின் ஆலாபனமும் நாளுக்கு நாள் சிறப்படைந்து வருகிறது. புதிய கீர்த்தனங்களும் கற்றுப் பாடி வருகிறார். மேலே குறிப்பிட்ட இரண்டு கச்சேரிகளில் ஸ்ரீமான் கோடீசுவரய்யர் அவர்களின் "வாரணமுக" என்னும் ஹம்ஸத்வனி கீர்த்தனமும், "ஐயனே – எனை ஆட் கொள் மெய்யனே" என்னும் காம்போதி கீர்த்தனமும் மிகவும் நன்றாய் சோபித்தன. இப்படியே அபிவிருத்தி யடைந்து வந்தால், சங்கீத உலகத்தில் ஸ்ரீமதி பட்டம்மாள் தனிச்சிறப்பு வாய்ந்த பதவியை அடைவார் என்பதில் சந்தேகமில்லை.

**(ஆனந்தவிகடன் (1936) இதழில் அமரர் கல்கி எழுதியது.)**

# இந்திய கிரிக்கெட் அணியின் உணவுப் பழக்கத்தை மாற்றியவர்!



• ஆண்ட்ரு கோகினோஸ்

• வீரர்களுக்குப் பயிற்சி...

**ஆண்ட்ரு கோகினோஸ் (Andrew Kokinos) இந்திய கிரிக்கெட் அணியின் உடற்பயிற்சியாளர். 22 வயதான இவர், இனத்தால் கிரேக்கர் என்றாலும் இரண்டு தலைமுறைகளாக ஆஸ்திரேலியாவில் செட்டில் ஆனவர்கள். மெல்பர்ன் பல்கலைக் கழகத்தில் உடற்கல்வியில் முதுநிலைப் பட்டம் பெற்ற இவர், இந்திய அணியின் பயிற்சியாளராக வந்தவுடன் அதிரடி மாற்றம் தெரிய ஆரம்பித்து விட்டது. அப்படி என்னதான் பயிற்சியளிக்கிறார்? சந்தித்துப் பேசினோம்...**

*"கிரிக்கெட் வட்டாரத்தில் அதிக பாப்புலர் ஆகாத நீங்கள் எப்படி இந்திய அணியின் உடற் பயிற்சியாளராக நியமிக்கப்பட்டீர்கள்?"*

"நான் முதுநிலைப் படிப்பைப் படித்துக் கொண்டிருந்தபோதே ஆஸ்திரேலிய இளைஞர் அணியின் கால்பந்துக்குழுவின் பயிற்சியாளனாக இருந்தேன். படிப்பை முடித்தவுடன் மலேசியா கிரிக்கெட் அணியின் பயிற்சியாளனாக அழைத்தார்கள். கால்பந்திலிருந்து கிரிக்கெட்டுக்கு மாறுவதா என்று முதலில் மறுத்தேன். என்

அண்ணன் அறிவுரைப் படி பிறகு ஒப்புக் கொண்டு பணி புரிந்தேன். அந்தச் சமயத்தில்தான் இந்திய கிரிக்கெட் அணியின் கோச்சான பாபி சிம்சனைச் சந்திக்க நேர்ந்தது. இந்திய அணியின் உடற்பயிற்சியாளனாக வரமுடியுமா என்று கேட்டார். வந்து விட்டேன்!"

"நீங்கள் வந்த பிறகு, இந்திய அணியில் ஏதும் முன்னேற்றம் தெரிகிறதா?"

"உங்களைப் போன்ற பத்திரிகையாளர்கள்தானே சொல்ல வேண்டும்! (சிரிப்பு. பிறகு சீரியசாகிப் பேசுகிறார்). இந்திய உணவு முறைதான் இந்திய வீரர்களின் உடலையும் மனத்தையும் பாதிக்கிறது. எங்கும் எதிலும் எண்ணெய் மயம்தான்! கூடவே கொழுப்புச் சத்து அதிகமுள்ள உணவு வகைகள். இதைத் தான் முதலில் மாற்றினேன். இந்திய அணி பெறும் வெற்றிகளுக்கு நானும் ஒரு காரணம் என்று அசாரும், இந்திய கிரிக்கெட் போர்டின் தலைவரும் பாராட்டுகிறபோது எனக்கும் பெருமையாக இருக்கிறது."

"அப்படி என்னதான் மாற்றம் செய்தீர்கள்?"

"கிரிக்கெட் வீரர் யாராயிருந்தாலும் அவருடைய எடை அறுபது கிலோவுக்கு மேல் இருக்கக் கூடாது. இருந்தால் வேகமாக ஓடி ரன் எடுக்க முடியாது. இந்திய அணியில் வயதான ராபின்சிங்கால் எப்படி உடம்பை அத்தனை ட்ரிம்மாக வைத்துக் கொள்ள முடிகிறது? உணவுப் பழக்கம்தான். அசாரும் அப்படித்தான். கால் வயிறுதான் சாப்பிடுவார். நான் வந்த பிறகு அவர்கள் ஐஸ்கிரீம் சாப்பிடுவதை அடியோடு நிறுத்தி விட்டேன். மேட்ச் ஆரம்பிப்பதற்கு இரண்டு மணி நேரத்துக்கு முன்பு அவர்களை நன்றாகச் சாப்பிடச் சொல்வேன். ஆனாலும் அதில் கார்போஹைட்ரேட் அதிகம் இல்லாமல் பார்த்துக் கொள்வேன். இதை அனைவரும் கடைப் பிடிப்பதால் பிரச்னை இல்லை. மேலும் அவர்களின் தோள்பட்டைகளுக்கு நல்ல வலுதேவை. அதற்கும் தனிப்பட்ட பயிற்சிகள்தருகிறேன்!" என்று சொல்லும் கோகினோஸுக்கு ஓர் இந்தியப் பெண்ணைத் திருமணம் செய்து கொள்ளத் தான் ஆசையாம்!

"அப்படியானால் காதல் ஏதாவது..."

"சேச்சே! அதற்கெல்லாம் எனக்கு எங்கே நேரமிருக்கிறது! திருமணம் பற்றிய என் எண்ணத்தைச் சொன்னேன். அவ்வளவு தான்!" ●

சந்திப்பு, படம்: **நந்தினி**

# தீக்குச்சியில் கட்டிய தாஜ்மஹால்!

**சந்திரசேகரன், வயது 29, பி.எஸ்சி பட்டதாரி. ராசிபுரம் அருகே உள்ள ஆலங்காட்டூரில் உள்ள தமிழ்நாடு டுபாக்கோ கம்பெனியில் பணிபுரிகிறார்.**

**நாற்பத்தையாயிரம் தீக்குச்சிகளால் தாஜ்மஹால் செய்துள்ளார். இதன் உயரம் 2 அடி; நீளம், அகலம் 52 செ.மீ.**



**ஒன்றரை ஆண்டுகாலமாக தினமும் அரை மணி நேரம் மட்டும் ஒதுக்கி இந்தச் சாதனையைப் புரிந்துள்ளார். இதற்கு முன்பு பல மாதிரியான கட்டடங்கள் உருவாக்கி, நண்பர்களின் திருமணங்களுக்கு அன்பளிப்பாக வழங்கியுள்ளார்.**

**அடுத்து, அன்னை வேளாங்கன்னி கோவிலை தீக்குச்சியினால் செய்து காட்ட இருப்பதாகக் கூறுகிறார்.**

**தாஜ்மஹால் முழுவதும் தீக்குச்சிகளால் செய்யப்பட்டு மின்சார பல்பும் இணைக்கப்பட்டுள்ளது. மின் இணைப்புக் கொடுத்தால் அழகாக ஜொலிக்கிறது.**

**தகவல்: இடப்பாடி ஐ.கே. சீனிவாசன்**



**மா**ர்ச்சுவரியில் ஆனந்தின் உடல் மேசை மேல் வைக்கப்பட்டிருந்தது. உயிருடன் இருந்திருந்தா தன் நிர்வாணத்திற்கு ஆட்சேபணை தெரிவித்திருப்பான். அதைப் பற்றி எவ்விதக் கவலையுமின்றி போஸ்ட்மார்ட்டம் செய்தவர் ப்ரபாகரராவுடன் பேசிக் கொண்டிருந்தார். "சாயங்காலம் சுமார் ஆறு மணிக்கு இறந்திருக்கணும். பாடி டெம்பரேச்சரை வச்சு சொல்றேன். கொஞ்சம் முன்னே பின்னே இருக்கலாம். எதுக்கும் நீங்க மற்ற சந்தர்ப்ப சாட்சியங்களையும் பார்த்துருங்க."

ப்ரபாகர் ராவ், "துப்பாக்கி குண்டால்தானே சாவு?" என்று கேட்டார்.

"ஆமாம். நேரா மார்புக்கு எதிரே பாயிண்ட் ப்ளாங்க் ரேஞ்சில சுடப்பட்டிருக்கார்."

"உடம்பில ஏதும் போராட்டத்தின் அடையாளங்கள்?"

"இல்லை. முழுக்க முழுக்க சர்ப்ரைசா இருந்திருக்கணும். இல்லை, தெரிஞ்சவங்க யாராவது சுட்டிருக்கணும்."

"எப்படிச் சொல்றீங்க" என்றார் ப்ரபாகர்ராவ் சற்றே ஆச்சரியத்துடன்.

போஸ்ட் மார்ட்டர் உடலைக் காட்டி, "உடம்பில பாருங்க. எந்தவிதமான காயமும் இல்லை. பிறந்த குழந்தை மாதிரி மழமழன்னு இருக்கார்



ராம்."

இருவரும் காரிடாரில் நடந்தார்கள். மனித இயக்கம் ஓயாத ஆஸ்பத்திரி. இரக்கம், கருணை, துக்கம் இவைகளை யெல்லாம் தள்ளிப் போட்டுவிட்ட அசெப்டிக் இயக்கம். "யோவ் அளு வறதா இருந்தா மரத்தாண்டை போய் அழு. சிப் வர்ற நேரம்."

# 3

ப்ரபாகர்ராவ், "அது ஆனந்தின் குரல்னு சொல்ல முடியுமா சங்கர்? போஸ்ட் மார்ட்டம் ரிப்போர்படி ஆறு மணி சுமாருக்கு செத்திருக்கலாம்னார், பாடி டெம்பரேச்சரை வச்சுக்கிட்டு."

சங்கர், "நான் இப்படிப் பார்த்தேன் சார். ஆறு நாலுக்கு ஒரு ப்ளேன் லாண்ட் ஆயிருக்கு. நீங்க சொன்ன ஏரோப்ளேன் சப்தம்னு வெச்சுக்கிட்டா."

"சோமு!"

சங்கர், "அது மட்டும் இல்லை ஸார். ஆனந்தோட கலிக் ஒருத்தர் பேரு டாக்டர் சோமசுந்தர்."

ப்ரபாகர் ராவ், "இஸ் இட்? இண்ட்ரஸ்டிங். வெரி இண்ட்ரஸ்டிங். வா நம்ம ப்ரண்டு ஜமதக்னியை முதல்ல பார்க்கலாம்."

ஜமதக்னியின் வீட்டில் முன் வாசலில் தாழ்வாக இருந்த அலமாரியில் செருப்புகளும் வழக்கொழிந்த செய்தித்தாள்களும் அடுக்கியிருந்தன. தரைக்கு மொசேய்க் போடாமல் ரெட் ஆக்ஸைடு போட்டு சிக்கனம் பண்ணியிருந்தார். எப்படியும் க்வார்ட்டர்ஸ் கிடைத்துவிடும். வாடகைக்குத்தானே விடப் போகிறோம் என்று சிக்கனமாகவே கட்டியிருந்தார். பணசங்கரியில் மூவாயிரம் வாடகையும் முப்பதாயிரம் அட்வான்ஸும் கேட்கலாம். கொடுப்பதற்குத் தயாராக இருக்கிறார்கள். கிணற்றில் நல்லவேளை பத்து அடியிலேயே கல்கண்டு போல நீர் வந்து விட்டது. தென்னை மரம் அவசரமாகக் காய்க்க ஆரம்பித்துவிட்டது. ஜமாவுக்கு (செல்லப் பெயர்) வாழ்வில் எல்லாம் நிரம்பிவிட்டது என்று எண்ணிக் கொண்டிருந்தவருக்கு இந்த ஆனந்த் போய் சிக்கல் பண்ணிவிட்டார். வீடு நிரம்ப போலீசும் நாய்களும்!

ஜமதக்னி கவலையோடு உட்கார்ந்திருக்க, மனைவி அறைவாசலில் நிலைப்படியில் நின்று கொண்டிருக்க, உதயா டீவி. ஓடிக் கொண்டிருந்தது. ப்ரபாகர் ராவ், "டீவியை நிறுத்திடுங்க" என்றார். "மிஸ்டர் ஜமதக்னி நீங்கதானே போன் செய்தீங்க?"

"ஆமா ஸார். வேலைக்காரி ஷாமிலி அலறிக் கிட்டே வந்தா. அலறலைக் கேட்டதும் போன் செய்தேன்.

ப்ரபாகர், "அதாவது அவ உங்க வீட்டில் வந்து சொல்றதுக்குள்ள நீங்களே போன் பண்ணிட்டீங்க."

சுஜாதா

பாருங்க. ஒரே ஒரு கன்ஷாட் காயம்."

இப்போது ஏ.எஸ்.பி. வந்து காத்திருந்தார். ப்ரபாகர் ராவ் "என்ன சங்கர்?"

"ஸார் 100 கண்ட்ரோல் ரூமிலிருந்து இந்த நோட் வந்தது. சாயங்காலம் ஆறு அஞ்சுக்கு யாரோ போன் பண்ணிருக்காராம். ரொம்ப உயிருக்கு திணர்ற மாதிரி குரல் கேட்டுச்சாம். சிரமத்தோட 'சோமு'ன்னு ஒரே ஒரு வார்த்தை மட்டும் சொன்னா

ஜமதக்னி பெருமையுடன், "ஆமா ஸார், என் கடமையைச் செஞ்சேன்."

"ஆனந்த் வீட்டில் போய்ப் பார்க்காம, எப்படி ஆனந்த்தான் செத்தான்னு சொன்னீங்க?"

ஜமதக்னி சற்றே பயந்து, "அந்த வீட்டில் அவர் ஒருத்தர்தான் இருந்தார். சம்சாரம் ஊருக்குப் போயிருந்தாளே."

"துப்பாக்கிச் சப்தம் கேக்கலைன்னீங்க."

"கேக்கலை."

"வேலைக்காரி எலியைக் கண்டு கூட



"எங்க பையன் யார் பேச்சையும் கேக்க மாட்டான். கொஞ்சம் செல்லமா வளர்ந்துட்டான்."
"அதுக்காக புரோகிதர் சொல்ற மந்திரத்தைக் கூட திருப்பிச் சொல்லாம நீ என்ன சொல்றதுனு சண்டைக்குப் போறது சரியாப் படலை."
– சி.பி. செந்தில்குமார்

அலறியிருக்கலாம் இல்லையா? எப்படி ஆனந்த் செத்துப் போய்ட்டார்னு உடனே போன் பண்ணிருக்கீங்க?"

"ஸார், எனக்கென்னவோ அவ அலற லைக் கேட்டால் கொலை நடந்திருக் கணும்னு தோணிச்சு."

"தோணிச்சா, இல்லை உங்களுக்கு நடந் தது முன்னமே தெரியுமா?"

ஜமதக்னி துடித்து, "அய்யோ! என்ன ஸார் சொல்றீங்க!"

அப்போது மனைவி கசிலா வலுக்கட் டாயமாகக் குறுக்கிட்டு, "இப்படித்தான் இவர் பஞ்சதந்திரக் குரங்கு மாதிரி தானே மாட்டிப்பார் ஸார். நீங்க இவர் மூஞ்சியைப் பாருங்க" என்று புருஷன் முகத்தை நிமிர்த்தி, "கொலை செய்யற மூஞ்சியா இது?" என்றாள். பெரிசாக அம்மன் குங்குமம் இட்டு இரண்டு மூக்கிலும் குத்தி யிருந்தாள்.

ப்ரபாகர்ராவ், "கொலை செய்ததா யார்ம்மா சொன்னாங்க? இவருக்கு எப்படி தெரிய வந்ததுன்னுதான் விசாரிக்கிறோம். எங்க வேலை பாக்கறீங்க?"

"ஆனந்த் ஆபீஸ்லதான். நான் ஒரு கிளார்க்கு."

"அவருக்கு யாரும் விரோதி இருந் தாங்களா?"

ஜமதக்னி வெளிச்சம் தன்னிடமிருந்து விலகுவதில் சற்று உற்சாகப்பட்டு, "விரோதி வைரின்னு பார்த்தா கொல்ற அளவுக்கு யாரும் இல்லை. ஆனா இந்த சோமசுந்தர்..."

ப்ரபாகரும் சங்கரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள்.

"சொல்லுங்க."

ஜமதக்னி, "டாக்டர் சோமசுந்தருக்கும் இவருக்கும் எப்போதுமே ரைவல்ரி. ஒப்பனா சண்டை கூட வந்தாச்சு. இவர் கண்டுபிடிச்சதை அவர் பயன்படுத்தி னார்னு அவார்டு பங்ஷன்ல ஆனந்த் சொல்லிக்கிட்டு இருந்தார். எல்லா உண்மை யையும் வெளிப்படுத்திரப் போறேன்னு. சோமசுந்தர், ஆனந்த் மாதிரி பிரிலியன்ஸ் கிடையாது. இவருடைய ஐடியாவெல்லாம் அவர் திருடி பி.எச்டி வாங்கினதா பேச்சு. அதை நான் சொன்னேன்னு சொல்லாதீங்க சார். ஆபீஸ் பாலிட்டிக்ஸ். நான் பாட்டுக்கு எதாவது உளறிட்டு."

"டாக்டர் சோமசுந்தர்!" ப்ரபாகர் ராவின் முகம் மலர்ந்தது. சங்கர், "அவரை சோமுன்னு கூப்பிடுவாங்களா?"

"இருக்கலாம். நாங்க எல்லாரும் டாக் டர்னுதான் கூப்பிடுவோம், மரியாதையா."

ஜமதக்னி இப்போது மிகவும் மரியா தையாக நடத்தப்பட்டார். "நீங்க எதும் கவலைப்படக் கூடாது. எங்களுக்கு விவ ரமா உங்க ஆபீஸ்ல நடந்த எல்லாத்தையும் சொன்னீங்கன்னா குற்றவாளியைக் கண்டு பிடிக்க உபயோகமா இருக்கும்."

கசிலா, "அதான் எல்லாம் சொல் லிட்டாரே."

"பயப்படாதீங்கம்மா. உங்க கணவரை எதும் செய்ய மாட்டோம். சும்மா என்னு டைய ஆபீசுக்கு அழைச்சுட்டுப் போய் ஒண்ணு ரெண்டு கேள்விகள் கேட்டுட்டு

விட்டுருவோம்."

"இப்பவேவா?"

"இப்பவே. போலீசுக்கு நேரம் காலம் எதும் கிடையாதம்மா."

"அவர் இன்னும் ராகி கஞ்சி சாப்பிடலியே."

"சாப்பிடட்டும். காத்திருக்கோம்."

சுசிலா, "அவருக்கு ஒண்ணும் ஆபத்து இல்லைதானே?" என்றாள் கவலையுடன். "நீங்களே சொன்னீங்களே. இந்த மூஞ்சியைப் பாத்தா கொலை செய்யற முகமா"ன்னு.



**"ஆபீஸ்லயிருந்து வர ஏன் இவ்வளவு நேரம்?"**
**"ஹெட் ஊர்க் இன்னிக்கு லீவு!"**
**"அவர் வேலையையும் சேர்த்துப் பார்க்க வேண்டியிருந்ததா?"**
**"இல்லை! அவர்தான் தினமும் என்னை எழுப்பி விடுவார். இன்னிக்கு நானா எழுந்து வர லேட்டாயிடுச்சு!"**
**– மேல் மங்கலம் பத்ரா**

ப்ரபாகர்ராவின் அலுவலகத்தில் ஜமதக்னிக்கு காப்பி பலகாரங்கள் வர வழைக்கப்பட்டன. விசிட்டர்கள் வராமல் கதவைத் தாளிட்டுக் கொண்டு சங்கரும் ப்ரபாகர் ராவும் மட்டும் அவருடன் தனியாக இருந்தார்கள். "வருஷா வருஷம் ஆர்யபட்டா அவார்டுன்னு கொடுப்பாங்க ஸார். லாப்ல அந்த வருஷத்து மிகப் பெரிய கண்டுபிடிப்புக்காக. பத்தாயிரம் ரூபாய் காஷ். அதை விட முக்கியமா ஒரு கேடயம், சர்ட்டிபிகேட்டு. ஆனந்தின் லாப்ல போனீங்கன்னா அலமாரி நிறைய புத்தகங்களா இருக்கும். பச்சைப் பலகையில் புரியாம சிக்கலான கணக்குகள் போட்டுக்கிட்டே இருப்பார். அவர் ஒரு மேதைன்னு எல்லாரும் பேசிக்கிட்டாங்க. இதற்கு எதிரா சோமசுந்தர் மேசை க்ளீனா இருக்கும். அவர் லாப்ல பாலிட்டிக்ஸ் பேசியே, அவனை இவனை குழாயடிச்சே ப்ரமோஷன் வாங்கிட்டார்னு எங்க எல்லாருக்குமே தெரியும். அதுவும் இந்த முறை ஆர்யபட்டா அவார்டு வாங்கியது எல்லாருக்கும் ஆச்சரியம், ஆனந்துக்குக் கொடுக்காம இவருக்கு எப்படி கொடுத்தாங்கன்னு. எனக்கு நல்லா ஞாபகம் இருக்கு. அவார்டு அறிவிச்ச தினம். ஒப்பன் ஆபீஸ் பக்கத்திலேயே இருந்ததாலே ஆனந்துடைய கயுபிக்கிள்ள நடந்தது எல்லாம் எனக்கு தெளிவாக் கேட்டுது. சோமசுந்தர் வந்து, "ஆனந்த் நீ மட்டும் ஏன் என்னை கங்கிராஜுலேட் பண்ணலை?"ன்னு கேட்டார். ஆனந்த் எதுக்குன்னார். "இந்த வருஷம் ஆர்யபட்டா அவார்டு எனக்கு, தெரியுமில்லைன்"னார். இப்படியே சொன்னார் "Joke of the year! வருஷம் முழுக்க ரிஸர்ச்சுன்னு ஒரு துரும்பைக்கூட இந்தாண்டை நகர்த்தலை நீ. உனக்குப் போய் அவார்டா? நேரம்பா! எதுக்கு அவார்டு உனக்கு?"னு கேட்டப்ப, "ரிமோட் பைலட்லஸ் டார்ஜெட் வெஹிக்கிளுக்கு"ன்னு அவர் சொன்னதுமே ஆனந்துக்கு முகமெல்லாம் வெளிறிப்போய்டுத்து. "அடப்பாவி அது நான் கண்டுபிடிச்சதுடா"ன்னார். சோமசுந்தர் "இனிஷியல் கான்செப்ட்தான் உன்னுதே ஒழிய, எக்ஸிக்யூஷன் எல்லாம் என்னுதுன்னு" பொய் சொன்னார். ஆனந்த் "நாசமாப் போனே! கடைசி ட்ராயிங் ப்ரோட்டோடைப் வரைக்கும் பண்ணது யாரு?"ன்னு கேட்டதும் ஒர்க் பண்ணலையேப்பான்னு கூலா பொய் சொல்றார். ஆனந்த் கடும் கோபமாகி "To hell with you it did work damit"னு கத்தினார். இவர் அலட்டிக்காம, "உணர்ச்சி வசப்படாதே. மேனேஜ்மெண்ட் என் ஒர்க்கை பரிசிலித்துத்தான் கொடுத்திருக்காங்களார். ஆனந்த் கேவலமா பேச ஆரம்பிச்சுட்டார். அவர் கோபம் நியாயமானதுதான் ஸார்."

"என்ன சொன்னார்?" என்றார் பிரபாகர். இப்போது அந்த ஆபீசின் ரகசியங்கள் வெளிவர கொஞ்சம் தெளிவு வந்திருந்தது.

"டைரக்டர் சம்சாரத்துக்கு சானிட்டரி டவல் வாங்கிக் கொடுக்கறவன்லாம் சைன்டிஸ்ட்டு! ஆர்யபட்டா அவார்டு!"ன்னதும் சோமசுந்தருக்கும் கோபம் வந்துருச்சு. ஆனந்த் அந்து மீறிப் பேசறேன்னு எச்




**சூப்பர் ஸ்டார் அமிதாப்பச்சனின் அண்மைக்காலப் படங்கள் அடிவிழ, அவருடைய ABCL கம்பெனி பொருளாதாரம் படு வீழ்ச்சி காணத் தொடங்கிவிட்டது. வேறு வழி என்ன என்று யோசித்த அமிதாப், மாடலிங் செய்து பல விளம்பரங்களில் நடித்து வருகிறார்.**

**சாதாரணமாக விளம்பரத்தில் நடிக்க வருபவர்கள், சாப்பாடு, டிரஸ், கார் வசதி எல்லாம் செய்து கொடுக்க வேண்டும் என்று கம்பெனியை ஆட்டிப் படைத்து விடுவார்கள். அமிதாப்பச்சன் அப்படியெல்லாம் நடந்து கொள்ளவில்லை. தம் வசமிருந்த ஏராளமான உடைகளைப் பயன்படுத்திக் கொள்ள முன்வந்ததுடன் வித்தியாசமாக விளம்பரத்தில் போட்டுக் கொண்டு வந்த தபால்கார உடையை அவரே லாண்டரி செய்து திருப்பியும் கொடுத்து விட்டார்!**

**''என்ன இருந்தாலும் அமிதாப் அமிதாப்தான்''– என்றார்கள் விளம்பரத் தயாரிப்பாளர்கள்.**

**ஆதாரம்: 'தி வீக்'**
**தகவல்: சேலம் சக்திக்கொடி**

சரித்தார். ஆனந்த், "நான் டைரக்டரை கேக்கத்தான் போறேன்னாரு."

"உனக்கு பொறாமை"ன்னார்? "பாரு சோமசுந்தர், திறமை இல்லாதவன்தான் பொறாமைப்படுவான். நீ அவார்டு வாங்கு, எனக்குப் பொறாமை இல்லை. ஆனா என் ஐடியாவைத் திருடி வாங்கற பாரு? அது தப்பு. என் பேரையாவது ரிப் போர்ட்ல குறிப்பிட்டிருக்கியா? ஜமதக்னி அவர் ரிப்போர்ட் இருக்கா ஜர்னல்ல?"னு படக்குனு என்னைக் கேட்டார். நான் ரிப்போர்ட்டை மௌனமா கொண்டு வந்து காட்டினேன். ஆனந்த் அதை பிரித்துப் பார்த்து, "அநியாயம்பா. உனக்கு மனச்சாட்சியே கிடையாதா? என் ரிஸர்ச் நோட்புக்லருந்து அப்படியே தட்டிட்டியே"ன்னு கத்தினார்.

"சோமசுந்தர், "ஒரே ஐடியா ரெண்டு பேருக்கு உதயமாகாதா"ங்கறார். ஆனந்த், ரிப்போர்ட்டை மறுபடி பார்த்து "டைமென்ஷன் கூட மாத்தலை. இது திருட்டுப்பா"ன்னு டைரக்டர் ரூமுக்கு ஓடினார். என்னையும் கூப்பிட்டார் சாட்சிக்கு. டைரக்டர் கான்பரன்ஸ்ல இருந்தார். அவ்வளவு பேர் உக்காந்திருக்காங்க. இவர் புயல்போல நுழையறார். ஆனந்த், "உங்களை அவசரமா பார்க்கணும் ஸம்திங் வெரி அர்ஜெண்ட்!"

"டைரக்டர் அவர்களை எல்லாம் அனுப்பிச்சுட்டார். என்னை இருக்கச் சொன்னார். ஆனந்த், எப்படி ஸார் சோமசுந்தருக்கு ஆர்யபட்டா அவார்டு கொடுக்கலாம். டிசைன் கண்டுபிடிச்சது நானுன்னார். டைரக்டர் "போர்டு ரெக்கமண்டேஷன்பா. நான் என்ன செய்ய முடியும்"னார். ஆனந்த் எதிர்பாராத விதமா ஒரு காரியம் செய்தார். அவர் லைப்லயே அப்படிச் செய்திருக்க மாட்டார். கெஞ்ச ஆரம்பிச்சுட்டார் சார் பாவம். "ஸார் உங்களுக்குத் தெரியாதா? இந்த லாப்ல யாரு புத்தியுள்ளவன், அறிவுள்ளவன்? யாரு குமாஸ்டிக்கறவன்னு. சோமசுந்தர் வெறும் ஃப்ராடு. ப்ரைவேட் கம்பெனியா இருந்தா உனக்கு ரிஸர்ச் ஒரு மண்ணும் வராதுன்னு டிஸ்மிஸ் பண்ணிருப்பாங்க. கவர்மெண்ட்ல தான் இதெல்லாம் சாத்தியம். ஆனா அவனுக்குப் போய் அவார்டு கொடுக்கறது அநியாயம் ஸார்"னு பொறாமையா இல்லை. ஒருவிதமான Righteous indignationல கெஞ்சறார். கண்ணில தண்ணி ஸார்!"

(தொடரும்)



சாதாரண கிளீனிங் பவுடரால்
பாத்திரங்களில் நிறைய
கீறல்கள் விழுகின்றன.

**மைக்ரோ.ஃபைன்
முறையில் தயாராகும்
சூப்பர் ஏ-ஒன்
கிளீனிங் பவுடரால்
பாத்திரங்களில் கீறல்
விழவே விழாது.**

# சூப்பர் ஏ-ஒன் கிளீனிங் பவுடர்

சாதாரண கிளீனிங் பவுடரில் உள்ள சொரசொரப்பான துகள்களால் பாத்திரங்களில் கீறல்கள் விழுகின்றன.

மைக்ரோ.ஃபைன் முறையில் தயாரிக்கப் படும் சூப்பர் ஏ-ஒன் கிளீனிங் பவுடர் பாத்திரங்களில் சிறு கீறல் கூட விழாமல் பாதுகாத்து, புதியபாத்திரம் போல் ஜொலிக்கச் செய்கிறது.

*முதல் தரமான சூப்பர் ஏ-ஒன் கிளீனிங் பவுடர் இருக்கும்போது, இரண்டாம்தர பவுடர்கள் எதற்கு?*




AradhanA / A-One



# இலவசம்!

இந்த விளம்பரத்தைக் கடையில் கொடுத்து
500கிராம் சூப்பர் ஏ-ஒன் வாங்கினால்,
இன்னொரு
500கிராம் சூப்பர் ஏ-ஒன்
பாக்கெட் இலவசம்.

For Trade Enquiries Contact:
M/s. SEKAR PRODUCTS PVT. LTD.
Admn. Office : 155, Purasai High Road,
Kellys, Chennai - 600 010.
Ph.: 642 3315, 642 3395.
Fax : 6428586

* இச்சலுகை சென்னை நகரில் மட்டும்.

**ஜான் கென்னடி ஜனாதிபதியான போது பத்திரிகைகள் எல்லாம், அவர் "தொட்டது தங்கமாயிற்று; கை வைத்தது வைரமாயிற்று" என்று எழுதினார்கள். மனிதர் மகிழ்ந்து போனார்; தம்மிடம் இயல்பிலேயே அத்தகைய 'வெற்றிச் சக்தி' இருக்கிறதென்று நம்பினார்.**



**வா**ழ்வில் நாம் தெரிந்து கொள்ள வேண்டிய ஒரு கருத்து இந்தச் சம்பவம் :

அமெரிக்க ஜனாதிபதி ஜான் கென்னடி ஒரு கத்தோலிக்கர். கத்தோலிக்கர்கள் அமெரிக்க நாட்டில் சிறுபான்மையினர். அவர் ஜனாதிபதியானபோது பத்திரிகைகள் எல்லாம், அவர் "தொட்டது தங்கமாயிற்று; கை வைத்தது வைரமாயிற்று" என்று எழுதினார்கள். மனிதர் மகிழ்ந்து போனார்; தம்மிடம் இயல்பிலேயே அத்தகைய 'வெற்றிச் சக்தி' இருக்கிறதென்று நம்பினார். பாராட்டப்படுகிறவர்கள் எல்லாம் – அளவு கடந்து புகழப்படுபவர்கள் எல்லாம் விழ, குழி பறிக்கப்படுகிறது என்பதுதான் உண்மை.

அதை நம்பி கியூபாவின் மீது படை எடுத்த போது, அறுபது பேர் கொண்ட அமெரிக்காவின் பாரசூட் படை கியூபாவின் சதுப்பு நிலங்களில் சிக்கி மாட்டிக் கொண்டது. சின்னஞ்சிறு தீவான கியூபாவோ ஏறத்தாழ இரண்டு பில்லியன் டாலருக்கு விவசாயக் கருவிகள் கொடுத்தால்தான் கைதிகளைத் திருப்பி அனுப்ப முடியும் என்றார்கள். அமெரிக்கா கியூபாவிடம் தோற்றது.

என்ன நடந்தது?

போர்த் தளபதிகள் திட்டம் தீட்டி படை எடுக்கலாம் என்று சொன்னார்கள். சரிவர ஆராயாமல் எடுத்த முடிவு. வெற்றி பெற்று விடுவோம்; இது சுண்டைக்காய் விஷயம் என்ற எண்ண மிதப்பு ஆணவமாக இருந்ததே தவிர, இப்படிப்பட்ட நிலையில் ஏற்படுகின்ற தவிப்பும் கவலையும் அதன் விளைவாக எடுக்கின்ற சர்வ ஜாக்கிரதையான காரியங்களும், கண்காணிப்பும் இல்லாமல் போய் விட்டன.

ஜான் கென்னடிக்கு இப்படிப்பட்ட சம்பவத்தைக் கையாண்ட அனுபவம் கிடையாது. ராணுவத் தளபதிகள் சரிவர ஆராயவில்லை. படை இறங்கியதோ இரவு நேரம். உலகின் மிகப் பெரிய வல்லரசு தோற்றது.

இதுதான் பாடம். நாம் தொட்டதெல்லாம் 'ஓகோ' என்று போகும் என்ற மிதப்பு மனநிலையில் இருக்கும் போது அவன் யதார்த்த நிலையை – சூழ்நிலைகளின் உண்மைகளை உணர்வதில்லை; அலட்சியம் செய்கிறான். உள்ளது உள்ள படி அவனால் பார்க்க முடிவதில்லை.

இதுதான் நான் வேலை பார்த்த நிறுவனத்திற்கு ஏற்பட்டது. அதாவது சரிவு. வருமானத்திற்கு மேல் நிர்வாகச் செலவுகள். சிக்கனத்தைப் புறக்கணித்த நிலை. இதன் விளைவாக ஏகப்பட்ட நிர்வாகிகள், கம்பெனி கார்கள், விமானம். நிறுவனம் மூடப்படுகின்ற நிலைக்கு வந்தது.

வாழ்வின் ஆரம்பக் கால கட்டங்களில் கஷ்டமும் தோல்விகளும் ஏற்பட்டிருந்தால் அவை மனிதனைப் பக்குவப்படுத்தியிருக்கும். அதனால்தான் சொல்கிறார்கள் அறிஞர்கள். "குழந்தைகளை

# ஜீவப்

பணக்கார வீட்டுக் குழந்தைகளாக கான்வென்டிலும், ஊட்டியிலும் படிக்க வைக்காதீர்கள். அவர்கள் நடைமுறை உலகின் கஷ்ட நஷ்டங்களையும் சூழ்நிலையையும் சிக்கனத்தையும் உழைப்பையும் அறிய வேண்டும். இல்லாவிடில் அவன் கஷ்டப்படுவான்!" என்கிறார்கள்.

வெற்றிப் படிகளில் வேக

மாக ஏறும் மனிதனும் சரி – சொகுசு வாழ்க்கைக்கு பழக்கப்பட்டிருப்பவனும் சரி – எதிர்பாராத தோல்வி ஏற்படும் போது, அவனால் ஈடுகொடுக்க முடிவதில்லை; துவண்டு போகிறான்.

நிர்வாக அறிவியலில் கூட கண்காணிப்பு என்ற வார்த்தைக்குக் கொடுக்கப்பட வேண்டிய முக்கியத்துவம் இன்னும் கொடுக்கப்படவில்லை என்பதுதான் உண்மை.

நல்லவர்களாலும் தியாகிகளாலும் ஆளப்பட்ட நம் நாட்டின் சீரழிவுக்குப், பொது மக்களாலும், நல்ல தலைவர்களாலும் கண்காணிக்கப்பட்டு சரிசெய்யத் தவறியதுதான் காரணம் என்பது என் அபிப்ராயம். ஜேம்ஸ் ஆலன் என்ற தத்துவ ஞானி மிக அழகாகச் சொல்கிறார். "சரியான முயற்சியால் பெறப்பட்ட வெற்றியைத் தக்க வைத்துக் கொள்ள வேண்டுமானால், கண்காணிப்பு ஒன்றினால் மட்டுமே முடியும்" என்கிறார். நமது சுதந்தரம் சரியான – உயர் முயற்சியால் பெறப்பட்ட வெற்றிதான். எனினும் தக்கவைத்துக் கொள்ள முடியவில்லை.

# போராட்டங்கள்

**வே**லை இல்லை. இதுதான் சமயம். நமது நெடுநாள் பேரவாவான சொந்தத் தொழிலைத் துவங்க வேண்டுமென்று எண்ணினேன். நான் வேலை பார்த்த முன்னைய நிறுவனத்தில் இல்லாத இரண்டு முக்கியப் பொருளைத் தயார் செய்தேன். இவை இந்தத் தொழிலில் வழக்கமாக உபயோகிக்கப்படும் சிறப்புப் பொருட்கள். இவற்றுக்கான தகவல் பற்றிய பிரசுரங்களையும் சாம்பிள்களையும் எடுத்துக் கொண்டேன்.

எங்கள் பொருட்களை மற்ற சிறந்த பொருட்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்படி ஒரு புகழ் பெற்ற சோதனைக் கூடத்தில் சோதித்ததில் அவை பிரமாதமாக வெளிவந்தன. அந்த ஆதாரங்களையும் எடுத்துக் கொண்டேன். எல்லாப் பெரிய நிறுவனங்களுக்கும் சென்று அவர்களின் 'லிப்ட்'களில் ஏறி இறங்கிக் கொண்டிருந்தேன்.

"சோதனை அளவில் உங்கள் பொருள் சிறந்ததுதான். ஆட்சேபம் இல்லை. இதை யாரிடமாவது இனமாகக் கொடுத்து தொழிலில் – செய்முறையில் – இது எப்படிச் செயல்படுகிறது என்று நிரூபியுங்கள்" என்றார்கள் பலர்.

இனாமாகக் கொடுத்தால் கூட பரீட்சை செய்ய யாரும் முன்வரவில்லை.

ஆறு மாதம், ஒன்பது மாதம் ஒரு வருடம் என்று மாதங்கள் ஓடின. ஒரு வருடம் மூன்று மாதமும் ஓடியது என் கண்ணெதிரே.

காலணாவுக்கு என் பொருளை விற்க முடியவில்லை!

நான் தளர்ந்து போனேன்.

அதைரியம் அடிக்கடி தலை காட்டியது.

கையிருப்பு எல்லாம் இந்த 15 மாதங்களில் தீர்ந்து போயிற்று. வேலை தான் மீண்டும் பார்க்க வேண்டும் போலிருக்கிறது என்று எண்ணிய நிலையில் ஒரு சமயம், 'அமகோ' என்ற பெரிய நிறுவனத்திற்குள் நுழைந்தேன்.

என்னைப் பார்த்தார். விஷயங்களைக் கேட்டார் – மனிதனுக்கு மனிதன் கொடுக்கும் மரியாதையுடன். அமெரிக்கர்கள் உண்டு இல்லை என்று சொல்கிறவர்கள். சொன்னார். "நான் உங்களுக்கு உதவ முடியாது." நான் இதை அதிகம் கேட்டிருக்கிறவன் ஆகையால் மற்ற விஷயங்களை – உலக விஷயங்களை – மனதாரப் பேசி விட்டு எழுந்தேன். அவரும் எழுந்தார். எழுந்து நின்று கொண்டே சொன்னார்.

"எங்கள் நிறுவனத்தில் சிறுதொழிலதிபர்களிடமிருந்து பத்து சதம் பொருட்களை



டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி

வாங்க வேண்டும் என்பது மத்திய அரசின் சட்டம். ஆனால் உங்களைப் போல் உள்ள ஒரு புதிய நிறுவனத்திடமிருந்து நேரடியாக வாங்க முடியாது. எங்களுக்கு சப்ளை செய்யும் கெமிக்கல் நிறுவனம் இருக்கிறது. அவர்களைப் போய்ப் பாருங்கள்'' என்றார்.

எண்ணெய்த் தொழிலின் அபரிமிதமான வளர்ச்சியின் ஆரம்ப கால கட்டம் அது. படிப்பும் தொழில்நுட்பமும் தெரியாத யார் யாரோ அப்போது அங்கே குபேரராகிக் கொண்டிருந்தார்கள்.

மறுநாள் காலை. அமகோ நிறுவனத்தார் குறிப்பிட்ட அந்த நபரைப் போய்ப் பார்த்தேன்.

''என் பெயரைச் சொல்லி உன்னைப் பார்க்கும்படி சொன்னாரா?'' என்று இரண்டு முறை கேட்டார்.

''ஆம்!'' என்றேன்.

''உன் பொருள் பட்டியலை எடு!'' என்றார்.

எங்களிடம் உள்ளது இரண்டே பொருட்கள். பட்டியல் எங்கே பட்டியல்! எனவே நான் எங்கள் பொருட்களைப் பற்றிய பிரசுரங்களைக் கொடுத்தேன்.

அதை நோட்டமிட்டவாறு கேட்டார்.

''உங்களிடம் நுரைபொங்குவதைத் தடுப்பதற்கு நல்ல பொருள் ஏதேனும் இருக்கிறதா?'' என்றார்.

நான் ஒருகணம் கூட தயங்கவில்லை.

''ஓ! இருக்கிறதே!'' என்றேன். இவர் மட்டும் வாங்குவதென்றால் – என்னால் அவர்களுக்குத் தேவைப்படும் எதையும் செய்து கொடுக்க முடியும் என்ற நம்பிக்கை இருந்தது. அதைவிட முக்கியமாக, ''சமீபத்தில், ஒரு விற்பனையாளர் வந்த போது அவர் சொன்ன விஷயங்களும், காட்டிய சாம்பிளும் நினைவுக்கு வந்தன. அவர் காட்டியது ஒரு அருமையான நுரை தடுக்கும் பொருள்.

''அந்தத் தொழில்நுட்ப விவரங்களையும் விலைப் பட்டியலையும் எடுத்து வாருங்கள் நான்கு மணிக்கு...'' என்றார்.

**நா**ன் வீடு திரும்பினேன். யோசித்தேன். இனி அந்த நிறுவனத்திற்கு எழுதி அதனுடைய தொழில்நுட்ப விவரங்களைப் பெறுவதற்கு நேரமில்லை. என்னுடைய அலமாரிக்குச் சென்றேன். போட்டி நிறுவனங்களுடைய பொருள் பட்டியல் கேட்லாக்குகளை எடுத்தேன். அதில் உள்ள ஒரு நல்ல கம்பெனியின் நுரையைத் தடுக்கும் பொருள் பற்றிய தகவல் பிரசுரத்தை எடுத்தேன். மேலேயிருந்த அவர்களின் கம்பெனி பெயரை வெட்டி எடுத்தேன். எங்கள் நிறுவனத்தின் பெயரை அதிலே ஒட்டி 'ஜெராக்ஸ்' எடுத்தேன். நேராக எடுத்துக் கொண்டு நாலு மணி சந்திப்பிற்கு போனேன்.

ஏதோ பெயருக்கு நான் கொடுத்த விவரத்தைக் கவனித்தார். என் படிப்பும், நான் யார் சொல்லி வருகிறேன் என்பதும் அவருக்கு முக்கியமாகப்பட்டிருக்க வேண்டும்.

''எனக்கு ஐந்து கேலன் பக்கெட்டுகள் வேண்டும். 108 வேண்டும். எப்போது கொடுக்க முடியும்?'' என்று கேட்டார்.

''இரண்டு வார கால அவகாசம் தேவை'' என்றேன்.

''சரி. பரவாயில்லை. என்னிடம் கொஞ்சம் கையிருப்பு இருக்கிறது – உபயோகித்துக் கொள்கிறேன்.''

நான் மகிழ்ச்சியுடன் திரும்பினேன். ஏனெனில் இது எனது முதல் விற்பனை.

ஆனால் என் முன் பெரிய சவால் இருந்தது. பெரிய ஒரு ரசாயன நிறுவனத்திடமிருந்து வாங்கி நான் அதைக் கலந்து ஐந்து காலன் பக்கெட்டுகளில் நிரப்பி அனுப்ப வேண்டும்.

இரண்டாவதாக பொருளைத் தயாரிக்கும் இடமும் இல்லை. தொழிலின் விலாசம் வீடுதான்! அதைவிட கடுமையான சோதனை, பொருளை வாங்கப் போதுமான பணமும் இல்லை – கைவசம். இந்தப் பதினைந்து மாதங்களின் என் சேமிப்பு பணம் எல்லாம் கரைந்து போய் விட்டது!

மறுநாள் ஒரு அதிசயம் நிகழ்ந்தது. கிரெடிட் கார்டு தரும் ஒரு நிறுவனத்திடமிருந்து ஒரு கடிதம் வந்திருந்தது.

---

**''பொண்ணு பார்க்கப் போன இடத்துல ரொம்பத்தான் வெட்கப்பட்டியாமே?''**

**''ஆமாண்டா! பத்து பஜ்ஜிக்கு மேல சாப்பிடலைன்னா பாரேன்!''**

**– யமுனா ரங்கநாதன்**



"அன்புடையீர், கடந்த பத்தாண்டுகளுக்கு மேலாக எங்கள் கிரெடிட் கார்டு மூலம் பொருட்களை வாங்கி அதற்கான பணத்தை எங்களுக்கு ஒழுங்காகக் கட்டி வருகிறீர்கள். எனவே உங்கள் நாணயத்தை மதித்து உங்களுக்கு அதிக கடன் வசதிக்கான தங்க நிற கிரெடிட் கார்டை அனுப்பியுள்ளோம். எல்லா வங்கிகளிலும் நீங்கள் உடனடியாக கடன் பெறும் வசதி இதற்குண்டு" என்று எழுதி இருந்தார்கள்.

என்னால் நம்ப முடியவில்லை. மனம் ஆண்டவனை எண்ணி கைகூப்பிக் கொண்டிருந்தது. மறுநாள் பொருளை ஏற்றி வந்த லாரி எங்கள் வீட்டு முன் வந்து நின்றது. அதிலே எனக்கு வேண்டிய பொருள் 55 காலன் பீப்பாய்களிலே வந்திருந்தது.

"எங்கே இறக்க?" என்று கேட்ட டிரைவர், பீப்பாய்களை இறக்கும் 'லிப்ட்' வைத்திருக்கிறாயா?" என்றார்.

நான் இல்லையென தலையாட்டினேன். டிரைவர் என்னைத் திட்டிக் கொண்டிருந்தார்.

என்ன செய்வதென்று தெரியாத நிலையில் என் நண்பர் ஒருவரை போனில் கூப்பிட்டு யோசனை கேட்டேன். அவர் சொன்னார். "பனிரெண்டு மைல் தொலைவில் ஒரு "ஸ்டோரெஜ்" நிறுவனம் இருக்கிறது. அது உனக்கு உதவும். அங்கே எடுத்துச் செல்" என்றார்.

லாரியை நேராக அங்கே போகச் சொல்லி முன்னால் என் காரில் வழி காட்டிக் கொண்டு போனேன்.

ஐந்து காலன் பக்கெட்டுகள் கிடைக்குமிடத்தை அவர்கள் சொன்னார்கள். நான், என் மனைவி, என் மகன் அசோகன் மூவருமாக அந்த ஸ்டோரேஜ் இடத்தை தொழிற்சாலையாக்கிக் கலந்து ஆர்டரைப் பூர்த்தி செய்தோம்.

நுரையை ஒடுக்கும் இந்தப் பொருளுக்கு பார்க்ளேஸ் பிரேக் (Barclays Break) என்று பெயரிட்டோம். பிரேக் என்றால் தமிழில் உடைப்பது என்று பொருள்படும். இதில் வேடிக்கை என்னவெனில் இதே 'பிரேக்' என்ற வார்த்தையை மிகவும் பிரபலப்படுத்தி Gimme A Breakஎன்ற தலைப்பில் ஒரு டீ.வி. தொடர் பிரமாதமாக வந்து கொண்டிருந்ததுதான். Gimme என்பது Give me என்பதன் சுருக்கம். கறுப்பு மக்கள் உபயோகிக்கும் செல்ல மொழி. பிரேக் என்றால் எனக்கு ஒரு வாய்ப்புக் கொடு, இடைவெளி விடு



"ஆபீஸ் வாசல்ல
நிறைய 'கவர்' கட்டித் தொங்க
விட்டிருக்காங்களே, எதுக்கு?"
"சம்திங் கொடுக்கிறவங்க கவருக்காக
அலைய வேண்டாமேங்கிற நல்ல
எெண்ணம்தான்...!"
– சீர்காழி வி. ரேவதி

என்ற பொருளில் தலைப்பு.

எண்ணெய்த் துறையில் நாங்களும் நுழைய ஓர் இடம் கேட்பது போல இருந்தது எங்கள் பொருளின் பிரேக் என்ற பெயர். அதுவே உண்மை. எதிர்பாராத சம்பவங்கள்! எதிர்பாராத பொருத்தங்கள்!

கார்ல் கஸ்டவ் யங் என்ற மனவியல் அறிஞர் சொல்கிறார்: "வாழ்வில் இப்படிப்பட்ட ஒரே அர்த்தமுள்ள சம்பவங்கள் – ஒரே விஷயத்தின் தொடர்பான சம்பவங்கள் நிகழுமானால்– அது நீங்கள் சரியான பாதையில் சென்று கொண்டிருக்கிறீர்கள் என்பதைத் தெரிவிக்கிறது."

எனக்கென்னவோ அவர் சொல்வதை விட ஒரு படி தாண்டி, இப்படிப்பட்ட ஒன்றுக்கொன்று தொடர்புடைய சம்பவங்கள் நிகழும் போது, அது ஒரு புதிய துவக்கத்திற்கான அடையாளம். அதற்குப் பிறகு பிரமாதமான நல்ல காலம் என்றுதான் படுகிறது. ஏனெனில் என் வாழ்வில் இப்படி நான் எதிர்பாராது நிகழ்ந்த பல சம்பவங்களும் என்னை ஆசி கூறி வழிகாட்டி புதிய பாதைகளிலே இறக்கி விட்டதைக் கண்டேன். அடுத்து ஒரு குறிப்பிடத்தக்க ஒரு விஷயத்தை இங்கே சொல்ல வேண்டும். அந்த 'பார்க்லேஸ் பிரேக்' என்ற பொருள் – எங்களுக்கு அத்துறையில் நுழைய இடங்கொடுத்த முதல் பொருள் – நுரையை உடைப்பதில் தலைசிறந்த பொருள் என்று அமகோ பொறியாளர்களால் வாங்கப்பட்டது; புகழப்பட்டது என்பதுதான்.

(தொடரும்)

● பி. அனிதா பிரியன், பேளுக்குறிச்சி.

*? ஆனந்துக்கு செஸ் ஆஸ்கார் விருது வழங்கப்பட்டமைக்கு மிகவும் மகிழ்ந்தேன். நீங்கள்...?*

! நானும்தான். ஆனால் அவர் அளித்த டீவி. பேட்டியில், ரயில் பயணங்களின் போது கூட பலருக்கு அவரை அடையாளம் தெரிவதில்லை என்று சிரித்தபடி குறிப்பிட்டதைக் கேட்ட போது வேதனையாகத்தான் இருந்தது.

● ஜி. செல்வராஜன், ரிஷிவந்தியம்.

*? 33 சதவிகித ஒதுக்கீடுக்குப் பதிலாக, இரு தேர்தல்களில் ஆண்களே இடம்பெறவும் மூன்றாம் முறை அனைத்து இடங்களுக்கும் பெண்களே போட்டியிடும்படியும் மாற்றி அமைத்தாலென்ன...?*

! அப்படி ஒரு அல்லிராஜ்ஜியம் நடக்கும் போது, இந்த யோசனை சொன்ன ஜி. செல்வராஜனுக்கு பாரத ரத்னா பட்டம் நிச்சயம் உண்டு!

● ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம் – 1.

*? சென்னை துறைமுகப் பொறுப்புக் கழகத் தலைவர் பதவியிலிருந்து மாற்றப்பட்டதை எதிர்த்து ஐ.ஏ.எஸ். அதிகாரி*



• கான்ட்ராக்ட்...?

# தம்பிதுரைக்கு நோட்டீசு வந்ததே..?

*மணிவண்ணன் தொடர்ந்த புகாரில் தம்பிதுரைக்கு நோட்டீசு அனுப்பப்பட்டது பற்றி...?*

! மணிவண்ணனின் மாற்றல் உத்தரவு, அவர் குறிப்பிடும் சம்பவம் (ஒரு கான்ட்ராக்டுக்கு தம்பிதுரையின் வற்புறுத்தல்) நடப்பதற்கு முன்பே கையெழுத்தாகி விட்டதாக மத்திய அரசு தரப்பில் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. மணிவண்ணனுக்குப் பதில் அவரிடத்தில் நியமிக்கப்பட்டுள்ள மச்சேந்திரநாதனை மாற்ற முடியாது என்றும் மத்திய அரசு தரப்பில் சொல்லி விட்டார்கள். இனி அந்த கான்ட்ராக்ட் என்ன ஆகிறது என்பதைத்தான் கவனிக்க வேண்டும்.

● அ. முஸ்தபா, தக்கோலம்.

*? திருமணம் என்பது சொர்க்கமா, நரகமா?*

! திரிசங்கு சொர்க்கம்!

● எஸ். சந்திரா,
திருச்சி – 17. ❑

*? பிரிட்டனில் அரசியல் சட்டமே (constitution) கிடையாது என்று கூறப்படுகிறதே... அப்படியானால் அந்த தேசத்தில் எந்த சட்டத்தின் அடிப்படையில் ஆட்சி நடைபெறுகிறது?*

! மரபுகள் – வழிவழியாக வந்த மரபுகளின் அடிப்படையில்தான். அதே நல்மரபுகள் அடிப்படையில்தான் நமது அரசியல் சாசனமும் வகுக்கப்பட்டுள்ளது. ஆனால், அதில் பல மாற்றங்களை நமது அரசியல்வாதிகள் செய்து, சிதைத்து விட்டார்கள். பிரிட்டனிலோ, எழுதப்படாத மரபுகளைச் சட்டமாக மதித்து நடக்கிறார்கள்!

● எம். சம்பத்,
வேலாயுதம்பாளையம்.

*? இன்றைய இளைய தலைமுறையினர் குறித்து, உங்கள் மனத்தில் எழுவது நம்பிக்கையா? அவநம்பிக்கையா...?*

! நம்பிக்கைதான்.

● ஏ. குமாரவேலு,
பாளையங்கோட்டை.

*? பா.ஜ.கவுக்குத் தெம்பு வந்து விட்டது போலிருக்கிறதே...? (அதாங்க – துணை சபாநாயகர் போட்டி)*

! எங்கே! அதான் வாபஸ் வாங்கியாச்சே! காங்கிரஸுடன் சமரச முயற்சி மீண்டும் தொடர்கிறதே! அனுகுண்டு



• ரயில் பயணங்களில்...



• நிலைத்த அழ...



• கதை ஞாபகம்!



• அலைமோதிய...



• ...நினைவுகள்!

வெடித்ததே அதன் பலவீனத்தை மறைக்கத் தானே! தெம்பாவது வரவாவது!

● என். கே. மூர்த்தி, கும்பகோணம். – 1.

*? மஹாராஷ்டிரா அரசு முஸ்லிம்களை வெளியேற்றுவது ஏற்புடையதா?*

! பங்களாதேஷ் அகதிகள் என்று சொல்லி வெளியேற்றியது சட்டப்படி சரியாக இருக்கலாம்; ஆனால் வேதனையான, மனிதாபிமானமற்ற செயல். ஒரு வாதத்துக்கு.. நேபாள ஹிந்து அகதிகள் வந்திருந்தால் இப்படி வெளியேற்றியிருப்பார்களா..?

● புது. க. முருகையன், திருப்பத்தூர் – 1.

*? உலகத்து உயிர்கள் அனைத்து வகையிலும் ஆண் கவர்ச்சியுடன் காணப்பட, மனிதரில் மட்டும் அந்தக் கவர்ச்சி பெண்ணிடம் இருக்கக் காரணம் என்ன...?*

! நீங்கள் ஓர் ஆண் சிங்கமாகவோ, ஆண் மயிலாகவோ இல்லாததுதான் இக் கேள்விக்குக் காரணம்! பெண்மயிலிடம் கவர்ச்சி இல்லையென்றால் அதனைக் கவர்ந்திழுக்க ஆண் மயில் ஏன் தோகை விரித்து ஆட வேண்டும்?

● வி. எஸ். கணேசன், சென்னை – 87.

*? இன்றைய ஊழல் சூழ்நிலையில் காந்தி படத்தை ரூபாய் நோட்டிலிருந்து எடுத்து விட்டால் அவருக்கு மதிப்பும் மரியாதையும் கொடுத்தது போல் ஆகும் அல்லவா? ரம்பா – சிம்ரன் படம் போட்டால் அழகாகவாவது இருக்குமே...?*

! காந்தியை விட அழகான முகம் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. 'உண்மைதான் அழகு; அழகு என்பது உண்மையே...!' – கீட்ஸின் அமர வாக்கியம். நிற்க... காந்திஜிக்கு மதிப்பும் மரியாதையும் அவர் படத்தை ரூபாய் நோட்டில் போடுவதாலோ நீக்குவதாலோ வருவதல்ல.. எத்தகைய அதர்மமான சூழலிலும் சத்தியத்துக்கு உள்ள மதிப்பும் மரியாதையும் என்றும் குறையாது. அப்படியே காந்தியும்.

● எம். அசோக்ராஜா, திருச்சி – 15.

*? தவறுக்கு மன்னிப்புக் கேட்காதது, தவறை நியாயப்படுத்துவது – இரண்டில் எது மிகப் பெரிய தவறு...?*

! திருத்திக் கொண்டு, தவறை மீண்டும் செய்யாதிருக்கும்பட்சத்தில் மன்னிப்புக் கேட்காதவர்களை மன்னித்து விடலாம். ஆனால் தவறை நியாயப்படுத்துபவர்களை மன்னிக்க முடியாது.

● ஜெ. கண்ணன், சென்னை – 101.

*? என்றாவது ஒருநாள் முதலமைச்சரானால் அரசியல் சட்டத்தின் 356-ஆவது பிரிவினால் பாதிக்கப்பட்டு விடக்கூடாது என்பதற்காகத்தான் வை.கோ. மேற்படி பிரிவை எதிர்க்கிறார் என்று சொல்லப்படுவது குறித்து...?*

! பெண் பார்க்க ஒருவன் வந்தான். அப்பெண் காப்பி கொண்டுவர சமையலறைக்குள் போனாள். பரண் விளிம்பிலே ஒரு பாத்திரம் 'விழுவேனா...' என்ற நிலையில் இருப்பதைக் கண்டாள். உடனே கற்பனை ஓடியது : 'எனக்கும் இவருக்கும் கல்யாணமாகி, ஒரு குழந்தையும் பிறந்து, அக் குழந்தை வளர்ந்து, இரண்டு வயதில் 'அம்மா' என்று அழைத்துக் கொண்டு என்னைத் தேடி இங்கு வர, அப்போது இந்தப் பாத்திரம் அதன் தலையில் விழ, குழந்தை செத்துப் போக... 'ஐயோ!' என்று பெருங்குரலெடுத்து அழ ஆரம்பித்தாள்! பெண் பார்க்க வந்தவன், விஷயமறிந்து, 'இந்தப் பெண் வேண்டாம்' என்று போய்விட்டான்! உங்கள் கேள்வி இந்தக் கதையைத்தான் நினைவூட்டுகிறது!

● ஏ. காதர், நாகூர்.

*? ராஜ் பவனில் கவர்னரைச் சந்திக்க வந்தபோது கலைஞரும் நெடுஞ்செழியனும் கை குலுக்கிக் கொண்டார்களாமே...?*

! அவர்களுடைய வாழ்க்கைச் சரித்திரத்தை அறிந்தவர்களுக்கு இது ஒன்றும் அதிசயம் அல்ல. கடந்த கால நினைவுகள் இருவர் உள்ளத்திலும் அலைமோதியிருக்கும்.

● பா. கிருஷ்ண குமார், கோவில்பட்டி.

*? காவிரி நீர்ப் பிரச்னைக்காக கூட்டப்படும் அனைத்துக் கட்சிக் கூட்டம் தேவையற்றது என்கிறாரே வை.கோ...?*

! குழந்தையைக் கிள்ளி விட்டு, தொட்டிலையும் ஆட்டுவது ஒரு வகை. தொட்டிலை ஆட்டிய பிறகு குழந்தையைக் கிள்ளுவது இன்னொரு வகை. முதல்வர் தில்லி போக வேண்டாம் என்று குரல் கொடுப்பது; வோட்டெடுப்பின் போது எதிர்க்காமலிருப்பது; பிறகு குறைசொல்வது...

● பா. ராஜா முஹம்மது,
திருத்துறைப்பூண்டி.

*? எதிர்பார்ப்புகள் இல்லாத வாழ்க்கை எப்படி இருக்கும்...?*

! உப்பில்லாத சாப்பாடு!

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
எஸ். சந்திரா,
56 ஏ, திருவக நகர்;
புத்தூர்,
திருச்சி - 620 017.



# கோடிக் கணக்கான ரூபாய்க்குப் போலி காசட்டுகள்!

தமிழிலும், இந்தியிலும் வெளியிடப்படும் சினிமா பாட்டுக்களையும், பக்திப் பாடல்களையும் கொண்ட காசட்டுகளுக்கு இருக்கிற மார்க்கெட்டை மோப்பம் பிடித்த சிலர், இவற்றின் போலி காசட்டுகளை வெகு எளிதாகத் தயாரித்து விற்பனைக்குக் கொண்டு வந்திருக்கிறார்கள்.

"கேரளாவில் உள்ள கண்ணூரில் மட்டும், நாலு லட்சத்துக்கு மேற்பட்ட தமிழ்-இந்திப் பாடல் காசட்டுகள் பிடிபட்டிருக்கின்றன, ஜூன் 10ஆம் தேதி நடந்த ரெய்டில் இவற்றின் மொத்த மதிப்பு எவ்வளவு தெரியுமா? ஒரு கோடியே அறுபத்திரண்டு லட்சத்து நாற்பத்து நாலாயிரம் ரூபாய்!

"இந்த காசட் விற்பனையில் போலிகளின் ஆதிக்கம் அதிகமான பிறகு, மும்பையில் உள்ள புகழ்பெற்ற போலீஸ் அதிகாரி ஜூலியஸ் ரெபைரோவின் உதவியை நாடினோம். அவர் தில்லி, கல்கத்தா, மும்பை ஆகிய நகரங்களில், தமக்கு அறிமுகமான, ஓய்வுபெற்ற உயர் போலீஸ் அதிகாரிகளை மண்டல கோ-ஆர்டினேடர்களாக நியமித்தார். இவர்கள் உள்ளூர் போலீசின் துணையுடன் ரெய்டுகள் நடத்தி, போலி ஆடியோ காசட்டுகளையும், சிடிக்களையும் கைப்பற்றினார்கள்" என்கிறார் சங்கீதா காசட் அதிபர் மகேஷ்.

"பெங்களூரில் ஐ.வி. பட்டீல், ஹைதராபாதில் ஜி. ராமரெட்டி, கேரளாவில் பி.பாஸ்கர குருப், சென்னையில் டி.ஜி.சுப்பிரமணியம் ஆகிய நால்வரும் தென்னிந்திய மார்க்கெட்டை உளவு பார்த்துக் கண்டுபிடித்தார்கள். அதிலும் கேரளாவில் பாஸ்கர குருப்பின் அதிரடி நடவடிக்கை வெகு துணிச்சலானது. கண்ணூரில் பழயங்காடி பஸ் ஸ்டாப்புக்கு அருகே ஒரு சிறிய கடையிலிருந்து மட்டும் 11, 52,000 ரூபாய்க்கு போலி காசட்டுகளைக் கண்டுபிடித்தார். ரெயில்வே ஓவர் பிரிட்ஜுக்கு அருகிலுள்ள ஒரு சிறு கடையிலிருந்து 51,52,000 ரூபாய்க்கு போலி காசட்டுகள்! இது போல தேடித் தேடி ரெய்டு செய்து, கண்ணூர் டவுன் போலீஸ் இன்ஸ்பெக்டர் உண்ணிகிருஷ்ணன் உதவியுடன் மொத்தம் 1.62 கோடி ரூபாய் மதிப்புள்ள இந்தி, தமிழ் சினிமா பாட்டு

அடுத்த இதழுடன்...
## இலவச இணைப்பு
# ஹாரோக்கியம்!

காசட்டுகளையும், பக்திப் பாடல்கள் காசட்டுகளையும் விற்பனை செய்து வந்த கடைக்காரர்கள் எல்லாரையும் உள்ளே தள்ளி விட்டார்!

"ஏனென்றால் சமீபத்தில் வெளியான பல சினிமா பாடல்கள் படு ஹிட்டாகி இருக்கின்றன. இது தவிர, பிரபலமான பக்திப்பாடல்கள், மாப்பிளா சாங்க்ஸ், என்று எதையுமே விட்டு வைக்கவில்லை. இன்-லே கார்டை அப்படியே காபி எடுத்து காசட்டுக்கு உள்ளே வைத்து விடுகிறார்கள்!"

பம்பாயிலும் இது போல ஏராளமான ஆடியோ காசட்டுகளையும், சிடிக்களையும் இந்த போலீஸ் படை கைப்பற்றியிருக்கிறது. சதாரா, பரோடா என்று முக்கிய நகரங்களில் எல்லாம் ஆயிரக் கணக்கில் போலி காசட்டுக்களைக் கைப்பற்றியிருக்கிறார்கள்.

அசாமில் லட்சுமிநகரில், பெங்களூரில், ராஜஸ்தானில், ஃபரூக்காபாதில் (உ.பி) ரோத்தகில் (ஹரியானா) என்று இந்தியா முழுமையுமான ரெய்டுகளில் ஏராளமான போலி காசட்டுகள் சிக்கியிருக்கின்றனவாம்!

ஆனால் இவற்றை எந்த அளவுக்கு முழுமையாக ஒழிக்க முடியும் என்று தெரியவில்லை. காரணம், கடையில் ஐம்பது ரூபாய்க்கு விற்கும் காசட்டுகளை இவர்கள் பதினைந்து அல்லது இருபது ரூபாய்க்கே தருகிறார்கள். ரசிகர்களும் ஒரு ஹிட்டான காசட்டை அடுத்த ஹிட் வரும் வரைக்கும்தான் போட்டுப் போட்டுக் கேட்கிறார்கள் என்பதால் காசட்டின் தரம் பற்றிக் கவலைப்படுவதும் இல்லை! ○

— சாருகேசி

---

அமரர் கல்கி நூற்றாண்டு 1899-1999 100

## வானொலியில்
# தியாக பூமி!

அமரர் கல்கி நூற்றாண்டையொட்டி, சென்னை வானொலி நிலையம், தியாக பூமி வானொலி நாடகத் தொடர் தயாரித்து வருகிறது. **ஆகஸ்ட் 19** தொடங்கி, இத் தொடர் **புதன் கிழமை**களில் இரவு **8.00 முதல் 8.30 மணி**வரை சென்னை அலைவரிசை ஒன்றில் ஒலிபரப்பாகும். இதை பாண்டிச்சேரி உள்பட தமிழகத்திலுள்ள எல்லா வானொலி நிலையங்களும் அஞ்சல் செய்யும்.





# INSTITUTE FOR BEHAVIORAL AND MANAGEMENT SCIENCES

**John's Garden - Chittoor - 517 002.**

## அஞ்சல் வழி கல்வி சேர்க்கை அறிவிப்பு

**1. எம்.எஸ் (உள நல சிகிச்சை & ஆற்றுப்படுத்துதல்)**
**M.S.** ***(Psychotheraphy & Counselling)*** (ஆங்கிலம்/தமிழ்) 2 வருடங்கள்

**2. பி.ஜி.டி.பி.சி** — 1 வருடம்
***(Post Graduate Diploma in Psychological Counselling)*** (ஆங்கிலம்/தமிழ்)

**3. பி.ஜி.டி.ஐ.சி** — 1 வருடம்
***(Post Graduate Diploma in Industrial Counselling)*** (ஆங்கிலம் /தமிழ்)

**4. எம்.பி.ஏ** — 2 வருடங்கள்
**M.B.A.** ***(Master of Business Administration)*** (ஆங்கிலம் மட்டும்)

**சிறப்பு அம்சங்கள் :** — **கடைசி தேதி : 15/10/98**

- இந்தியாவிலேயே முழுமையாக உளநல சிகிச்சை & ஆற்றுப்படுத்துதல் என்ற மனவளர்ச்சி சம்மந்தமான படிப்பை அஞ்சல் வழிக் கல்வியில் தரும் ஒரே நிறுவனம்.
- பட்ட மேற்படிப்பு பயிலுவோரும் அனுமதிக்கப்படுவர்.
- சான்றிதழ்களின் **Xerox** மாத்திரம் சேர்க்கைக்கு இணைத்தால் போதுமானது.
- இந்தப்படிப்புகளை முடித்த பின் மருத்துவமனைகளிலும், கல்லூரிகளிலும் வேலை வாய்ப்புக்கு நல்ல பிரகாசமான எதிர்காலம் உண்டு. மேலும் விபரங்களுக்கும் நேரடிச் சேர்க்கைப் பதிவிற்கும் அணுகவும். அல்லது ரூ. 50/- **M.O./D.D.** மூலம் **Institute for Behavioral and Management Sciences, Chittoor** என்ற பெயருக்கு அனுப்பி தபால் மூலம் விளக்கப்புத்தகம், விண்ணப்ப படிவம் பெற்றுக் கொள்ளலாம்.

---

***For Spot Admission Contact:***

Mr. M. Gnanasekar, 2, Hussain Maistry Street, Royapuram, Chennai-13.
Mr. G. Nagarajan, 2/46, Periyar Illam, East Kumaresapuram. Trichy - 14.
Mr. S. Srinivasan, A2/257-F, Kailasapuram, BHEL township, Trichy - 14
Mr. George Behanan, 65, Kakanad Lane, Pattom (P.O), Trivendrum - 695 004
Mr. K. Satyanarayana, BHEL, MIG 2333, Ramachandrapuram. Hyderabad-500 032
Mrs. Jaya Padmakar, Psychologist, 13/1, Ist Street, EB Colony, Vellore-6
Mr. M. Jesuputhiran, 19, Upstairs, SLB South Road, Ramavarmapupram, Nagercoil-1
Mr. P.S. Viswanathan, IV/3/1, Rajiv Nagar, Aravankadu (Post). The Nilgiris - 643 202
Educational Guidance, C-13, Shiv Chhaya, M.V. Road, Andheri(E), Mumbai-400 069

இயற்கை மருத்துவம்:



• புற்று மண் பூச்சு...

# மண்ணில் எடுக்கும் எக்ஸ்-ரே!

இலை, தழை, செடி, கொடி, மரம், மட்டை மட்டுமல்ல, கல்லையும், மண்ணையும் பயன்படுத்தி தீராத நோயைத் தீர்த்து வருகிறார்கள். மினி சைஸ் பாறாங்கல் + புற்றுமண் + கொஞ்சம் மூலிகைச்சாறு + இளநீர் + வெறும் தண்ணீர் = எக்ஸ்-ரே. இது காதுல பூ... சமாசாரம் இல்லேங்க... நிஜ அனுபவம்.

நமது பாரம்பர்ய வைத்திய முறையின் சிறப்புகளை நேரடியாக அறிய நேர்ந்த போது நம்ப முடியாத அதிசயமாகத்தான் இருந்தது. இதை நடத்திக் காட்டுகிறது, 150 ஏக்கர் வனப்பகுதியில் அமைந்துள்ள ராஜா ஹெல்த்தி ஏக்கர்ஸ்.

ஆயுர்வேதம், யோகா, இயற்கை வைத்தியம், பழங்குடியினர் வைத்தியம் என ஒரு கூட்டு சிகிச்சை முறையை ராஜா ஹெல்த்தி ஏக்கர்ஸ் மையம் அளித்து வருகிறது.

இங்கு நோயைக் கண்டறியவும், சிகிச்சையளிக்கவும் கையாளப்படும் முறைகளே விநோதம்! ஒவ்வொரு காட்டேஜிலும் பலா மரத்திலும் எட்டி மரத்திலும் செதுக்கப்பட்ட மரப்படுக்கை! இதில் படுக்க வைத்துத்தான் மூலிகை மசாஜ்!

ஆஸ்துமா சிகிச்சையின் ஒரு முக்கிய அங்கம் ஒரு விசேஷ குளத்தில் முழுக்குப் போடுவது. மந்தாரை, வெட்டி (வேர்) கற்றாழை, பிரமி-குமாரி என்ற நான்கு ரக மூலிகைகளைக் குளத்தைச் சுற்றி வளர்த்திருக்கிறார்கள். சுற்றிலும் பதிக்கப்பட்டிருக்கும் பைப் வழியாகச் செலுத்தப்படும் தண்ணீர் இந்த நான்கு ரக மூலிகைகளின் வேர்களை

• வெட்டி வேர்க் குடில்....



நனைத்துக் கொண்டு குளத்தில் சங்கமிக்கிறது. ஒரு தடவை குளித்தவுடன் அந்தத் தண்ணீரை வெளியேற்றி விட்டு, அடுத்த நபருக்கு மறுபடியும் ஃப்ரஷ் வாட்டர் சப்ளை!

உடம்புக்குள்ளே இருக்கும் கோளாறுகளைப் படம் பிடித்துக் காட்டும் விந்தையான எக்ஸ்ரேயாகவும் சிகிச்சை முறையாகவும் கையாளப்படுகிறது, 'மட் ஸ்கேன்'

கறையான் புற்று மண்ணில் ஒரு வித மூலிகைச் சாற்றைக் கலந்து பசையாக்கிக் கொள்கிறார்கள். கறையானின் எச்சில் மருந்தாம்! புற்றுமண் கலவையை உடம்பில் பூசிவிடுவதற்கு முன்பு, ஒரு இளநீரை குடிக்கச் சொல்கிறார்கள். இன்னொரு கிளாஸ் இளநீரைக் கொண்டு உச்சி முதல் உள்ளங்கால் வரை தடவல்! அடுத்து இதே போன்று மண் பூச்சு உடம்பு முழுவதும்! ஒரு மர ஸ்டூலில் இதே மண் கலவையைப் பரப்பி அதில் உட்கார வைக்கிறார்கள். பாதங்களுக்கு அடியிலும் பாதுகை போன்ற இதே மண் கலவை!' ஓவியரின் தூரிகைபோல இரண்டு பேரின் விரல்கள், நளினமாக தடவித் தடவி கலவையைப் பூசி விடுகின்றன. இதன் பிறகு மூலிகைக் குளியல்.

மருத்துவத்தன்மை கொண்ட மினிசைஸ் பாறாங்கற்களால் வட்டவடிவமாகக் கட்டப்பட்டிருக்கும் குளியலறையில் கற்களை ட்ரில் செய்து தண்ணீர் பீய்ச்சி அடிக்கும்படி செய்திருக்கிறார்கள். தலைக்கு மேலே இன்னொரு மினி பாறாங்கல்! அதன் உட்புகுந்து வரும் தண்ணீர் தலையில் கொட்டும். அருகில், சுமார் 35 அடி உயரத்தில் ஒரு மினி வாட்டர் டாங்க்! இதில் மூலிகைச் சாறு கலக்கப்பட்டுள்ளது. இங்கிருந்து சப்ளையாகும் தண்ணீர்தான் 'பாறாங்கல் பாத்ரூமுக்கு வருகிறது. கீழே கூழாங்கற்களைப் பரப்பியிருக்கிறார்கள். 'மட் ஸ்கேன்' முடிந்ததும் இங்குதான் சுகானுபவக் குளியல். உடம்பில் ஒரு மில்லி மீட்டர் கூட விடாமல் எல்லாப் பகுதிகளிலும் 'தம்மாத் தூண்டு' தடை கூட இல்லாமல் தண்ணீர் விழும்படி குளிக்க வேண்டும்.



• பாறாங்கல் பாத்ரூம்...

மூன்றாவது கட்டம் சூரியக்குளியல். சுமார் முக்கால் மணி நேரம் வெயிலில் காய்ந்த பிறகு ரப்பர் பைப் மூலம் தண்ணீரைப் பீய்ச்சியடித்து, மெதுவாக உடம்பைக் கழுவி விடுகிறார்கள். இந்தத் தழுவல், தடவல், கழுவல், எல்லாமே ஒரு டாக்டரின் மேற்பார்வையில்தான். தோலில் நிறம் மாறுவதை வைத்து உடம்பில் எந்தப் பகுதியில், என்ன பாதிப்பு என்று டாக்டர் முடிவு செய்கிறார்.

நான்காவது கட்டமாக பயத்தமாவும், முட்டையின் வெண்கருவும் கலந்த கலவையை உடம்பு முழுவதும் பூசி விடுகிறார்கள். கடைசியில் சாதாரணக் குளியலறைப் பிரவேசம்... 'ரிலாக்ஸ்' என்பதன் நிஜ அர்த்தம் அந்தக் குளியலுக்குப் பிறகுதான் பிடிபடுகிறதாம்.

நரம்பு, எலும்பு, மூட்டுக் கோளாறு, நுரையீரல் கோளாறு, அல்சர் பிரச்னையை எல்லாம் இந்த புற்றுமண் எக்ஸ்ரே படம்

பிடித்துக் காட்டிவிடும் என்கிறார் இந்த மையத்தின் ஆயுர்வேத டாக்டர் ஸ்ரீராஜ். 30, 40 வருடங்களுக்கு முன்பு ஏற்பட்ட பாதிப்பைக் கூட 'மட் ஸ்கேன்' கண்டு பிடித்துவிடுமாம். தலையைத் தவிர உடம்பு முழுவதையும் (நிற்கும் நிலையில்) மணலுக்குள் புதைத்து வைப்பது ஒருவித சிகிச்சை!

தோல் சம்பந்தமான வியாதிகளுக்கு 'மட்ஸ்கேன்' சிகிச்சை நல்ல பலன் தருகிறதாம். மும்பை வழக்கறிஞர் ஒருவருக்கு 13 வயதிலிருந்து உடம்பு முழுவதும் திராட்சைப் பழ சைஸில் கட்டிகள். தோலின் நிறமும் கரும்சிவப்பாகி விட்டது. நீரோஃபைப்ரோமா (Nerofibroma) என்ற பிரிவில் வரும் இந்த வியாதியால் தாங்க முடியாத மனவேதனையில் தவித்த அந்த இளைஞருக்கு ஒரு வார சிகிச்சையில் 40 சதவீத குணம் தெரிந்தது என்று சொல்கிறார் டாக்டர் ஸ்ரீராஜ். கட்டிகளின் அடர்த்தி மறைந்து தோலில் இயல்பான நிறம் வந்தது என்றும் கூறுகிறார்.

கர்நாடகத்தைச் சேர்ந்த ஒரு இளம் தம்பதியினர் ஹெச்.ஐ.வி. (எய்ட்ஸ்) பாதிப்புடன் இங்கு சிகிச்சை பெற்றிருக்கிறார்கள். அவர்களின் எடை கூடியிருப்பதாகவும், நோய் எதிர்ப்பு சக்தி அதிகமாகி, வேறு எந்த நோய்த் தொற்றுக்கும் ஆளாகவில்லை என்றும் அவர்கள் கடிதம் எழுதியிருப்பதாகச் சொல்கிறார் டாக்டர் ஸ்ரீராஜ்.

"அவர்களின் உடல் குணம் பற்றி தொடர்ந்து கண்காணிப்பதற்கு உதவியாக அடிக்கடி எங்களுக்குத் தகவல் தரச் சொல்லியிருக்கிறோம். அதன் அடிப்படையில் ஹெச்.ஐ.வி.க்கு நிவாரணம் தரும் மருந்தை உருவாக்கவும் திட்டமிட்டிருக்கிறோம்" என்கிறார் இந்த மருத்துவ மையத்தின் தலைமை மருத்துவர் டாக்டர் ரவீந்திர வாரியார்.

"நம்ம காதலைப்பத்தி உங்க வீட்ல சொல்லிட்டீங்களா?"
"சேச்சே! ஒருக்காலும் உன்னை நான் காட்டிக் கொடுக்க மாட்டேன்!"
– கொங்கணாபுரம் வே. செந்தில்



**உ**டல் நலம் மட்டுமல்லாமல் மன வளத்தை வலுப்படுத்துவதிலும் விசேஷ கவனம் செலுத்துகிறார்கள். ஒவ்வொரு காட்டேஜிலும் மருத்துவத் தன்மை கொண்ட மரப்பலகைகளை உள் அலங்காரத்திற்குப் பயன்படுத்தியிருக்கிறார்கள். கூரை வேயப்பட்ட ஒரு காட்டேஜில் உட்புறம் முழுவதும் தரை தவிர வெட்டி வேர் பின்னப்பட்டிருக்கிறது. பர்ணசாலை போல் உள்ள அந்தக் குடிலில் உள்ள டீ.வியும், டெலிபோனும்தான் நவீனத்தின் அடையாளங்கள்.

கடந்த இரண்டு வருடங்களாகச் செயல்பட்டு வரும் ராஜா ஹெல்த் ஏக்கர்ஸில் 450க்கும் மேற்பட்ட மூலிகை ரகங்கள் இருப்பதாகக் கூறுகிறார் இதன் பார்ட்னர் அப்துல் சலாம்.

ஆயுர்வேத சித்தரான இவருக்கு எந்த மூலையில் எந்த மூலிகை, சுவடி, அல்லது இது சம்பந்தமான எந்த விஷயம் கிடைத்தாலும் தேடிக் கொண்டு வருவதில் அடங்காத ஆசை.

குடும்பத் தொழிலான பீடி தயாரிப்புக்காக, புகையிலைக் கொள்முதல் செய்ய நாட்டின் பல பகுதிகளில் கிராமங்களுக்குச் சென்று வருவதால், வலுவான நெட்வொர்க் உள்ளது. இவரின் தேடலுக்கு இது பெரும் பக்க பலம்.

மத்தியப் பிரதேசம், ஒரிஸா, குஜராத், மகாராஷ்டிரம், கர்நாடகம், ஆந்திரம் ஆகிய மாநிலங்களில் இருந்து மிக அரிதான மூலிகைச் செடிகளை இங்கு வரவழைத்து வளர்த்து வருகிறார் இவர்.

நான் சைலண்ட் வேலி போனபோது ஒரு செடியின் வித்தியாசமான இலைகளைப் பார்த்ததும் இது அசாதாரணமானது என்று தோன்றியது. ஒரு மலைவாசியிடம் அதைப் பற்றிக் கேட்டேன். 'ஆரோக்கியப் பச்சை' என்ற அந்தச் செடியின் ஒரு கிழங்கை சாப்பிட்டால் இரண்டு நாளுக்கு பசி எடுக்காது என்று தெரிய வந்தது. அந்தச் செடி இப்போது எங்கள் மூலிகைப் பண்ணையில் வளர்கிறது!

"ஆதிவாசிகளிடம் பல அரிய தகவல்

களை டேப்பில் பதிவு செய்து கொண்டு, ஆயுர்வேத நிபுணர்களிடம் அது பற்றி உறுதி செய்து கொண்டு அந்த மூலிகைகளில் இருந்து மருந்து தயாரிக்கிறோம். மேற்கு வங்காளத்தில் அரசாங்க ஆய்வு மையம் ஒன்றில் மருத்துவ சம்பந்தமான கிரந்த எழுத்துச் சுவடி ஒன்று இருப்பதாகச் சொன்னார்கள். அது தொடர்பாக அந்த அரசுக்குக் கடிதம் எழுதியிருக்கிறோம்!'' என ஆர்வத்துடன் பேசுகிறார் அப்துல் சலாம்.

குருவாயூரிலிருந்து கோழிக்கோடு செல்லும் பாதையில் அமைந்துள்ள இந்த ஹெல்த் ஏக்கர்ஸில், வெறும் ஹாலிடே ரிசார்ட் போன்று உல்லாசமாக வந்து தங்கிப் போக தாங்கள் அனுமதிப்பதில்லை என்றும் இதற்கு ஒரு 'பிசினஸ் கலர்' வருவதை விரும்பவில்லை என்றும் அப்துல் சலாம் சொல்கிறார்.

ஆயுர்வேத மருத்துவத்தின் மகத்துவத்தைக் காப்பாற்ற வேண்டும். படிப்படியாக இதனால் எல்லோருக்கும் பயன் கிடைக்கச் செய்ய வேண்டும் என்பதுதான் எங்களின் அடிப்படை நோக்கம் என்று சொல்லும் இவருக்கு மட்டுமல்லாமல், இவர் குடும்பத்தைச் சேர்ந்த எல்லோருக்குமே ஆயுர்வேத மருத்துவத்தில் அலாதியான ஈடுபாடு.

ஆனால் செலவுதான் அதிகம். ஒருவருக்கு ஒரு வாரத்திற்கு ரூ. 9000 த்திலிருந்து ரூ. 20,000 வரை ஆகும். அதனாலோ என்னவோ பெரும்பாலும் வெளி நாட்டினர்தான் இங்கு வந்து அதி அற்புதமான இயற்கை வாழ்க்கையை அனுபவித்து சொக்கிப் போகிறார்கள்.

வயது கூடிக் கொண்டே போனாலும், செயலில், சிந்தனையில் என்றும் இளமையோடு இருக்கவைக்கக் கூடிய காயகல்ப சிகிச்சைக்காக 'குடி' என்ற மருத்துவ கூடத்தை அமைப்பது பற்றிய ஆராய்ச்சி தொடங்கப்பட்டிருக்கிறது. இதற்கு அடிப் படை வேத சாஸ்திரங்களும், பண்டைய சுவடிகளும்தானாம். காற்றோ, வெளிச்சமோ உட்புகாதபடி அந்தக் கூடத்தை அமைக்கப் போவதாகவும், அந்த சிகிச்சைக்கான முதல் நபராகத் தம்மையே உட்படுத்திக் கொள்ளப் போவதாகவும் சொல்கிறார் அப்துல் சலாம்.

— மு. சிவலிங்கம்
(ஆதித் கம்யூனிகேஷன்ஸ் உதவியுடன்)

## வயது – 84 கூட்டங்கள் 3, 4!

“மூன்று - நான்கு மாதங்களுக்கு முன்பு நானும் பண்டித நடேசனார் அவர்களும் வேப்பேரியில் உள்ள ஆங்கிலோ-இந்தியப் பள்ளி ஒன்றில் நடந்த கூட்டம் ஒன்றில் அடுத்தடுத்துப் பேசினோம்.

''பல வருடங்களாகவே எனக்குப் பண்டித நடேசனாரைத் தெரியும். பல கூட்டங்களில் சந்தித்துப் பேசியது உண்டு.

''அன்றைக்கு வேப்பேரி பள்ளிக்கூடக் கூட்டம் முடிந்ததும், அவருக்கு இன்னும் ஒரு கூட்டத்தில் பேச வேண்டியிருந்தது. அதனால் அவர் பேசி முடித்ததும் புறப்பட்டு விட்டார்.

அவருக்கு வயது 80 ஐத் தாண்டி விட்டது. இருந்த போதும் ஒரு நாளைக்கு இரண்டு, மூன்று கூட்டங்களில் இவரால் கலந்து கொண்டு பேச எப்படி முடிகிறது என்று எனக்கு வியப்பாகவே இருந்தது!

''கூட்டங்களில் அழகாகப் பேசுவார். அவருக்குத் தமிழ் தவிர, ஆங்கிலம், சமஸ்கிருதம் ஆகிய மொழிகளும் தெரியும். ஆங்கிலம் மட்டுமே அறிந்த பிறநாட்டவருக்கும், பிற மொழியாளர்களுக்கும் பண்டித நடேசனார் தமிழ் சொல்லிக் கொடுத்திருக்கிறார்.

“அவர் பண்டிதம் படித்தவர். அதாவது புலவர் படிப்புக்கும் மேலே. அதனால்தான் அவரைப்பண்டிதர் என்று அழைக்கிறார்கள்.

“பண்டித நடேசனார் பெரும்பாலும் உற்சாகத்துடனும் மகிழ்ச்சியுடனும் இருப்பார். நடக்கும்போது வெகு கவனமாக, கீழே விழுந்து விடாமல், ஜாக்கிரதையாக நடப்பார்.

“எங்களைப் போன்றவர்கள் விரும்பி ரசிக்கும் பேச்சாளர். இவரைத் தேடிப் பிடித்து முத்தையா செட்டியார் பிறந்த நாள் பரிசு வழங்கத் தேர்ந்தெடுத்த ராஜா. அண்ணாமலைச் செட்டியார் நினைவு அறக்கட்டளை விருது அமைப்பாளர்களை மனமாரப் பாராட்ட வேண்டும்.''

– டாக்டர் மா. நன்னன் சொல்ல, எஸ்.வி.என்

வட்டமேஜை

# கல்கி தாக்கல் செய்த மசோதா!

✉ சுஜாதாவின் 'ஆர்யபட்டா' முதல் வாரத்திலேயே ராக்கெட் வேகத்தில் புறப்பட்டு விட்டதே! வாசகர் இதயங்களைச் சுற்றிச் சுற்றி வட்டமிடப் போகிறது என்பது முதல் வாரமே தெரிந்து விட்டது.

சென்னை - 79, தஜம் சுயம்புராஜ்.

✉ 'நம்பர் 2'- நாவலரின் அரசியல் வாழ்வை அக்குவேறு ஆணி வேறாக அலசிய ஒரு எக்ஸ்ரே ரிப்போர்ட். அரசியல் பிரமுகர்கள் பற்றிய இது போன்ற சுவாரஸ்யமான கட்டுரைகள் தொடரட்டுமே!

பெங்களூர் - 16, அ. சங்கரன்.

✉ 'பூந்தோட்டம்'- படப் பெயருக்கேற்ப வித்தியாசமான முறையில், பூக்களின் வகை கொண்டு விமர்சனம் செய்திருந்த விதம் ஏ-ஒன்!

குடந்தை, ஆர். ஷம்மு.

✉ 'ரயிலில் ஒரு குயில்'- துளசிங்கத்தைப் பற்றி பாலு எழுதிய செய்தியினைப் படித்தேன். துளசிங்கத்தின் குழல் இசை ஒரு சுகமான சோக ராகம் என்றாலும் கல்கியில் அவரைப் பற்றிய செய்தி வந்து விட்டதால் இனி அவர் வாழ்வில் வசந்த கீதம்தான்!

இலால்குடி, எம். இராஜேந்திரன்.

✉ முதல் பரிசுக் கதை நல்ல தேர்வு. மத்திய அரசில் பெண்களுக்கான இட ஒதுக்கீடு மசோதா தாக்கல் செய்வதில் ஏற்பட்டுள்ள சிக்கலின் நடுவில், நாராயணி கண்ணகி மூலம் கல்கி தாக்கல் செய்த மசோதாதான் "இல்லறத் துறவி."

திருமங்கலம், க. வேணி.

✉ சென்னையில் பிரச்னைக்குரிய விளம்பரப் பலகையின் விலாசங்களைச் சுட்டிக்காட்டி... இந்த அரசுமா அப்படி? என்று கடமையோடு, தைரியமாக சுட்டிக்காட்டியிருப்பதை மனம் திறந்து பாராட்டுகிறேன்.

கோவை - 14, ஏ. எஸ். இராமசாமி.

✉ விளம்பரப் பலகை விசயத்திலே இவ்வளவு தகிடுதத்தங்களா? தமிழக அரசும் இதை சாஃப்டாக கையாளுவதில் சந்தேகம் வரத்தான் செய்கிறது!

காரைக்குடி, பாலு.

✉ இலவச இணைப்பாக வந்த 'வெற்றியின் விலாசம்' ஆங்கிலம் தெரியாத பலருக்கு ஆங்கிலம் கற்றுக் கொள்ளும் ஆர்வத்தை உண்டாக்கியிருக்கும்!

பூனாம்பாளையம், ஆர்.பி. ஜெயச்சந்திரன்.

✉ ஜெயசூர்யாவின் சுழுக தேனிலவில் புகுந்த சுரடியாகி விட்டார். இனி ஒவ்வொரு கிரிக்கெட் வீரரின் தேனிலவிலும் இந்த ஓட்டி தொடருமோ?

திருமானூர், ஆர். மார்ட்டின்.

✉ மின்வாரியத்தின் மோசமான நிர்வாகம் மற்றும் ஊதாரிச் செலவுகளைக் குறைத்துத்தான் ஊழியர்களின் ஊதிய உயர்வைச் சரிக்கட்ட வேண்டும் என்ற தலையங்க வரிகள் ஆழமானவை, அழுத்தமானவை!

அரவக்குறிச்சிப்பட்டி, எம். அசோக்ராஜா.

✉ என்றாயிது கோயமுத்தூருல, காலேசுல வொரு அம்மிணி கூட கோயமுத்தூரு பாசையில பேசலியாக்கும்! அம்மிணிங்ககிட்ட பேட்டி யெடுத்திருக்கிறீரே! அய்யனு(மாணவர்கள்)னுங்களை மறந்து போட்டிங்களா!"

சென்னை - 11, ந. வந்தியக்குமாரன்.

✉ இன்றைய அரசியல்வாதிகளைப் பற்றி நினைத்து நினைத்து மனம் வெறுத்துச் சலித்துள்ள நிலையில், பெருந் தலைவர் காமராஜர் பற்றிய குறிப்புகள் பாலைவனச் சோலையாய் நெஞ்சுக்கு இதம் தந்தன.

திருவண்ணாதபுரம், தி.சு. பாலசுப்பிரமணியன்.

✉ கல்கி 26.07.98 இதழில் லயன்ஸ் கிளப் என்பதன் விளக்கமாக உள்ள துணுக்கு படித்தேன். கடைசி வாக்கியமாக "மற்றபடி சிங்கத்துக்கும் இந்த சங்கத்துக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை" என்று குறிப்பிட்டிருப்பது தவறாகும். விலங்குகளின் அரசன் என்பதற்காக மட்டுமின்றி, வீரம், கம்பீரம், வலிமை, உறுதி, துணிவு போன்ற பல நற்குணங்களை சிங்கம் பிரதிபலிப்பதால் அரிமா சங்கத்தின் சின்னமாகவும் சிங்கம் ஏற்கப்பட்டுள்ளது.

ஈரோடு - 1, லயன் எம். பெரியசாமி.

ஒரு அன்-எக்ஸ்பெக்டட் பாராட்டு-இந்த சூப்பர்மார்க்கெட் columnக்கு.

"சுமி கங்கிராட்ஸ். பிரமாதமா பண்ணிட்டிருக்கே. விறுவிறுப்பா, வித்தியாசமா இருக்கு. பார்டிகுலரா-அந்தக் கல்யாண மண்டப களேபரம் பத்தி எழுதியிருந்த பாரு, எக்ஸலன்ட்! அத்தனை கும்பலும் வடிஞ்சு போனப்புறம் மறுபடி மண்டபத்து நடுவுல நிக்கச் சொன்னியே, ஒரு ஷார்ட் ஸ்டோரிக்கான சமாசாரம் அது!..."

# டபுள் மகிழ்ச்சியில் ரசிகர்கள்

இதுக்கு மேல எழுதிட்டே போறதுக்குத் தன்னடக்கம் இடம் குடுக்கலை. பாராட்டினது யாருன்னு சொல்லிடணும் இல்லியா? குமுதம் எடிட்டர் மாலன். (ஒரு புத்தக வெளியீட்டு விழாவில் சந்திச்சேன்.)

லூட்ஸ் ஒயிட்டங்கற (Lutz oeete) ஒரு ஜெர்மானிய சட்ட அறிஞர், The international crime of genocide: The case of Tamil people in Srilankaன்னு இலங்கை இனப் படுகொலைகள் பத்தி ஒரு ஆய்வு அறிக்கை வெளியிட்டிருக்கார். பல கஷ்டங்களுக்கு நடுவுல ஸிலோன் போய்த் தங்கி, நாடு முழுக்க அலைஞ்சி, பல தரப்பு மக்கள், அரசியல், போராட்டப் பிரதிநிதிகளை சந்திச்சிப் பேசி, ஆராய்ந்து எழுதப்பட்டிருக்கற இந்த அறிக்கையோட தமிழ் வெர்ஷன் தற்செயலாக எனக்குப் படிக்கக் கிடைச்சது. Great work!

1956ல் ஆட்சிமொழிச் சட்டம் கொண்டு வந்தப்ப, சிங்களம் மட்டுமே ஆட்சி மொழின்னு சொல்லி, தமிழை ஒட்டு மொத்தமா கவர்மென்ட் புறக்கணிச்சப்ப, அந்த நாட்டோட மொத்த மக்கள் தொகைல பன்னெண்டு பர்சென்ட் உள்ள தமிழர்கள் இதுக்காக அமைதிப் போராட்டம் நடத்தியிருக்காங்க. இதுக்கு எதிரா, சிங்கள அரசு வன்முறையைக் கட்டவிழ்த்து விட்டதுதான் இனப்படுகொலையோட ஆரம்பம். இதுக்கப்புறம் முதல் அரசியல் நிர்ணய சட்டக் குழுவில் தமிழர்களுக்குப் பிரதிநிதித்துவம் தராதது, தமிழ் கலாசாரங்களுக்கு, வழிபாட்டு முறைகளுக்கு இடைஞ்சல் செய்யறது, வழிபாட்டுத் தலங்களை நிர்மூலமா ஆக்கறது இப்படி பிளான் பண்ணி ஒவ்வொரு கட்டமா சிங்கள அரசு முன்னேறி வந்திருக்கிறதா ஆதாரம் காட்டறார் ஒயிட்.

எல்லாத்துக்கும் சிகரமா அவங்க செஞ்சிருக்கற காரியம்- சாணக்கியம்னு சொல்லணும்- காலனி ஆதிக்கம்.

தமிழர்கள் மொத்தமா, அதிகமா வாழற பகுதிகள்ல, கொஞ்சம் கொஞ்சமா அடித்தட்டு சிங்கள மீனவர்கள், கூலித் தொழிலாளர்களைக் குடியேற வெச்சி, தமிழர்களோட மெஜாரிட்டி பலத்தைக் குறிப்பிட்ட அந்தப் பகுதியில் குறைக்கறது.

Then, உணர்வு ரீதியான அவர்களோட நம்பிக்கைகளுக்கும் பழக்க வழக்கங்களுக்கும் தடை போடறது மூலமா சீண்டிவிட்டு, பொங்கி எழறப்ப ராணுவம் மூலமா கட்டுக்குவிக்கறது!

• ஜி.ஜே.ஆர். கிருஷ்ணன்



## சுமி சூப்பர் மார்க்கெட்!



படிக்கப்படிக்க ரொம்ப-அது என்ன... ரத்தம் கொதிச்சுது.

அப்பா விருது வாங்கின அரங்குல மகனும் அதே விருதை பல வருஷம் கழிச்சு வாங்க, அதை அப்பா-அம்மா பார்த்து சந்தோஷப் பட... எல்லார் லைஃப்லயும் இப்படி நடக்கும்ங்கறீங்க? இந்த சந்தோஷம் சமீபத்துல லால்குடி ஜெயராமன் குடும்பத்துக்குக் கிடைச்சுது. ஸ்ரீ கிருஷ்ண கான சபா லால்குடி ஜி.கே.ஆர். கிஷ்ணனுக்கு சங்கீத சூடாமணி பட்டம் கொடுத்தப்போ மேடை நிறைய பிரமுகர்கள்... கிருஷ்ணனுடைய குருவும் அப்பாவுமான லால்குடி ஜெயராமன் ஆடியன்ஸுல உட்கார்ந்திருந்தார்!

அன்னைக்கு கிருஷ்ணனைப் பாராட்டிப் பேசியவர்கள்ல ஒருத்தர் (ஸ்பென்ஸர்) வேணுகோபால். அந்த பாராட்டுரைக்கு உவமையா லால்குடி பாணி வாசிப்பைத்தான் சொல்லணும்! அத்தனை அழகு அதோட விஷய கனம்! பெரிய உண்மைகளைப் புரியறா மாதிரி ரொம்ப இலகுவா சொன்னார் வேணுகோபால்.

ராகம் என்கிறது வெறும் ஸ்வரங்களோட சேர்க்கை இல்லை... ஒரு அழகான மலரின் இதழ்கள் மாதிரிதான் ஸ்வரங்கள். இதழ் இதழா பிச்சுக் கொடுத்தா அதை மலராக்க முடியுமா. செடியுடைய ஜீவ கர்ப்பத்திலேருந்து வருவது தான் மலர்- அது மாதிரிதான் ராக ஆலாபனைன்னு விளக்கினார்.

இப்படிப் பல உதாரணங்கள்- ராமாயணம் முதல் தாகூர் வரைக்கும் எத்தனையோ மேற்கோள்கள்... ஆனால் ராமாயணம் மாதிரி நீட்டாம சுருக்கமாவும் பேசினார்!

கிருஷ்ணனுடைய ரசிகர்களுக்கு அன்னிக்கு டபுள் சந்தோஷம்!

-அவர் அப்பா முன்னிலையிலே பட்டம் வாங்கினது ஒண்ணு, இப்படியொரு சொற்பொழிவாளரால பாராட்டப்பட்டது இன்னொண்ணு...

விழாவுக்குத் தலைமைதாங்க வந்த சேஷன், வேணுகோபால்கிட்டே எல்லாம் முடிஞ்சப்புறம், நீங்க ஏன் எலக்ஷன்ல நிற்கக் கூடாதுன்னு? கேட்டார்னா பாத்துக்குங்களேன்!

**தமாஷ்:**

ஒருத்தன், லாயிட் ஜார்ஜைப் பார்த்து, "உங்கப்பா கழுதை மேச்சிட்டிருந்தார். சரியா?"ன்னு கேட்டான்.

"எங்கப்பா இப்ப உயிரோட இல்லை. ஆனா, அவர் மேச்சிட்டிருந்த கழுதைகள்ல ஒண்ணு என் முன்னால இப்ப நிக்குது"ன்னு பதில் சொன்னாராம் லாயிட் ஜார்ஜ்!

பி.கு: முகப்பேர் வெங்கடேசன் அனுப்பின இந்த தமாஷ் பிட்டில் எனக்கொரு சின்ன டவுட். மேற்படி சம்பவம் பெர்னாட்ஷா வாழ்க்கைல நடந்ததா படிச்ச ஞாபகம். கரெக்டா தெரிஞ்சவங்க எழுதி அனுப்பினா புண்ணியம்!

— சுபி

“டொம்”

வாசல் கதவுப் பக்கம் சப்தம் வர, சேதுவின் சகல புலன்களிலும் விழிப்புணர்ச்சி.

சாகச நடை நடந்து மெல்ல ஜன்னல் வழியே எட்டிப் பார்த்தான்.

ஜன்னல் கதவு பத்து டிகிரி கோணத்தில் மட்டுமே திறந்திருந்தது. அதுவும் ஒரு கதவு மட்டுமே. மற்றொரு கதவு அடைக்கப்பட்டு, முன் வராந்தாவில் ஒரு செயற்கை இருட்டு சிருஷ்டிக்கப்பட்டிருந்தது.

வாசலில் யாராவது வந்தால், ஜன்னல் மூலம் சேது பார்க்கலாம். ஆனால் உள்ளிருக்கும் சேதுவை அவர்கள் பார்க்க முடியாது.

வாசலில் யாரையும் காணோமே! சர்வ ஜாக்கிரதை உணர்வுடன் ஜன்னல் கதவை கொஞ்சம் விரியத் திறந்து தெருவைப் பார்த்தான்.

தெரு முனையில் வசதியான வீடு. இரண்டு பக்கமும் முழுத் தெருவும் படமாய் விரிந்தது அவன் கண் முன்னால்.

சைக்கிளில் 'ட்ரிபிள்ஸ்' அடிக்கும் சிறுவன், அவனை 'சாவுகிராக்கி' எனத் திட்டியபடி வளைந்து ஓடும் ஆட்டோ, டீக்கடையில் வழக்கமான தினமலர், தினத்தந்தி வாக்குவாதம், மளிகைக் கடையில் நைட்டியில் அடங்காத குண்டு உடம்பு குடும்பத் தலைவி, பிள்ளையார் கோவிலின் வெளியே பயபக்தியுடன் சாமி கும்பிடும் பரீட்சை மாணவி... சந்தேகப்படும்படி எதுவும் இல்லையே!

மீண்டும் கதவில் 'டொம்'! பந்து ஒன்று உருண்டு வாசலுக்கு ஓட, நாலு வயது மதிக்கத்தக்க சிறுவன் அதை எடுத்துக் கொண்டு மறைந்து விட்டான்.

நிம்மதியுடன் ஹாலுக்கு வந்து தரையில் மல்லாந்து படுத்தான் சேது.

கிராமத்தில் அம்மா! இங்கு ஒரு பிரைவேட் கம்பெனியில் வேலை கிடைத்துள்ளது. பதினைந்து நாட்களில் கிராமத்தைக் காலி செய்து கொண்டு அம்மா வந்து விடுவாள்.

ஐந்தாயிரம் அட்வான்சும், ஆயிரம் ரூபாய் வாடகையும் என வீட்டுக்காரரிடம் பேசி முடித்த போது சொன்ன பொய்கள்.



# 1 வெச்சிருக்கேன்

எல்லாமே திட்டமிட்டபடி நடக்க வேண்டும் மாஸ்டருக்கு. கொஞ்சம் பிசகி னாலும் தண்டனை நிச்சயம்.

ஒரு திட்டம் போடப்பட்டதும், அதை எப்படி நிறைவேற்றுவது என அணு அணு வாக யோசித்து, பகுதி பகுதியாகப் பிரித் துச் செயல்படுத்துவது மாஸ்டரின் மூளை தான்.

கிரிமினல் பிரெய்ன்! மாஸ்டரின் திட்டம் எதுவுமே தோற்றதில்லை. அதனால் தான் பெட்டி, பெட்டியாக பணத்துடன் பலரும் மாஸ்டரின் கடைக்கண் பார்வைக் காகக் காத்துக் கிடக்கிறார்கள்.

சீனிவாசநகர், பிள்ளையார் கோவில் தெருவுக்குப் போ!

சேது. கோவாவில் இருந்த போது வந்த கட்டளை. உடனே புறப்பட்டு வந்து விட் டான்.

திட்டம், பகுதி பகுதியாகத்தான் சேது வைப் போன்ற கருவிகளுக்குச் சொல்லப் படும். தினசரி இரவு போனில் ஒரு நம்பரை தொடர்பு கொண்டால் உத்தரவு கிடைக் கும். அதன்படி அடுத்த நாள் செயலாற்ற வேண்டும்.

இந்த ஊரில் மதக் கலவரத்தைத் தூண்ட வேண்டும். அதுதான் மாஸ்டர் பிளான். மசூதி யில் ஒரு குண்டு வெடிக்க வேண்டும் காலை யில். மதியமே கோவிலில் மற்றொரு குண்டு வெடிக்க வேண்டும்.

நாளை மறுநாள் வெடிகுண்டு வந்து சேரும். மூன்றாவது நாள் சேது காரியத்தை முடிக்க வேண்டும்.

எந்த மசூதி, எந்தக் கோவில் என்பது பற்றியெல்லாம் உத்தரவு இனிதான் வரும்.

வேலை கச்சிதமாய் முடிந்து விட்டால், மூன்று மாதம்-ஓய்வுதான். பெட்டி நிறையப் பணத்துடன் பம்பாய், டெல்லி, டார் ஜிலிங், கல்கத்தா என்று தலை மறை வாய்ப் போய்விட வேண்டும். ஆனால் எந்த ஊருக்குப் போனாலும் வாரத் தில் இரண்டு முறை தலைமைக் கேந் திரத்துடன் தொடர்பு கொண்டே ஆக வேண்டும்.

கிருஷ்ணா



கோவாவில் தங் கிய போது கிடைத்த அனுபவங்கள் அவன் மனத்தில் கிளர்ச்சியைத் தூண்டின.

கிராமத்தில் பிறந்து, ஏழை விவ சாயி மகனாய் வளர்ந்து, - ஒரு வேளை சோற் றுக்கே வழி தெரியா மல் கிடந்து, திருட்டு ரயிலேறி பட்டணம் வந்து... பழைய குப் பைகள் இனி எல்லாமே! இப்போது கை நிறையப் பணம். திகட்டும் அளவு வசதிகள். ஆனால் உயிர் போகும் அபாயமான பணி!

அலட்சியச் சிரிப்பு ஒன்று அவன் முகத்தில் விரிந்தது.

தன்னை மிதித்துத் துவைத்த சமுதா யத்தை ஜெயித்து விட்ட பெருமிதம் அதில் தெரிந்தது.

அடுத்த நாள் பொழுது விடிந்த போது, வேட்டைக்குத் தயாரான புலியின் வேகம் அவன் உடலெங்கும் பரவியிருந்தது.

மழ மழவென தாடி, மீசையை சிரைத் தான். கண்களின் கீழே செயற்கையான

பிளாஸ்டிக்கை ஒட்டிக் கொண்டான். வாயின் உள்ளே இருபுறமும் ரப்பர் குண்டுகளை அடக்கி கன்னத்தை உப்பலாக்கிக் கொண்டு, கண்ணாடியில் தன் உருவத்தைப் பார்த்தான்.

நேர்கோடாய் இருந்த முகம், தட்டையாகிப் போன விந்தையில், சந்தோஷமாய் சிட்டியடித்தான்.

செயற்கை உபகரணங்களை நீக்கி, முகத்தை இயல்பு நிலைக்குக் கொண்டு வந்தான்.

வயிற்றில் பசி 'நானிருக்கிறேன்' என்றது. கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தவனுக்கு வீட்டு வாசலில் அதிர்ச்சி காத்திருந்தது.

**ப**ளிச்சென வாசல் கூட்டப்பட்டு, நீர் தெளித்து, நேர்த்தியாய்ப் போடப்பட்ட கோலம் அவனைப் பார்த்து, 'ஹலோ' சொன்னது.

யார் வேலை இது? மனசுக்குள் கோப இரைச்சல்.

''நீங்கதான் இந்த வீட்டுக்குக் குடி வந்திருக்கீங்களா?''

பக்கத்து வீட்டிலிருந்து திடீரென தலை முளைத்து, கேள்வி கேட்டது. .

"இருங்க வர்றேன்."

சைகை காட்டியபடி வந்து தன் முன் நின்ற பெண்ணை முழுதாய் கவனித்தான் சேது.

பாவாடையிலும், தாவணியிலும் தெரிந்த அழுக்கு, அவள் ஒரு வேலைக்காரப் பெண் என்று பறைசாற்றின.

ஆனால் உடைதான் அழுக்காயிருந்ததே தவிர, முகம் வாசலில் போட்டிருந்த கோலம் போல பளிச்சென்றிருந்தது.

''என் பேரு கண்ணம்மா. கண்ணு, கண்ணுன்னுதான் எல்லோரும் கூப்பிடுவாங்க. உங்களுக்கு முன்னாடி இந்த வீட்டுல இருந்தவங்களுக்கு நான்தான் வீட்டு வேலை பார்த்துக் கொடுத்தேன். தினசரி வாசலைப் பெருக்கி, தெளிச்சு கோலம் போட்டுடறேன். வீடு முழுக்க கூட்டித் துடைச்சுடறேன். பாத்திரம் விளக்கிடறேன். மாசம் நூறு ரூபாய் கொடுத்திடுங்க, சரியா?''

படபடவென சரமாய்ப் பேசியவளை முறைத்தான் சேது.

"எனக்கு இப்படி அதிகப்பிரசங்கித்தனமாய் நடந்துக்கிட்டா பிடிக்காது."

வெடுக்கெனப் பேசியவனை கண் கொட்டாமல் பார்த்தாள்.

"ஏய், என்ன?"

"நேத்து தாடி, மீசையோட இருந்திங்க. இன்னிக்கு எடுத்திட்டீங்களே."

திடுக்கிட்டுப் போய்ப் பார்த்தான் அவளை. கண்காணிக்கிறாளோ? எப்படி என் பார்வையில் படாமல் இருந்தாள்?

"ரெண்டுலேயுமே அழகாய்த்தான் இருக்கீங்க. இன்னிக்கு முகத்துல களை கொஞ்சம் தூக்கலாய் இருக்கு.''

வெட்கச் சிரிப்புடன் சொல்லிவிட்டு ஓடி விட்டாள்.

சேது யோசனையுடன் நடந்தான்.

அக்கம்பக்கத்தில் யாருடனும் அநாவசிய உறவுகளோ, நட்போ கூடாது. அவனுக்குப் போதிக்கப்பட்ட பால பாடம்.

முக்கியமாய் பெண்கள்! தள்ளியே நிற்க வேண்டும். திட்டத்தைச் செயலாற்றும் போது பெண்ணாசையைத் துறந்தே ஆக வேண்டும்.

இந்தக் கண்ணம்மா தன்னை நிறையவே கவனித்து விட்டாள். கூடவே வாசலில் கோலம் வேறு.

எப்படி அவளிடமிருந்து நழுவுவது? டிபன் சாப்பிட்டபடி சிந்தித்தான். திரும்பும் வழியிலும் அதே யோசனை.

பெட்டிக் கடையில் அன்றைய செய்தித்தாளை வாங்கிக் கொண்டு தலைப்புச் செய்தியை மேலோட்டமாய்ப் பார்த்தான்.

"நம் மாநிலம் அமைதிப் பூங்காவாய்த் திகழ்கிறது. மதச் சார்பின்மை காற்று வசந்தமாய் வீசுகிறது. எல்லா மதத்தினரும் ஒரே சகோதரர் போல பாசம் காட்டி வாழ்கின்றனர்."

முதலமைச்சரின் பேட்டியைப் படித்ததும் முகத்தில் குறுநகை பிறந்தது.

அடுத்த இரண்டு நாட்களில் பூங்காவில், புயல் வீசப் போகிறது முதல்வரே!

பேப்பருடன் தெருவில் நடந்தான். திடீரென அவன் மேல் சைக்கிள் வந்து மோத, முன்புறமாய் 'நமஸ்காரம்' செய்வது போல விழப் போய் சமாளித்து, முடியாமல் தரையில் கிடந்தான்.

"டேய், ஏண்டா சைக்கிளில் ஏறிட்டா உங்களுக்கெல்லாம் கண்ணு, மண்ணே தெரியாதாடா? பிளேன்ல போற நினைப்பாடா உங்களுக்கு. படக்கூடாத இடத்துல பட்டிருந்தா என்னத்துக்குடா ஆகறது?''

கண்ணம்மா எங்கிருந்தோ முளைத்து, சைக்கிள்காரனை உண்டு, இல்லை என்று ஆக்க ஆரம்பித்தாள்.

சிறு கும்பல் கூடி விட்டது. சேது மெல்ல

எழுந்தான். முழங்கையிலும், காலிலும் சிராய்த்து விட்டது. எரிச்சலில் கோபம் வந்தது.

கண்ணம்மா மேல் கோபம்! தான் இருப்பது கூடிய வரை மற்றவர் கண்ணில் படாமல் இருக்க விரும்பினான்.

ஊரைக் கூட்டி இப்படி பப்ளிசிடி செய்து கொண்டிருந்தவளை, எதுவும் செய்ய முடியாத ஆத்திரத்துடன், அந்த இடத்திலிருந்து நழுவினான்.



''அந்த போலி டாக்டர் முன்ன பஸ் டிரைவரா இருந்திருப்பான்னு எப்படிச் சொல்றே?''
''இதயம் நின்னு போனா என்ன பண்றது டாக்டர்னு கேட்டதுக்கு 'இறங்கித் தள்ள வேண்டியதுதான்'னு சொன்னத வச்சிதான்!''
— தாரை ஆ. அருண்ராஜ்

**வீ**ட்டுக்குள் நுழைந்து, காயங்களை நீரால் கழுவினான். எரிந்தது. கைவசம் எந்த மருந்துமில்லை. ஆயின்ட்மெண்ட் போட்டால் நாளைக்கே சரியாகிவிடும்.

மருந்து வாங்க எண்ணி அவன் வாசல் கதவைத் திறக்கவும், அவனை தள்ளிக் கொண்டு கண்ணம்மா உள்ளே நுழையவும் சரியாயிருந்தது.

''காயம் ரொம்ப ஆழமாயிருக்காங்க? காட்டுங்க பார்ப்போம்.''

உரிமையுடன் அவன் கையைப் பற்றி காயத்தைப் பரிசோதித்தாள்.

''பட்டுக் கெடப்பான். இப்படியா மோதுவான்?''

சபித்தபடி தன் இடுப்பில் செருகியிருந்த பையை எடுத்தாள். உள்ளே கைவிட்டு எதையோ எடுத்து அவன் முன் நீட்டினாள்.

ஆயின்ட்மெண்ட்!

''மருந்துக் கடையிலே கேட்டேன் விவரம் சொல்லி. இதைப் போட்டா போதுமாம். ஒரே தரத்துல காயம் ஆறிடுமாம். கையை நீட்டுங்க, போட்டு விடறேன்.''

சேது அவளை தீர்க்கமாய்ப் பார்த்துச் சொன்னான்.

''வெளியே போ.''

''வீட்டுல யாருமில்லாம தனியா இருந்து கஷ்டப்படறீங்களே, காயம் வேறு பட்டிருக்கு, மருந்து போட்டு விடலாம்னு வந்தா ஏன் இப்படி கடுகடுன்னு பேசறீங்க?''

சுவாதீனமாய் எந்த பாதிப்புமின்றி பேசியபடி, ஆயின்மெண்ட் டியூப்பிலிருந்து, மருந்தை பிதுக்க ஆரம்பித்தாள்.

சேதுவின் புத்தியெங்கும் ஆத்திரம்.

''ஏய், சொல்றேன்ல. வெளியிலே போடி.''

ஆங்காரமாய் அவன் கத்த, வியப்புடன் அவனைப் பார்த்தாள்.

தனது கோபம் அவளிடம் செல்லுபடியாகவில்லை என்று புரிந்ததும், சேது அடுத்த அஸ்திரத்தை இறக்க முடிவு செய்தான்.

''என்ன நீ மரமாட்டம் நிக்கற? ஏன் இப்படி ஆம்பளை வேணும்னு அலையறே? நான் அந்த மாதிரி சபலப்பட்ட ஆள் இல்லை புரியுதா? அதுக்கெல்லாம் வேற எவனையாவது போய்ப் பாரு.''

அடிக்க வேண்டிய இடத்தில் அடித்ததும் வேலை செய்தது அவன் பேச்சு.

கண்ணம்மா முகத்தில் அதிர்ச்சி தோன்றி, பிறகு முகம் கணங்கி, சுருங்கிப் போய் அவனை வெறித்தாள்.

மனத்தில் ஆழமாய் காயம் பட்டதை கண்ணிலிருந்து பெருக ஆரம்பித்த அவள் கண்ணீர் சொன்னது.

மெல்ல, மெல்ல விம்மலாய் அழுகை வெடித்தது. முந்தானையால் வாயைப் பொத்திக் கொண்டு குலுங்க ஆரம்பித்தாள்.

தனது வசையால் அவமானம் தாங்காமல் அவள் ஓடி விடுவாள் என்று எதிர்பார்த்தவனுக்கு, நின்ற இடத்திலிருந்து அசையாமல் அவள் அழுது கொண்டிருப்பது தர்மசங்கடமாயிருந்தது.

திடீரென அவள் அழுகை நின்றது.

''என்ன பேச்சய்யா பேசிட்டே? ஆமாம், நான் உன்னை சுத்திச் சுத்தி வருவது உண்மைதான். காரணம் தெரியுமா?''

கழுத்தில் அணிந்திருந்த சங்கிலியைக் கழற்றினாள். அதிலிருந்த டாலரை அவன் முன் நீட்டினாள். டாலரினுள் இருந்த படத்தைப் பார்த்த சேது அதிர்ந்தான்.

ஆம், அது அவன் படம்!

(தொடரும்)



“உன்னோட ஃபிரண்டு சத்யசீலன் வெவகாரம் தெரியுமா?”

அப்பா கேட்டார். கேட்ட விதத்தில்... ஏதோ விபரீதம் தொனித்தது. பின்னணியில் வலுவான சம்பவம், சமாசாரம் ஒளிந்திருந்து, அதை வெளிப்படுத்துவதற்கான பீடிகையாய் அந்த வரியை அவர் ஆரம்பித்திருந்தார். ஊரிலிருந்து

**படுதலம் சுகுமாரன்**

# அப்பாக்கள்

அவர் கொண்டு வந்திருந்த பலகார டின்களை எடுத்து ஷெல்ஃபில் பத்திரப்படுத்திக் கொண்டிருந்த நான்... நிதானித்து... திரும்பி அவரைப் பார்த்தேன்.

"என்னப்பா..."

"அவன்... ஒண்ணும் தெரியாத பயல்னு நாமெல்லாம் நினைச்சிக்கிட்டிருந்தோம். பொல்லாத வேலையெல்லாம் பண்ணிப் புட்டானே..." தோளில் கிடந்த துண்டால், கழுத்து வியர்வையைத் துடைத்தபடியிருந்தார் அவர்.

'பொல்லாத வேலை...' என்ற வார்த்தை... என்னுள் மின்சாரம் பாய்ச்சியது. அவனுக்கும் கோமதிக்குமான விவகாரம் வெளியில் கசிந்துவிட்டதா என்ன? அவசர நொடிகளில் அதைச் சொல்லிவிடுகிறேன்...

சத்யசிலன் என் பால்ய சிநேகிதன்.

எதிரெதிர் வீடு.

ஒண்ணாம் வகுப்பிலிருந்து பன்னிரெண்டு வரை... இருவரும் இணை பிரியாத தோழர்கள். அமைதியானவன், கொஞ்சம் அழகும்கூட, இன்வர்ட்டட். எதையும் 'பளிச்' சென்று வெளியில் சொல்லாமல் புதைத்து வைத்துக் கொண்டு மருகும் டைப். அவனுக்கு ஓரளவாவது 'க்ளோஸ்' என்று சொன்னால்.. அது நான் மட்டும் தான்.

மலையடிவாரத்தில் உலாவப் போக, நைட் ஷோ கொட்டகைக்கு போக, பள்ளிக்கூடம் போக, கிணற்றில் கோட்டை கட்டி குளிக்கப் போக... என்று எங்கும் என்னோடு அவனைப் பார்க்க முடியும்.

சக ஊர்ப் பையன்கள் ஒன்பதாம் வகுப்பு தொடுகையிலேயே பீடி குடிக்கவும், தோப்போரம் ஒதுங்கி சீட்டு ஆடவும் செய்து கொண்டிருந்த நாளில் இவன் ஒருவன்தான்... என்னைப் போல நெற்றி விபூதியும், கையில் பாடப் புத்தகமும், வாயில் கந்த சஷ்டிக் கவசமுமாய் வளைய வந்தவன்.

அதன் காரணமாகவே... கறாரான அப்பா... அவனுடனான என் சிநேகிதத்தை அனுமதித்திருந்தார். இப்படி பசுவாக இருந்த அவன் சுபாவம்... எப்படியோ கோமதியைக் கவர்ந்து போயிருந்தது. இவனுக்கும் அவளை வைஸ்வர்ஷா.

என்னிடம்தான் உள்ளக் கிடக்கையை வெளியிட்டான்.

'காதல்' என்றால் அது பலான விவகாரத்தின் மறுபெயர் என்ற அபிப்ராயத்தில் இருந்தவன் நான். அவன் அப்படிச் சொல்லவும் 'சீச்சீ... அசிங்கம், அசிங்கம்' என்று திட்டினேன். ஒரு வார காலத்தில்... அந்த ஏக்கத்திலேயே அவனுக்கு ஜுரம் வந்து விட்டது.

அவன் பட்டபாட்டைப் பார்த்து, இரக்கம் சுரந்துவிட்டது எனக்கு. போனால் போகிறதென்று அவன் காதலை அங்கீகரித்து விட்டேன். அவனுக்கும் உடம்பு சரியாகிவிட்டது.



கோமதிக்கு தன் எண்ணத்தைத் தெரியப்படுத்தும் விதமாக அவன் ஒரு கடிதம் எழுதினான். அந்தக் கடிதத்தை என்னையே கொண்டு போய் கோமதியிடம் கொடுக்கச் சொல்லி விட்டான்.

உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு நான் அந்தக் காரியம் செய்தேன். காரணம்... சத்யசிலன் ரெட்டியார். கோமதி கோமுட்டி செட்டி வர்க்கம். இது வேலைக்காகாது என்பது ஒரு பக்கம், வெளியில் தெரிந்தால் விபரீதம் ஆகும் என்பது ஒரு பக்கம். பொது

வாகச் சண்டை போடுகிறவர்களைவிட... சமாதானத்துக்காக இடையில் நுழைகிறவர்களுக்குத்தான் பாதிப்பு அதிகம் என்பது எனக்குத் தெரியும்.

ஆனாலும்... செய்தேன்.

காரணம் நட்பு. உடுக்கை இழந்தவன் கைபோலே... இடுக்கண் களைவது... என்று படித்ததால் செய்தேன்.

சத்யசீலனுக்காக கோமதியிடம் போன நான், கோமதிக்காக சத்யசீலனிடமும் வர வேண்டியிருந்தது. பதில் கடிதம் தயாராய் வைத்திருந்தாள் அவள். இது நடந்தது... எஸ்.எஸ்.எல்.ஸி.எழுதிவிட்டு ரிசல்டுக்காக வெயில் விடுமுறையில் நாங்கள் காத்திருந்த நாட்களில்.

ரிசல்ட் வந்தது... (சத்யசீலன் 80%, கோமதி 70%. நான் 57%) பிளஸ் ஒண்ணுக்கு போனதும், ஸ்கூலில் அவர்கள் ஐக்யமாகி விட்டார்கள்.

அவள் வொகேஷனல் குரூப்பில் சேர்ந்தாள் என்பதற்காகவே விஞ்ஞானத்தில் 82 மார்க் எடுத்த அவனும் அந்த குரூப்பில் சேர, நான் முதல் க்ரூப் (கணக்கு) எடுத்துக் கொண்டு விலகினேன்.

க்ரூப்கள் வேறுவேறாயினும், எங்கள் ஊர், ஸ்கூலுக்கு நாங்கள் போகும் வழி எல்லாம் ஒன்றாக இருந்ததால், நானறியாமல் சத்யசீலன் செய்த காரியம் ஒன்றுமில்லை... ஆனால், பிளஸ் டூவில் மெய்ன் சப்ஜெக்ட்டில் அவன் ஃபெயில் ஆனது அதிர்ச்சியாயிருந்தது.

"காரணமாத்தான் ராஜா" என்றான்.

"கோமதியை அவங்க வீட்ல காலேஜ் அனுப்ப மாட்டாங்களாம். நான் பாஸாயிட்டால், வீட்ல துரத்திடுவாங்க காலேஜுக்கு. நான் அவளைச் சந்திக்கிறது தவிர்க்கப்படும். அத நான் விரும்பலை..." என்றான் வாலறுந்த நரியாட்டம்.

அவன் கருத்தில் எனக்கு உடன்பாடு இல்லாவிட்டாலும், அவன் காதலுக்கு மரியாதை கொடுத்துத்தான் இருந்தேன்.

எனக்கு சென்னை பச்சையப்பனில் இடம் கிடைக்க... 'இன்னொரு மு.வ.வாய், வைரமுத்துவாய், பெரியார்தாசனாய் வந்துருவடா" என்று தட்டிக் கொடுத்து அனுப்பினான்.

ஹாஸ்டல் வாசம்.

மாதம் ஒருமுறை அப்பா வந்து ஃபீஸ் இத்யாதிகளை கவனித்துவிட்டு அம்மா போட்டுக் கொடுத்த வத்தல், முறுக்கு, ஊறுகாய்களைக் கொடுத்து விட்டுப் போவார்.

கடைசியாய் ஸெகண்ட் செமஸ்டர்... ஸ்டடி லீவில் ஊருக்குப் போயிருந்தபோது...

"ரெண்டு பக்கத்திலும் லேசாக புகைய ஆரம்பிச்சுட்டுது. கல்யாணம் ஒத்து வராது போலிருக்கு. திருத்தணில ரெஜிஸ்தர் மாரேஜ் வச்சுக்கலாம்னு பார்க்கறேன். சாட்சி கையெழுத்துக்கு வருவியாடா" என்று கேட்டான். ஆகட்டும் என்று சொல்லியிருந்தேன்.

இப்போது... அப்பா... அவனைப் பற்றி ஆரம்பிக்கிறார் என்றால்...

"சொல்லுங்கப்பா. என்னா சமாசாரம்?..." பதறினேன்.

அவர் துண்டு எடுத்து உடம்பு வியர்வையெல்லாம்... இத்தனை வரிகளும் எழுதி முடிக்கும் நேரம்... துடைத்துக் கொண்டு,

"கோமதினு ஒரு பொண்ணு தெரியுமா உனக்கு?"

ஜங்...

குளிர் ஓடியது உள்ளுக்குள், 'டேய் ராஜா. கொக்கி மாட்டாத, மாட்டாத! அலாரம் அடிக்க...

"யாருப்பா... நம்ம குப்பாயி பேத்தியா... கை கால் கொஞ்சம் ஊனமாத் திரியுமே அதா?..." முகத்தில் டன், டன்னாய் 'அப்பாவி' வழியக் கேட்க, அப்பா,

"அதில்லடா. பொம்மராஜுபேட்ட கோமதி. உங்ககூட படிச்சதாமே..."

"ஞாபகம் இல்லப்பா..."

அப்பா... பெருமிதமாய் நிமிர்ந்தார். 'எம்மவன் சொக்கத் தங்கம்ல.'

"செட்டியார் பொண்ணு...! அதுக்கும் இந்தப் பயலுக்கும் சகவாசம் போலிருக்கு. ரொம்ப நாள் தொடர்பாம். வெளியில தெரியல... அநேகமாய் உனக்கும் தெரிஞ்சிருக்காதுன்னு நினைக்கறேன்..."

"சேச்சே... தெரியவே தெரியாதுப்பா..."

"இந்தப் பையன், அவளைப் பொண்ணு கேட்டு... அங்க போயி ரகளை பண்ணி

**ரோஜா செடியில்**

இதுவரை 200 இனங்களும், 60,000 ரகங்களும் இருப்பதாகக் கண்டறியப்பட்டுள்ளது. நம் நாட்டுக்கு இது முதன் முதலாக முகலாய மன்னர்களால் அறிமுகப்படுத்தப்பட்டது. 1526ல் பாபர் அறிமுகப்படுத்திய பெர்ஸியன் ரோஜாதான் இவ்வகையில் முதலாவதாகும். இப்போது அதிகளவில் பயிரிடப்படும் எட்வர்டு ரோஜா வகை ஆங்கிலேயர்களால் அறிமுகப்படுத்தப்பட்டது.

- த. சாந்தி

யிருக்கான். அவங்க சம்மதிக்கலை போல. பேச்சுக்குப் பேச்சு வந்து அடிதடியாயிட்டிருக்கு...''

''எப்பப்பா?''

''பத்து நாள் முன்ன சமாசாரம் இது.''

''அ.... அப்புறம்?...'' எனக்குள் பிரஷர் ஏறிற்று.

''ரெண்டு பக்கத்துப் பெரிய மனுஷாளும் போய்ச் சமாதானம் பேசி விலக்கி வச்சோம். அந்தப் பொண்ணுக்கு சட்டுபுட்டுனு கல்யாணத்துக்கு ஏற்பாடு பண்ண ஆரம்பிச்சாங்க. இந்தப் பய சும்மாருக்கனுமில்லியா... கட்னா அவளத்தான் கட்டுவேன்னு அடம் பிடிச்சிட்டான்.

''நாலு நாளைக்கு முன்னாடி... திடுதிப்னு ரெண்டு பேரையும் காணோம்...'' தொடர் அத்தியாயத்தின் கடைசிவரிபோல் நிறுத்தினார். எனக்கு மனசு படக் படக்.

''எங்க போனாங்கப்பா. இங்க கூட வரலியே..'' கேட்டுவிட்டு நறுக்கென்று நாக்கைக் கடித்துக் கொண்டேன்.

''ஊரெல்லாம் தேடியாச்சு... சுத்து வட்டாரமெல்லாம் பார்த்தாச்சு. பொண்ணோட அப்பன் போலீஸ் கம்ப்ளெய்ண்ட் கொடுத்துட்டான். பொதட்டூர் போலீஸ், சத்யசிலன் வீட்டு ஆளுகள பிடிச்சிட்டுப் போயிட்டாங்க. உடனே நம்ம ஆளுக, பொம்மராஜு-பேட்டை மேல சண்டைக்கு போக... அவங்க கத்தி, கம்பு கடப்பாறைனு பதிலுக்கு அடிக்க வர.. ஒரே சண்டை....''

''கடவுளே....''

அந்தக் காதலுக்கு ஆரம்ப நாட்களில் நானும் உடந்தை என்று தெரிய வந்தால் என்னையும் பெண் வீட்டார் 'கை' வைப்பார்களோ... திகில் பரவ... அதே சமயம் நண்பன் நிலையறிய துடித்தது மனம்.

''நாலுநாள்... அவங்க எங்கிருந்தாங்க, ஏதாயிருப்பாங்கனு தெரியல. ஒருத்தர் மெட்ராஸ் ஓடிட்டான்னு சொன்னார். ஒருத்தன் சித்தூர் பஸ்ல பார்த்ததாய்ச் சொன்னான்... அஞ்சாம் நாள்... காலைல நம்ம ஊர் பொண்ணுங்க... தெருக் கிணத்துல தண்ணி எடுக்க போறப்ப... தண்ணி ஏதோ வாடை வர்றாப்ல தெரியுதேன்னு பார்த்திருக்காங்க. எலி, கிலி விழுந்துருக்குமான்னு பார்த்தால்...

பொழுது ஏற ஏற...நாத்தம் தூக்குது. என்னதான் இருக்கும்னு... ஆளுங்களை தண்ணிக்குள்ள இறக்கி விட்டுப் பாக்கறம்...''





எனக்கு... திகிலில் தொண்டை அடைத்தது..

''ரெண்டு பேரும்... ராவோடு ராவா... கல்லைக் கட்டிக்கிட்டு இறங்கிட்டிருக்காங்க. நாலு நாள் தண்ணில ஊறுனதால.. உடம்பு ஊதி, அழுகியிருந்திச்சு... பாவிப் பசங்க... இப்படியுமா செய்வாங்க...''

எனக்குக் கண்ணில் நீர் திரையிட்டது. துக்கத்தைக் கட்டுப்படுத்த முடியவில்லை..

''அ... அப்புறம்?...'' என்றேன்.

''அப்புறம் என்ன பண்றது... பாடிய வெளியில எடுத்துட்டு மோட்டார் வச்சு... தண்ணியெல்லாம் இறைச்சிட்டு, கிணறெல்லாம் மருந்து அடிச்சிட்டம். தண்ணி சுத்தமாக வாரம், பத்து நாளாவும். எப்படியானாலும், ரெண்டு பொணம் கெடந்த கெணத்துல தண்ணி எடுக்க மனசு ஒப்புமா? ஊர் ஜனங்க எல்லாம் அரை மைல் நடந்து போய் பம்பு செட்ல தண்ணி பிடிச்சியாருதுங்க. உங்கம்மாவும் அவ்ளோதூரம் போய்ட்டுத்தான் வரவேண்டியிருக்கு. எல்லாம் தலையெழுத்து.. செத்ததுங்களுக்குக் கொஞ்சமாவது அறிவிருக்க வேண்டாம். என்னடா... ஊர் பொதுக் கிணறு. குடி தண்ணீர் எடுக்கற இடம். இதுல விழுந்து செத்தால் தண்ணி கெட்டுப் போவுமே... ஜனங்க குடி தண்ணிக்குக் கஷ்டப்படுவாங்களேன்னு யோசிக்க வாணாம். ஊர்ல எத்தனை குளம் குட்டைகள் இருக்கு விழுந்து சாக. இருந்திருந்து இதுலயா விழணும்...''

அப்பா சொல்லச் சொல்ல... எனக்கு எங்கிருந்துதான் அந்தக் கோபம் வந்ததோ.... ''பாவி'' என்று அலறினேன்.

நான் சத்யசிலனைத்தான் அப்படிச் சொன்னதாக நினைத்துக் கொண்டு சும்மாயிருந்தார் அப்பா. ●

சினிமாத் துறையில் பல்வேறு திறன் கொண்ட முகங்கள் உடைய டி. ராஜேந்தர், 93-ம் வருடம் தீபாவளி முதல் 'டி.ராஜேந்தரின் உஷா'வை ஆரம்பித்து பத்திரிகை ஆசிரியர் ஆனார். சில மாதங்களுக்கு முன்பு ரொம்பவும் நஷ்டப்பட்டு, பத்திரிகையை நிறுத்தி விட்டார். பத்திரிகை ஆசிரியர் என்கிற முறையில் தமக்கு ஏற்பட்ட அனுபவங்களைக் கூறுகிறார் டி.ஆர்...

பத்திரிகை உலகைப் பொருத்தவரை எஸ்.எஸ்.வாசன், கல்கி, சோ இவர்களைக் கண்டு நான் வாசகன் என்ற முறையில் பிரமித்துப் போனவன். இலக்கிய ஆர்வம் மிகுந்தவனான எனக்கு, என் இலக்கிய தாகம் முழுவதையும் வெளிப்படுத்த, சினிமா என்கிற மீடியத்தில் வாய்ப்பு கிடைக்கவில்லை. கலைநயம் மிகுந்த விஷயத்தைக் கூட, சினிமா முலாம் பூசித்தான், என்னால் திரையில் சொல்ல முடிந்தது. அதனால், இலக்கியத் தரமாகவும், அதே நேரம் கமர்ஷியலாக வெற்றி பெறும் விதத்திலும் ஒரு பத்திரிகை ஆரம்பிக்கும் எண்ணம் எனக்கு ஏற்பட்டது. பத்திரிகை நடத்தி, அதன்மூலம் லட்சக்கணக்கில், லாபம் பார்ப்பது என் நோக்கமே இல்லை.

எடுத்த எடுப்பிலேயே உஷா பத்திரிகைக்கு மிகுந்த வரவேற்பு. மூன்றாவது வாரத்திலேயே சர்க்குலேஷன் ஒரு லட்சத்து அறுபதா யிரம் பிரதிகளைத் தொட்டது என்பது இன்று என்னாலேயே நம்ப முடியாத உண்மை. பத்திரிகையின் லே-அவுட்டில் தொடங்கி, தலையங்கள் வரை எல்லாவற்றையும் நானே நேரடியாய்ப் பார்த்துக் கொண்டேன்.

ஒவ்வொரு வாரமும், ஒவ்வொரு பிரபலத்தை, நானே நேரடியாகச் சென்று பேட்டி கண்டு, எழுதினேன். காஞ்சிப் பெரியவர் ஜெயேந்திர ரைச் சந்திக்கிற யாரும், சட்டையைக் கழற்றிவிட்டுச் செல்வது மரபு. ஆனால், நான் அவரை ஒரு பக்தன் என்கிற முறையில் அல்லாமல், ஒரு பத்திரிகை ஆசிரியர் என்கிற முறையில் சந்திக்கப் போனதால், சட்டையைக் கழற்ற வேண்டாம் என்று கருதினேன். பெரியவர், என் கருத்தை மதித்து 'சட்டை அணிந்து கொண்டிருந்தால் பரவா யில்லை' என்று கூறி, பேட்டி தந்தார். இது எனக்கு ஒரு வித்தியாசமான அனுபவம்.

நக்கீரன் கோபால், எத்தனை சுலபமாக காட்டுக்குள் சென்று, வீரப்பனைச் சந்தித்து விட்டு வந்தார் என்பதை நாடே அறியும். ஆனால், நான் கோபாலை பேட்டி காண, என் அலுவலகத்திலிருந்து புறப்பட்டு, என்னைப் பின் தொடர்ந்த போலீஸ் கண்ணில் மண் ணைத் தூவிவிட்டு ஏழு தடவை வேறு கார்களுக்கு மாறி, ஒரு ரகசியமான இடத்தில் கோபாலைச் சந்தித்து பேட்டி கண்டேன். காரணம் அ.தி.மு.க. ஆண்ட அந்தச் சமயத்தில் தமிழக போலீஸ் கோபாலைக் கைது செய்ய, தேடிக் கொண்டிருந்தது! அவரது டெலி போன் ஒட்டுக் கேட்கப்பட்டது. பேட்டி மக்களிடையே பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது.

இன்னொரு பரபரப்பான விஷயத்தை நான் இதுவரை சொன்னதேயில்லை. முதன் முதலாக, வீரப்பனை காட்டுக்குள் சென்று பேட்டி எடுத்துக் கொண்டு வந்தாரே ஒரு ஃப்ரீலான்ஸ் பத்திரிகையாளர்... அவர், வீரப்பன்பேட்டி மற்றும் புகைப்படங்களை, என்னிடம்தான் ஒரு நண்பர் மூலமாய்க் கொண்டு வந்தார். ஆனால் நான் அதை வாங்கி, 'உஷா' பத்திரிகையில் வெளியிட மறுத்து விட் டேன். காரணம், நாம் எதையுமே பாஸிடிவ்வாகச் சொல்ல வேண்டும்; வீரப்பன் போன்ற நெகடிவ் கேரக்டர்களை, ஹீரோ போல உயர்த்திக் காட்டுவதில் எனக்கு உடன்பாடில்லை என்பதுதான்.

ஜெ. ஆட்சிக் காலத்தில் வாராவாரம் நான் எழுதிய தலை யங்கம் எல்லாம் ஆளும் கட்சிக்கு சம்மட்டி அடிபோல அமைந்தன. பத்திரிகையில் நான் சுட்டிக் காட்டிய குறைகள் உடனடி நட வடிக்கை மூலம் தீர்க்கப்பட்டு விட்டதாக, எனக்கு ஐம்பத்து எட்டு முறை ஜெ. அரசிடமிருந்து கடிதம் வந்தது.

வழக்கமாக, ஆன்றோர்கள், அறிஞர்களது பொன்மொழிகளைத்தான் பத்திரிகைகளில் வெளியிடுவார்கள். ஆனால் அவற்றைத் தவிர்த்து விட்டு, என்னுடைய சொந்தக் கருத்துக்களை 'என் மொழிகள்' என்ற பெயரில் எழுதினேன். மிகுந்த வரவேற்பைப் பெற்ற அந்த வாசகங்கள், டீக்கடையிலும், பிற இடங்களிலும் சிறு போர்டுகளில் ஃப்ரேம் போட்டு வைக்கப்பட்டன.

நான் ஒரு தடவை மூத்த பத்திரிகை ஆசிரியர் சாவியை பேட்டிகண்டபோது, "நீங்கள் ஒரு சிறந்த எழுத்தாளர். பத்திரிகையில் பல புதுமைகளைச் செய்து பார்த்த அனுபவஸ்தர். ஆனாலும், பத்திரிகை ஆசிரியர் என்ற முறையில் நீங்கள் ஜெயிக்கவில்லையே!" என்றபோது, அவர் சொன்னார்; "வாசகர்கள் விரும்பும் வண்ணம் பத்திரிகையை சுவாரசியமாய் நடத்துவது என்பது ஒன்று. பத்திரிகையை நல்ல முறையில் நிர்வகித்து நடத்துவது என்பது வேறு. நான் முதலாவதில்

# "என்னால் பத்திரிகையை நிர்வகிக்க முடியவில்லை!"

கெட்டிக்காரன்!"

அன்று சாவி சொன்னதை, நான் பத்திரிகை நடத்திய கடைசி இரு ஆண்டுகளில், அனுபவ பூர்வமாய் உணர்ந்தேன். பத்திரிகை லட்சம் பிரதிகளுக்கு மேல் விற்பனை ஆனாலும், விற்பனையாளர்களிடமிருந்து, ஒழுங்காய் பணம் வசூலிக்கும் விஷயத்தில் நான் தோற்றுப் போனேன். சினிமாவில் ஏகமாய் லாபம் பார்க்கிற ராஜேந்தருக்கு, பத்திரிகை வருவாய் பெரிதில்லை என்று நினைத்து விட்டார்கள் போலும்!

ஒரு நல்ல எழுத்தாளராக, வாசகர்களை உருவாக்க முடிந்த என்னால், நல்லதொரு நிர்வாகியாக இருந்து, வெற்றி பெற முடியாமல் போய்விட்டது.

ஆனாலும, பத்திரிகை ஆசிரியர் ராஜேந்தர், இன்னும் என் ஆழ்மனத்தில் உறங்கிக் கொண்டுதான் இருக்கிறார்.

சந்திப்பு: **கௌதம்**



## ஆகஸ்ட் 12 முதல் 18 வரை








**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

சனி பகவான் உங்க மேல கொஞ்சம் கோவமா இருக்காருங்க. அதனால சில தவிர்க்கமுடியாத தடங்கல்களைச் சந்திக்க வேண்டி வரும். வீட்டுல சிறு குழப்பங்கள், மனஸ்தாபங்களும் வரலாம். ஆனா மத்த விஷயங்கள்ல ஓஹோ. பண வரவு திருப்தியா இருக்கும். மேலதிகாரிகளோட பாராட்டு, எதிர்பாராத ஓர் உல்லாச அனுபவம், பெண்களுக்கு ஷாப்பிங் யோகம் – இதெல்லாம் இருக்கும். பெற்றோர் உடல் நலன் கொஞ்சம் கவலை தரும். மருத்துவச் செலவும் இருக்கும். சிலருக்கு அரசாங்கத்திலேருந்து ஏதாவது எதிர்பாராத அதிர்ஷ்ட வாய்ப்புகள் வரலாம்.

**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

உங்க தினசரி அலுவல்களில் ஒரு பிரச்சனையும் வராது. சொல்லப் போனா, நீங்க எதிர்பார்க்காத நபர்கள் கிட்டே இருந்து கூட உதவிகள் கிடைக்கும். உற்சாகம் பெருகும். உடல் நலன் திருப்தியா இருக்கும். நினைச்ச காரியத்தை சுலபமா சாதிப்பீங்க. ஆனா, சிலருக்குப் பண இழப்பு இருக்கும். அதாவது பிக்பாக்கெட் மாதிரி. பயணத்துல ஜாக்கிரதையா இருங்க. வாக்குவாதங்களைத் தவிர்த்து, அமைதியா காரியங்களைப் பார்த்தீங்கன்னா, முன்னேற்றம் சுலபம். பெண்களுக்குத் திருமண ஏற்பாடுகள் கூடற சமயம் இது. வயசுப் பசங்களுக்குக் காதல் அனுபவம் சுகமளிக்கும்! (அதுக்குன்னு பஸ் ஸ்டாண்ட், காலேஜ் வாசல்ல அலையாதீங்க. இப்பல்லாம் முட்டிக்கு முட்டி தட்றாங்களாம்.)

**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

மிகப் பெரிய மனிதர் ஒருத்தரோட தொடர்பு கிடைக்கும். அது மூலமா உங்களோட நீண்ட நாள் கனவு ஒன்னை இப்ப நனவாக்கிப்பீங்க. தொழிலதிபர்களுக்கும் வியாபாரிகளுக்கும் வளமான நேரம் இது. புதிய ஒப்பந்தங்கள் மூலம் கொழுத்த லாபம் கிடைக்கும்! கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு புகழ் கூடும். நீண்ட தூரப் பிரயாணம் ஒன்னு இருக்கும். வயசானவங்கன்னா, அது பக்தி யாத்திரையா கூட இருக்கலாம்! வீட்டுல ஏதாவது விசேஷம் நடக்கும். மூத்த மகன் மூலமா ஒரு நல்ல செய்தி வந்து சேரும். அரசாங்க உத்தியோகஸ்தர்களுக்கு ஆதாயமான கால கட்டம். வராத பழைய பாக்கிகள் வந்து சேர்ந்து குஷிப்படுத்தும்!

**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

உங்க தோற்றத்துல ஒரு புது வசீகரம் கூடுது. எல்லாரும் நீங்க சொல்றதைக் கேட்க ஆரம்பிக்கறாங்க. தொட்டதெல்லாம் வெற்றிதான்! குறிப்பா வியாபாரிகளுக்கு அமோகமான நேரம் இது. துணிச்சலா எந்தப் புது முயற்சியையும் இப்ப தொடங்கலாம்! வெற்றி நிச்சயம். பெண்கள் மட்டும் கொஞ்சம் ஜாக்கிரதையா நடந்துக்கணும். அக்கம் பக்கத்து வம்புகள்ல மூக்கு, கண், காது எதையும் நுழைக்காம இருந்தீங்கன்னா, ரொம்ப நல்லது. சிலருக்கு வீடு, மனை வாங்கற யோகம் இருக்கு. யோசிச்சி செயல் பட்டீங்கன்னா பங்கு மார்க்கெட்ல கூட லாபம் கிடைக்கும்! மொத்தத்துல இது உங்களுக்கு வளர்ச்சி தரும் வாரம்தான்.

**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

கிரக சஞ்சாரம் அவ்வளவு திருப்திகரமா இல்லை சார்! உங்க உடல் நலன் பாதிக்கப்படலாம். வயிறு சம்பந்தமான கோளாறுகள் ஏற்படலாம். உடம்பு சரியில்லைன்னு ஆபீஸுக்கு லீவ் போட்டீங்கன்னா, அங்க மேலதிகாரிகள் கோவிச்சிக்கிட்டு அப்பளம் பொறிப்பாங்க! என்ன செய்யறது? டைம் அப்படி.. வெளியூர் பயணங்களைத் தவிர்த்துடுங்க. வீட்டுல கூட ரொம்ப ஜாக்கிரதையா பேசணும். கணவன் - மனைவி உறவுல நிறைய ஊடல் வர்றதுக்கு சான்ஸ் இருக்குது. முதலீடுகள் வேணாம். கடன் குடுக்கறதோ, ஜாமீன் கையெழுத்துப் போடறதோ வேணவே வேணாம். முடிஞ்சா தினமும் பிள்ளையார் கோவிலுக்கு போயிட்டு வாங்க. அடுத்த வார மத்தியில நிலவரம் சீராயிடும்.

**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

பொருளாதார ரீதில சில பிரச்சனைகளை சந்திக்க வேண்டி வரும். முக்கியமான நேரத்துல பணம் இல்லாம திண்டாட வேண்டி வரலாம். அதே சமயம் செலவும் கைக்குள்ள அடங்காது! கடனேன்னு பல தண்டச்செலவுகள் செய்வீங்க! நிர்வாகத் துறைல இருக்கறவங்க ரொம்ப கவனமா இருக்கணும். அவசரப்பட்டு, வார்த்தையை விட்டுட்டு, பின்னால வருத்தப்படாதீங்க. கூட வேலை பார்க்கறவங்களை அனுசரிச்சி நடந்துக்கங்க. கொடுக்கல் வாங்கல் பிஸினஸ் இந்த வாரம் வேணாம். சிலருக்கு எதிர்பாராத ட்ரான்ஸ்ஃபர் இருக்கலாம். வயசான பெற்றோர் இருந்தாங்கன்னா, அவங்க உடல் நல ரீதில சில மருத்துவச்

# நடக்குமென்பார், நடக்கும்!

# அக்னி சர்மா பக்கம்

செலவுகளை சமாளிக்க வேண்டி வரும்.

**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம் 3-ம் பாதம் வரை)*

வழக்கு ஏதாவது இருக்குமா? இப்ப உங்களுக்கு சாதகமா தீர்ப்பு வரக்கூடிய நேரம்! வழக்கு மட்டுமில்லை. உழக்கு விஷயமானாலும் உங்களுக்குத்தான் எதிலுமே வெற்றி. எழுத்தாளர்கள், கணக்கு வாத்தியார்களுக்கும் புகழ் கூடும் சமயம் இது. எதிர்பாராத அதிர்ஷ்ட வாய்ப்புகள் வரும். சிலருக்கு ப்ரமோஷன் மாதிரியான 'லக்' காத்திருக்கு. அரசாங்க உத்தியோகஸ்தர்களுக்கு விரும்பின இடத்துக்கு மாறுதல் கிடைக்கும்! பெண்களுக்குப் புதிய ஆடை அணிகலன் வாங்கற யோகம் இருக்கு. கம்ப்யூட்டர் தொழில், கை வேலைத் தொழிலாளர்களுக்கும் பண வரவு பிரமாதமா இருக்கும். வாரக் கடைசில ஒரு இன்ப அதிர்ச்சியும் காத்திருக்கும்!

**விருச்சிகம் :** *(விசாகம் 4 – ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

வாரத் தொடக்கத்துல சிறு உடல் நலக் கோளாறு ஏதாவது வரலாம். ரெண்டு, மூணு நாள்ல சரியாயிடும். கூடப் பிறந்தவங்களால அனுகூலமும் ஆதாயமும் கிடைக்கும். ஆனா, உங்க வாய் உங்களுக்கு விரோதியா மாறும் கால கட்டம் இது. அதாவது அதிகம் வார்த்தை விடாதீங்க. அதிகம் சாப்பிடாதீங்க. குரு உங்களுக்குச் சாதகமா இருக்காரு. சிலருக்கு திருமண சாத்தியங்கள் இருக்கு. எழுத்தாளர்கள், பத்திரிகையாளர்களுக்குப் புகழ் கூடும். தெய்வப் பணிகள், தர்மப் பணிகள்ல மனசு போகும். அது நல்லதுதானே! இந்த வாரம் பணப் பிரச்னை இருக்காது. ஆனா, மனக் குழப்பம் மாதிரி நீங்களே வரவழைச்சுக்கக் கூடிய பிரச்னைகள் இருக்கும்!

**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

விழிப்புணர்வு முக்கியம் சார்! உங்க வளர்ச்சியைப் பார்த்து பொறாமைப் படுவோர் எண்ணிக்கை அதிகமாயிட்டே வருது! கவனமா இருங்க. புதிய முயற்சிகளை ரகசியமா செய்யுங்க. உடல் நலத்துலயும் அக்கறை காட்டுங்க. ராத்திரி ரொம்ப நேரம் கண் விழிக்காதீங்க. சின்ன சாலை விபத்துக்கு சான்ஸ் இருக்கு. டூ வீலர்ல போறதுன்னா கவனமா இருங்க. முடிஞ்சா, மாநகரப் பேருந்துலயே போயிட்டு வாங்க. வியாபாரிகள், தொழிலதிபர்கள் எச்சரிக்கையா இல்லாட்டி, நஷ்டத்தைச் சந்திக்க வேண்டி வரும். புதிய நண்பர்கள் கிட்ட ரொம்ப ஜாக்கிரதையா பழகுங்க. வீட்டுல உறவினர்கள் சப்போர்ட் உங்களுக்கு இருக்கு. அதே சமயம், ஆபீஸ்ல கவுக்கற கோஷ்டியும் தயாரா இருக்கு. பீ கேர்ஃபுல்!

**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

உங்க திறமை வெளிப்படுற வாரம். செயற்கரிய செயலெல்லாம் செய்யப் போறீங்க. அது மூலமா பதவி உயர்வு, இங்க்ரிமென்ட்னு ஜமாய்க்கப் போறீங்க. வீட்டுல மகிழ்ச்சி தாண்டவமாடும். வியாபாரிகள், விஞ்ஞானிகள், எழுத்தாளர்கள் எல்லாருக்குமே இது பலமான காலகட்டம். பெண்களுக்குப் புகழும் பாராட்டும் குவியப் போகுது. விளையாட்டுத்துறை ஆசாமிங்களுக்குக் குறைஞ்சது அரை டஜன் மெடல்களாவது உறுதி! விருந்து கேளிக்கை வாய்ப்புகள் இருக்கும். வெளிநாட்டுத் தொடர்பு உள்ளவங்களுக்கு ஒரு நல்ல செய்தி அங்கிருந்து வரும். மாணவர்கள் படிப்புல வெற்றி வாகை சூடுவாங்க!

**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

மூணுல சூரியன்னா சாதாரண விஷயமில்லீங்க! உங்க ஆற்றல் பிரகாசிக்கப் போகுது! கொஞ்ச நாளா படுத்திட்டிருந்த நோயெல்லாம் பறந்து போய், சும்மா சூப்பர் மேனாட்டம் துள்ளி எழப் போறீங்க. வீட்டுல ஏதோ விசேஷம் நடக்கப் போகுது. எதிர்பாராத விருந்தாளிகள் வரவு இருக்கும். பணப் பிரச்னை இருக்கவே இருக்காது. பெண்கள், வீட்டு உபயோகப் பொருளை வாங்கித் தள்ளுவாங்க. உத்தியோகஸ்தர்களுக்குப் பதவி உயர்வுக்கான வாய்ப்புகள் வரும். உல்லாசப் பயண வாய்ப்பும் சிலருக்கு இருக்கும். மொத்தத்துல கஷ்டமே இல்லாத வாரமா இது இருக்கும். என்ஜாய் பண்ணுங்க.

**மீனம் :** *(பூரட்டாதி 4 -ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

ரொம்ப விசேஷமான பலன்களை இப்ப எதிர்பார்க்காதீங்க. கிரக சஞ்சாரம் சரியா இல்லை. நிதானமா, எந்தக் காரியத்தையும் யோசிக்கச் செய்யுங்க. பெரியவங்ககிட்ட மரியாதையா நடந்துக்கங்க. வாக்குவாதங்கள், உறவுல விரிசலை உண்டாக்கும். இந்த வாரம் யாருக்கும் கடன் குடுக்காதீங்க. திரும்பி வராது! ஷேர், லாட்டரி எதுவும் வேணாம். குறிப்பா பெண்கள் சீட்டுக் கட்டற வேலை எதும் இப்ப வெச்சிக்காதீங்க. ஒரு நீண்ட தூரப் பிரயாணம் இருக்கும். ஆனா உபயோகம் எதுவும் இருக்காது. சினிமாத் துறைல இருக்கறவங்களுக்கு இது கொஞ்சம் தேக்கமான காலகட்டம். புதிய வாய்ப்புகளுக்கு யாராவது முட்டுக்கட்டை போடுவாங்க. எதுக்கும் ஒரு நடை திருப்பதிக்குப் போயிட்டு வந்தீங்கன்னா நல்லது!



**துலாம் ராசிக்காரரான எழுத்தாளர் புஷ்பா தங்கதுரைக்குப் புகழ் கூடும் வாரம் இது! வாரக் கடைசில ஏதோ இன்ப அதிர்ச்சி இருக்கும்னு கிரகங்கள் சொல்லுது!**




ஒரு டூயட்டாவது வேண்டும், நகைச் சுவை என்ற பெயரில் சில அசிங்கங் களாவது வேண்டும். 'பெப்', 'ரிலீஃப்' என்ற சாகச வார்த்தைகளில் நுழைக்கப்படும் பாமரத்தனங்கள் வேண்டும் என்றெல்லாம் எதிர்ப்பார்ப்போர் இந்தப் படத்தை மிஸ் செய்து விடுவது உத்தமம்.

வெடிகுண்டு பெல்ட்டுக்கு பதிலாக கேமரா ஃப்ளாஷ், பிரதமருக்கு பதிலாக முதல்வர் - என்றாலும் ராஜீவ் காந்தி கொலை வழக்குதான் இன்ஸ்பிரேஷன் என்பது தெளிவாகத் தெரிகிறது. ஆனாலும் (நல்லவேளையாக) தீவிரவாதம் அது இது என்றெல்லாம் தெரிந்த பாதையில் போகாமல் மாற்றம் காட்டியிருக்கிறார்கள்.

பொதுக்கூட்ட மேடையில் உத்தம முதல்வர் குண்டு வெடிப்பில் இறந்து விட, அங்கே சிக்குகிறது ஒரு கேமரா. அதிலுள்ள புகைப்படங்களில் கேமராவுடன் ஒரு பெண். பத்திரிகை நிருபராகத் தன்னைக் காட்டிக் கொண்ட அவளுக்கும் தங்களுக் கும் எந்த சம்பந்தமுமில்லை என்று பத்திரிகை நிர்வாகம் கைவிரிக்க, அவளை வலைவீசித் தேடுகிறது போலீஸ். எட்டு மாதங்களாகியும் பலன் பூஜ்யம். டெல்லி யிலிருந்து சிறப்புப் புலனாய்வுக் குழு வரவழைக்கப்படுகிறது. அதன் தலைவராக மம்முட்டி.

புகைப்படப் பெண்ணைப் பற்றியும், இலக்கு முதல்வரா என்பது பற்றியும் மாறுபட்ட கோணத்தில் சிந்திக்கும் மம்முட்டிக்குச் சில விவரங்கள் புலப்பட, அவரது தொடர் வேட்டையில் ஆச்சரிய மான உண்மைகள் கொஞ்சம் கொஞ்சமாக விரிந்து கொண்டு போகின்றன.

துப்பறியும் கதையில் எந்த ஓட்டையும் இல்லாமல் முடிப்பது கொஞ்சம் கஷ்டம். முடித்துக் காட்டியிருக்கிறார் இயக்குனர் ஷாஜி கைலாஷ். (கதை - சாமி.)

அற்புதமாகவும், அனாயாசமாகவும் நடிக்கும் மம்முட்டிக்கு அப்பாவாக வரும் பிரபல ஜோதிடர் பாத்திரம் கதைக்குத் தேவையில்லை என்றாலும் அதிலும் ஓர் எஃபெக்ட் கொடுக்கிறார் திலகன்.

படத்துக்கு ஒரு திருஷ்டி வேண்டாமா? இசை! அந்தக் கால விட்டலாச்சார்யா படங்களில் வருவதைப் போன்ற அம்புலி மாமாத்தனம்!

அப்படி இப்படி என்று அலைபாயாமல் ஒவ்வொரு காட்சியிலும் கதை ஓரடியாவது முன்னே செல்வதைப் பார்க்கும்போது, இதுபோன்ற படங்கள் மலையாளத்தில் எடுக்கப்பட்டு, டப்பிங் செய்துதான் வர வேண்டுமா, தமிழிலும் ஒரிஜினலாகவே வரக்கூடாதா என்ற ஆதங்கம் எழுகிறது.

— ஜி

**Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi**
**Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.**
**Telephones : Editorial : 2345624; Circulation Manager : 2345623; Subscription and Advertisement : 2345622; Chief Administrative Officer : 2345621.**
**Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1600/- (Air Mail)**
**Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 800/- (Air Mail)**

கல்கி 16.8.98



# கண்ணான கண் அல்லவோ!

கல்கி + தி ஐ ஃபவுண்டேஷன் இணைந்து வழங்கும்

இலவச இணைப்பு!

# கண்ணான கண் அல்லவோ!

## ஒரு சின்ன அறிமுகம் :

கண் டாக்டரிடம் ஒருவர் போனார். 'டாக்டர், எனக்கு எண், எழுத்து எதையும் சரியாகப் படிக்க முடிவதில்லை, செக் பண்ணணும்' என்றார். டாக்டர் அவரைத் தம் மருத்துவமனைக்கு வெளியே அழைத்துக் கொண்டு போனார். 'அதோ அங்கே இருக்கிற காரின் நெம்பர் பிளேட்டைப் பார்த்துப் படியுங்கள்! ' என்றார்.

'கார் எங்கே?' என்று கேட்டாராம் வந்தவர்!

கண்களை அலட்சியப்படுத்தினால் இப்படித்தான் ஆகும் என்று எல்லாரும் தெரிந்து கொள்ள, ஒரு கண் டாக்டரே அடித்த ஜோக் ஆக இது இருக்கலாம்.

நாம் அப்படி அலட்சியமாக இருந்துவிடக் கூடாது என்பதற்காகத்தான் இந்த இலவச இணைப்பு. விளக்கமாகச் சொல்லுகிறார் டாக்டர் டி. ராமமூர்த்தி.

டாக்டர் ராமமூர்த்தி பாண்டிச்சேரி **JIPMER**ல் பட்டம் பெற்று, பிறகு, தில்லி **AIIMS** - லும்

*அமெரிக்காவிலுள்ள பாஸ்டனில் விட்ரியோ ரெடினல் அறுவைச் சிகிச்சையின் தந்தை எனப் புகழப்படும் டாக்டர் சார்லஸ் ஷீப்பன்ஸிடமும் நேரடிப் பயிற்சி பெற்றவர். பிறகு யு.கே, ஜெர்மனி, நெதர்லாந்து, ஸ்விட்சர்லாந்து, ஹாங்காங், சிங்கப்பூர் ஆகிய நகரங்களில் உள்ள கண் மருத்துவமனைகளில் பயிற்சி பெற்றவர். சென்னை சங்கர நேத்ராலயாவில் பணிபுரிந்து, இப்போது கோவையில் த ஐ ஃபவுண்டேஷன் என்ற முழுமையான கண் மருத்துவமனையைத் தம் மனைவியும் கண் மருத்துவத்தில் தேர்ந்தவருமான டாக்டர் சித்ரா ராமமூர்த்தியுடன் இணைந்து நடத்தி வருகிறார்.*



• டாக்டர் ராமமூர்த்தி



• டாக்டர் சித்ரா ராமமூர்த்தி

*இனி, டாக்டரைக் கேட்போம்!*

● டாக்டர், பிறந்த குழந்தைக்கு உடனே கண் தெரியுமா?

பிறந்தவுடன், ஒரு மீட்டர் தூரத்துக்குத் தான் குழந்தைக்குப் பார்வை தெரியும். கண்ணை உபயோகிக்கத் தொடங்கிய பிறகே சக்தி கூடுகிறது. முதல் ஆறு மாதங் களில், குழந்தையின் கண்கள் நல்ல

வளர்ச்சி பெற வேண்டும். இது முக்கிய மும் கூட. ஆறு மாதக் குழந்தையிடம் எந்தப் பொருளைக் காண்பித்தாலும் அதைப் பிடிக்கக் கையை நீட்டும். பென்சிலால் கண்ணைக் குத்துகிற மாதிரி பாசாங்கு பண்ணினால், உடனே கண்களை மூடிக் கொள்ளும்! இதை menace reflex என்பார்கள்.

குழந்தை பிறந்தவுடன், அதற்குப் பார்வை இருக்கிறதா என்று பார்க்க முதலில் டார்ச் ஒளியை அதன் கண்களில் பாய்ச்சுவார்கள் – வலமும் இடமுமாக. அதன் விழி அந்த ஒளி வரும் திசையை நோக்கி நகர்கிறதா என்று பார்ப்பார்கள். ஒரு சின்ன டிரம் மாதிரி பண்ணி, பட்டையாகக் கறுப்பும் வெளுப்புமாக அதில் பெயின்ட் பண்ணுவார்கள். அதைக் குழந்தையின் கண்களுக்கு நேராகப் பிடித்துக் கொண்டு சுழற்றுவார்கள். குழந்தையின் கண் வெள்ளைக் கோட்டுக்கும், கறுப்புக் கோட்டுக்குமாக மாறி மாறிப் போய் வருகிறதா என்று கவனிப்பார்கள்.

குழந்தைக்குப் பார்வை சரியாக இருக்கிறதா என்று இவை போன்ற பரிசோதனைகள் சொல்லிவிடும்!

**● மாறுகண் இருந்தால் அதைச் சரி பண்ணிவிட முடியுமா?**

இரண்டு விழிகளும் சேர்ந்தாற்போல் பார்ப்பது மிக அவசியம். அப்போதுதான் மிகச் சரியான முப்பரிமாணம் தெரியும். குழந்தைக்கு மூன்று வயதுதான் ஆகிறது என்று அப்படியே விட்டு விடுவார்கள். கொஞ்சம் வருஷங்கள் கழித்து டாக்டரிடம் வருவார்கள். இது தவறு. இரண்டே மாதங்கள் ஆன குழந்தைக்குக் கூட மாறுகண் ஆபரேஷன் செய்யலாம். இரண்டு கண்ணும் ஒருங்கிணைந்து பார்க்கச் செய்வது அவசியம். மாறுகண் இருந்தால் அதிர்ஷ்டம் என்று குழந்

தையை அப்படியே விட்டு விடுவது தவறு. வளர்ந்த பிறகு அந்தக் குறைபாடு பெரிதாகத் தோன்றும்.

● **அப்படியானால் எல்லா மாறு கண்ணுக்குமே ஆபரேஷன்தான் தீர்வா?**

அப்படி அல்ல. கண்ணாடி பவர் இருந்து சரிபண்ணாவிட்டாலும் வரலாம். Refraction அக்யுரேட் ஆக இருந்து பார்க்கும்போதுதான் ஒரு பொருள் முழுமையாகத் தெரியும். கண்ணில் இருக்கும் தசைகளை இயங்காமல் செய்த பிறகு, பார்வையில் குறைபாடு இருக்கிறதா என்று பார்ப்போம். அப்படி இருந்தால், அதைச் சரிசெய்து விட்டால் போதும். ஆனால் துல்லியமாகக் கண்ணைப் பரிசோதிப்பது மிக முக்கியம். காடராக்ட் இருக்கிறதா, இல்லை ரெடினா பிரச்னை ஏதாவது இருக்கிறதா என்று பார்த்து விட வேண்டும். ஆக, ஸ்க்வின்ட் ஐ எனப்படும்



மாறுகண் வர எது காரணமாக இருக்கிறது என்று கண்டறிந்து, அதைக் குணப்படுத்தி விட்டால் போதும்.

சாதாரண எக்சர்சைஸ் மூலமாகவும் மாறு கண்ணைச் சரிப்படுத்தி விட முடியும். அதற்கு ஒரு கருவி இருக்கிறது. SYNOPTOPHORE என்று இதைச் சொல்லுவார்கள். பத்து நாள் பயிற்சியில் இதைச் செய்து முடித்து விடலாம்.

சில மாறுகண் கேசுகளில், கண்ணாடியில் 'ப்ரிசம்' வைத்துச் சரிபண்ணிவிட முடியும். அறுவைச் சிகிச்சையே தேவை இல்லை!

அறுவைச் சிகிச்சைகளின் போது அனஸ்தீசியா கொடுத்து முழுதுமாக மரத்துப் போகச் செய்வது போல, இந்தக் கண் பரிசோதனையின் போதும் அனஸ்தீசியா கொடுத்து, கண் விழிகளை அசையாமல் செய்து, பரிசோதித்தால் மாறுகண் எதனால் வந்தது என்று தெரியும். இது தவிர Prism Bar Testing, Diplobia charting, Hess Screen பரிசோதனை எல்லாம் இருக்கின்றன.

இந்தப் பரிசோதனைகளுக்குப் பிறகு, ஆபரேஷன் தேவையில்லை என்றால், எந்தக் குறைபாடு இருக்கிறதோ அதற்கு மட்டும் சிகிச்சை அளித்தால் போதும். மாறுகண் போய்ச் சரியாகி விடும்.

## காடராக்ட் :

தலைமுடி நரைப்பது போல, கண் விழித் திரையில் படலம் போல் வருவது தான் காடராக்ட். இது வயது காரணமாக ஏற்படும் குறைபாடு.

இப்போதெல்லாம் காடராக்ட் (கண் புரை நோய்) அறுவைச் சிகிச்சை செய்து கொண்டால், அன்றே மருத்துவமனையிலிருந்து வீடு திரும்பி விடலாம்.

● **சில கண் மருத்துவர்கள், புரை பழுக்கவில்லை. இன்னும் கொஞ்ச நாள் கழித்து அறுவைச் சிகிச்சை செய்யலாம் என்கிறார்களே, இது சரியா?**

இது சரி அல்ல. எப்போது கண்ணில் புரை தோன்றி விட்டதோ, அப்போதே ஆபரேஷன் செய்து விடலாம். ஆனால் கண் புரையினால் ஏதும் பாதிப்பு இல்லை என்கிற நபர்களுக்கு வேண்டுமானால் ஆபரேஷனைத் தள்ளிப் போடலாம். ஒரு பாட்டியம்மாள் இருக்கிறார். வயது 70 ஆகிறது. அவருக்குக் கண்ணில் புரை வந்திருக்கிறது. ஆனால் அவருக்கு அதனால் தொந்தரவு எதுவும் இல்லை என்கிற போது, ஆபரேஷனைத் தள்ளிப் போடுவதில் தவறில்லை. நோயாளியின் பார்வைத் திறனைப் பொறுத்துத்தான் இதை நிர்ணயிக்க வேண்டும்.



* காடராக்ட் அறுவை சிகிச்சை

இதுவே ஒரு 40 வயது டிரைவர் கண்ணுக்கு வந்து விட்டால்? அவரால் ஆபரேஷன் செய்து கொள்ளாமல் வண்டி ஓட்ட முடியாது அல்லவா? இவருக்கு இன்னும் பழுக்கவில்லை, பழுத்த பிறகு பண்ணிக் கொள்ளலாம் என்று ஒத்திப் போட முடியாது அல்லவா?




காடராக்ட் அறுவைச் சிகிச்சையை மொத்தம் இருபதே நிமிடத்தில் செய்து முடித்து, இன்ட்ரா ஆக்யுலர் லென்ஸ் பொருத்தி விடலாம். பிறகு நோயாளி வீட்டுக்குப் போய் விடலாம்.

ஃபேகோ மெல்சிஃபிகேஷன் முறை புதிதாகக் கையாளப்படுகிற நவீன சிகிச்சை முறை. கண்களில் மிகச் சிறிய துவாரம் செய்து அதன் வழியாகப் புரையை, அல்ட்ரா சவுண்ட் ஒலி அதிர்வுகளால் அகற்றி விட முடியும். (ஒரு செகண்டுக்கு 40,000 தடவைகள் டைடானியம் முனையுள்ள ஊசி துளைத்துக் கூழாக்கி, திரவமாக்கியபின், வெளியே உறிஞ்சி எடுக்கப்படுகிறது!) இதில் தையல் கிடையாது. எனவே காயம் விரைவில் ஆறிவிடும்.

நான் நோயாளியிடம், 'வழக்கம் போலச் சாப்பிட்டு வாங்க. ஷேவ் பண்ணிக் குளிச்சிட்டு வாங்க' என்று சொல்லுவேன். அறுவைச் சிகிச்சை முடிந்து மத்தியானம் லஞ்ச் சாப்பிட வீட்டுக்குப் போய் விடலாம்!

வெயிட் தூக்கலாம். எந்தப் பக்கம் வேண்டுமானாலும் படுக்கலாம். ஆபீசுக்கு, மறுநாளே போய் விடலாம். போய் விட்டு வந்து கண்ணாடிக்கு செக்-அப் செய்து கொண்டு பிரிஸ்கிருப்ஷனை வாங்கிக் கொண்டு போகலாம்!

பிறகு ஒரு வாரம் கழித்து வந்தால் போதும்.

தலைக்குத் தண்ணீர் விட்டுக் கொள்ளுவது ஒரு வாரம் கழித்துத்தான். ஏன் என்றால் குளிக்கும் தண்ணீர் ஸ்டெரைல் வாட்டர் அல்லவே? அதனால் இன்ஃபெக்‌ஷன் ஆகிவிடக் கூடாது அல்லவா? அதனாலேயே கண்ணில் தண்ணீரை விட்டுக் கொண்டு கழுவாதீர்கள் என்றும் சொல்லுகிறோம். நாலைந்து தடவை ஒரு நாளைக்குச் சொட்டு மருந்து விட்டுக் கொள்ள வேண்டும்.

காடராக்டே வராமல் தடுக்க முடியுமா என்று இப்போது பல ஆராய்ச்சிகள் நடந்து வருகின்றன.

- **குழந்தையாய் இருக்கும்போதே சிலருக்கு காடராக்ட் (கண் புரை நோய்) வந்து விடுமாமே?**

எனக்குத் தெரிந்த ஒரு குடும்பத்தில் நாலு குழந்தைகளுக்குமே அப்படி இருந்திருக்கிறது. பிறந்த 20 நாளிலேயே குழந்தையைக் கொண்டு வந்தார்கள். விழியில் வெண்மையாகப் படலம் போல் இருந்தது. இதை 'கஞ்சனிட்டல் காடராக்ட்' பிறவிக் குறைபாடு - என்பார்கள். அப்பாவிடமிருந்தோ, அம்மாவிடமிருந்தோ வரலாம்.








**● க்ளகோமா என்கிறார்களே, அது என்ன விதமான கண் நோய்? அதை ஆரம்பத்தில் கவனிக்காமல் விட்டு விட்டால் என்ன ஆகும்?**

கண் அழுத்த நோய்தான் க்ளகோமா. நம் உடம்பில் இரத்த அழுத்தம் கூடுதலாகவோ, குறைவாகவோ இருந்தால் எப்படி பிரச்னைகள் உண்டாகிறதோ, அது போலத்தான். கண்ணில் உள்ள நீரின் அழுத்தம் அதிகமாகும் போது கண் பார்வை பாதிக்கப்படுகிறது. உலகம் முழுதும் சுமார் இரண்டு சதவிகித மக்கள் க்ளகோமா நோயால் பார்வை இழப்பதாக ஒரு புள்ளி விவரம் சொல்லுகிறது. காடராக்ட் (கண்புரை) போல இல்லாமல், இந்த நோயால் ஏற்படும் பார்வை இழப்பு நிரந்தரமானது. ஆனால் இதை ஆரம்பத்திலேயே கண்டறிந்து சிகிச்சை செய்தால் பார்வை இழப்பைத் தவிர்க்க முடியும்.

கண்ணின் உள்ளே 'அக்வஸ்' என்னும்

திரவம் நிரம்பியிருக்கிறது. இது கண்ணிலிருக்கிற பாப்பா, லென்ஸ் மற்றும் கருவிழி ஆகியவற்றுக்குச் சக்தி அளிக்கிறது. இந்த நிறமற்ற திரவம் கண்ணுக்கு உள்ளே தொடர்ந்து சுரந்து கொண்டிருக்கும். பிறகு ஒரு சிறு சல்லடை போன்ற வழி மூலம் வெளியேறுகிறது. இந்தத் திரவம் சுரப்பதும், வெளியேறுவதும் சரிசமமாக இருந்தால்தான் கண் அழுத்தம் சரியான அளவு இருக்கும்.

கண்ணில் இந்தத் திரவத்தின் அழுத்தம் அதிமாகி, கண்ணில் இருக்கிற நரம்பை (ஆப்டிக் நெர்வ்) பாதிக்கும் போது, அதை 'க்ளகோமா' என்கிறோம். கண்களையும் மூளையையும் இணைக்கும் நரம்புகள் கோடிக்கணக்காக இருக்கின்றன. படிப்படியாக இந்த நரம்புகளுக்குப் பாதிப்பு ஏற்படும் போது, நேர்ப் பார்வையும், பக்கவாட்டுப் பார்வையும் நிரந்தரமாகப் பாதிக்கப்படுகிறது.



# எந்த வயதினருக்கும்..!

● க்ளகோமா யாருக்கு வரும், எந்த வயதில் வரும்? எப்படிக் கண்டுபிடிக்கலாம்?

க்ளகோமா எந்த வயதினருக்கும் வரலாம். ஆனால் குறிப்பாக –

40 வயதுக்கு மேற்பட்டவர்கள்;

உறவினரில் க்ளகோமா நோய் உள்ளவர்கள்;

சர்க்கரை வியாதி எனப்படும் நீரிழிவு நோய் உள்ளவர்கள்;

அதிகக் கிட்டப்பார்வை (ஷார்ட் சைட்) உள்ளவர்கள்

ஆகியவர்களுக்கு 'க்ளகோமா' வருவதற்கான சாத்தியக்கூறுகள் அதிகம்.

பின்வரும் நான்கு முக்கியமான அம்சங்களைச் சோதனை செய்வதன் மூலம் 'க்ளகோமா'வைக் கண்டறியலாம் :

**1. கண் அழுத்தம் :**

இதை சியாட்ஸ் டோனோமீட்டர் (Schiotz Tono Meter) அல்லது அப்ளனேஷன் டோனோ மீட்டர் என்னும் கருவிகள் மூலம் துல்லியமாக அறியலாம். கண் நீர் அழுத்தம் 9 முதல் 21 மி.மீ. மெர்க்குரி வரை சரியானதாகக் கருதப்படுகிறது.

**2. ஆங்கிள் ஸ்டடீஸ் :**

கண்ணில் கருவிழியும் (ஐரிஸ்) விழி வெண்படலமும் (கார்னியா) சந்திக்கும் இடத்தை ஆங்கிள் என்கிறோம். இந்த ஆங்கிள் சிறியதாக இருந்தால் க்ளகோமா வர சாத்தியக்கூறுகள் அதிகம். ஆங்கிள் சரியாக இருக்கிறதா என்று அறிய கோனியோஸ்கோபி எனும் பரிசோதனை செய்ய வேண்டும்.

**3. ஆப்டிக் நெர்வ் (பார்வை நரம்பு) சோதனை :**

கண் பார்வை நரம்பைப் பரிசோதனை செய்வது மிக முக்கியம். ஆஃப்தால்மாஸ்கோப் கருவி மூலம் இதை அறியலாம்.

**4. சுற்றுப் பார்வை (Field of Vision) சோதனை :**

கணிப்பொறியுடன் இயங்கும் பெரிமீட்டர் துணையுடன், நரம்பு எந்த அளவு பாதிக்கப்பட்டுள்ளது என்று துல்லியமாக அறிந்து, அதற்கேற்ப சிகிச்சை அளிக்

கலாம்.

**● க்ளகோமாவுக்கு என்ன சிகிச்சை?**

அக்வஸ் திரவம் அதிகமாகச் சுரக்காமல் இருக்கவும், திரவம் வெளியேறும் வேகத்தை அதிகரிக்கவும் மருந்துகள் கொடுத்து கண் அழுத்தத்தைச் சரியான அளவுக்குக் கொண்டு வர இயலும்.

அக்வஸ் திரவம் வெளியேறுவதற்கான மாற்றுப் பாதை உருவாக்க, லேசர் சிகிச்சை செய்யலாம்.



• கார்னியல் டோபோகிராஃபி

மேற்படி இரண்டு முறைகளும் பயன்படாது என்று கருதும் பட்சத்தில், அறுவைச் சிகிச்சை கையாளப்படுகிறது. பிறவியிலேயே உள்ள க்ளகோமாவுக்கும் இந்த முறையே பின்பற்றப்படுகிறது.

**● ரெடினாவுக்கு என்னென்ன வகையில் பழுது ஏற்படும்? சிகிச்சை என்ன,**

டாக்டர்?

மிக முக்கியமானது ரெடினல் டிடாச்மென்ட். அதாவது ரெடினா இடம் பெயர்ந்து விடும் நிலை. அதிகமாக மைனஸ் பவர் இருக்கிறவர்களுக்கு, ரெடினாவின் பலகீனமான சில பகுதிகள் இருக்கும். கண்ணில் உள்ள பாப்பாவை விரிவடையச் செய்து (டயலேட் செய்து) பரிசோதிப்போம். படுக்க வைத்துக் கண்ணைப் பரிசோதித்தால்தான் பாதிப்பு எவ்வளவு என்று முழுமையாகத் தெரியும். ரெடினாவில் உள்ள துளைகள் மற்றும் அதன் தேய்மானம் அப்போதுதான் புலப்படும்.

**● ரெடினா ஏன் இடம்பெயர்கிறது?**

மேற்படி துளைகள் வழியே விட்ரியஸ் லிக்விட் வெளியேறி, ரெடினாவை அழுத்தி, தள்ளி விடுகிறது. அதன் இடத்திலிருந்து நகர்த்தி விட்டுவிடுகிறது!

அதிக மைனஸ் பவர் இருப்பவர்களுக்கு வரும் என்பது இருக்கட்டும். ரெடினல் டிடாச்மென்ட், குடும்பத்தில் யாருக்காவது இருந்தால் கூட வரலாம்.

திடீரென்று எதிரே கருமையாகத் தெரிந்தாலோ, மின்னல் மாதிரி பளீர் பளீர் என்று வெளிச்சம் தோன்றினாலோ, ரெடினல் டிடாச்மென்ட் ஆக வாய்ப்புகள் அதிகம்.

லேசர் மூலமாகவோ, கிரையோ சிகிச்சை மூலமாகவோ பலகீனமான ரெடினா பகுதிகளை கெட்டிப்படுத்தி விடுவோம். இல்லை என்றால் அறுவைச் சிகிச்சை மூலம் குணப்படுத்தி விடுவோம். சுமார் 3 மணி நேரம் அறுவைச் சிகிச்சை. ஒரு மாத ஓய்வு தேவை – சிகிச்சைக்குப் பிறகு.

**● நீரிழிவு நோய் உள்ளவர்களுக்கும் கண் பார்வை பாதிக்கப்படுமாமே?**

**நீரிழிவு நோய்க்கும் கண்ணுக்கும் என்ன தொடர்பு?**

இதை டயபடிக் ரெடினோபதி என்பார்கள். விழித்திரையில் உள்ள சிறு இரத்தக் குழாய்கள் பாதிக்கப்படும் நிலைதான் இது. இரத்தக் குழாய்களின் உட்புறச் சுவர்கள் பலமிழந்து, சிறு சிறு பைகளாத் தெரியும். இந்த இரத்தக் குழாய்கள் பலமிழப்பதால், அதன் சுவர்கள் வழியே திரவம் வெளியேறிச் சுற்றுப்புறத்தை வீக்கம் அடையச் செய்கிறது. இதனால் பார்வை மங்கலாகிறது. காரணம், விழித்திரையின் மையப் பகுதியான மேக்குலாவில் (Macula) இந்த மாற்றங்கள் நிகழ்கின்றன. இரத்தக் குழாய்கள் வெடித்து, கண்ணுக்குள் இரத்தக் கசிவு ஏற்பட்டு, பார்வை முற்றிலும் இழக்க நேரிடும். இந்த இரத்தக் கசிவு தானாகவே சரியாகலாம்; அல்லது அப்படியே இருக்கலாம். சில வேளைகளில், திரும்பத் திரும்ப இரத்த






ஒழுக்கு ஏற்படுவதன் மூலம் விழித்திரை சுருக்கி இழுக்கப்பட்டு, அது தனித்து வரவும் வாய்ப்பு உண்டு.

எல்லா நீரிழிவு நோயாளிகளுக்கும் விழித்திரை நோய் இருக்க வேண்டும் என்பதில்லை. கண் மருத்துவரின் விரிவான விழித்திரைப் பரிசோதனை மூலமே திட்டவட்டமாக விழித்திரை பாதிக்கப் பட்டுள்ளதா என்பதைத் தெரிந்து கொள்ள முடியும். எனவே நீரிழிவு நோயாளிகள் ஆறு மாதங் களுக்கு ஒருமுறையாவது கண்களைப் பரிசோதித் துக் கொள்ள வேண்டும்.

விழித்திரை பாதிக்கப்பட்ட நோயாளிக்கு ஃபோட்டோ கோயாகுலேஷன் என்னும் சிகிச்சை அளிக்கப்படுகிறது. இதில் பழுதுபட்ட விழித்திரை யின் பகுதிகள் மட்டும் பொசுக்கப்படுகின்றன. இத னால் விழித்திரை மேலும் பழுதாகாமல், மீண்டும் பார்வை குறையாமல் பாதுகாக்கப்படுகிறது.

இரத்தக் கசிவு ஏற்பட்டு, பார்வை பாதிக்கப் படும் வரை நோயாளிக்கு, இந்தப பிரச்னை தமக்கு இருப்பதே தெரியாது! அதனால்தான் அவ்வப்

போது பரிசோதனை செய்து கொள்ளுவது அவசியம் ஆகிறது. ஏனென்றால் டயபடிக் ரெடினோபதி வந்து பாதிப்பு ஏற்பட்டால், இழந்த பார்வை இழந்ததுதான். மீட்க முடியாது!




மாக. இது தானாகவே பழைய நிலைமைக்குப் போய் விடக்கூடிய கோளாறுதான். தானாகவே பார்வை சரியாகிவிடவும் செய்யும்! ஆனால் இது அடிக்கடி வரவும்கூடும். அதற்காக நாங்கள் Fluorescin Angiography செய்து பார்த்து, எந்த இடத்திலிருந்து திரவம் வெளியேறுகிறது என்று கண்டு கொண்டு லேசர் சிகிச்சை அளிக்கிறோம். இதில் மருந்து - மாத்திரைக்கு எல்லாம் இடமே இல்லை!

● **சென்ட்ரல் சீரஸ் ரெடினோபதி என்கிறார்களே அது என்ன?**

மேக்குலா எனும் பகுதிக்கு வரும் நோய்தான் சென்ட்ரல் சீரஸ் ரெடினோபதி. 20களிலும், 30களிலும் உள்ளவர்களுக்கே இது வரும். மேக்குலா பகுதியில் திரவம் கசியத் தொடங்கும். திடீரென்று பார்வை குன்றிப் போகும். அதிர்ஷ்டவச

இன்னொரு வகை இதில் உண்டு. இதை வயது காரணமானதாகச் சொல்லு

வார்கள். அதாவது Age Related Macula Disease - ARMD. மேக்குலாவில் உள்ள செல்கள் வளர்ச்சி அடையாமல் உயிரிழந்து போகிற போது உண்டாவதுதான் ARMD. சிலருக்கு அபூர்வமாக, இளமையிலேயே இந் நோய் வந்தாலும், குறிப்பாக 50 வயதில்தான் இது தாக்கும். மேக்குலா செல்கள் முழு வளர்ச்சி அடையும் முன்பே உயிரிழப்பதும், புது இரத்தக் குழாய்கள் வழியே இரத்தமோ, திரவமோ கசிவதும் சற்று சீரியஸான பிரச்னைகள் தாம். இது பார்வையையே போக்கி விடும். ஃப்ளுரோசின் ஆஞ்சியோகிராஃபி, லேசர் போட்டோ கோயாகுலேஷன் எல்லாம் செய்த பிறகும் கூட, இந்த நோயின் வளர்ச்சி குறையாது போய்விடும். இதற்காக விரிவான ஆராய்ச்சிகளும், பரிசோதனைகளும் இப்போது நடைபெற்று வருகின்றன.

ஒரே ஓர் ஆறுதல் என்னவென்றால், முன்பு இதுபோன்ற நோய்களுக்குச் சிகிச்சையே இல்லாமல் இருந்தது. இப்போது நவீன சிகிச்சை முறைகளும், கருவிகளும் வந்து விட்டன. குடும்ப டாக்டரும், கண் மருத்துவரும் இவை பற்றி எடுத்துச் சொல்லி, ஓரளவு விழிப்புணர்வும் வந்திருக்கிறது!

● **கண்ணாடி போட்டுக் கொள்ளாமலே மைனஸ் அல்லது ப்ளஸ் பவர் குறைபாடுகளைத் தவிர்க்க வழி இருக்கிறதாமே?**

இதை 'லாசிக்' சிகிச்சை என்கிறோம். லாசிக் கருவி மூலம் மைனஸ் 1 முதல் 25 வரை உள்ள கிட்டப் பார்வை, +1 முதல் 8 வரை உள்ள தூரப் பார்வையைச் சரிப்படுத்த முடியும். சிலின்ட்ரிகல் பவரையும் இதை வைத்துச் சரியாக்க முடியும்.

இங்கே எங்கள் மருத்துவமனையிலேயே, புதன் – வியாழக் கிழமைகளில்

இந்தச் சிகிச்சை அளிக்கிறோம். இந்த லாசிக் சிகிச்சை செய்ய, இரண்டு கண்களுக்குமாகச் சேர்த்து ஐந்து நிமிடங்களே ஆகிறது. ஆனால் அதற்கு முன்பாகக் கண்கள் சீராகப் பரிசோதிக்கப்படுகின்றன. பரிசோதனைகள் இரண்டு மணி நேரத்தில் முடிந்து விடும். 'லாசிக்' சிகிச்சை முடிந்த அன்றே நோயாளி வீடு திரும்பலாம். சிகிச்சை முடிந்த மறு தினம் கண்களை ஒருமுறை பரிசோதனை செய்வது அவசியம். (வெளியிடங்களில் இருந்து வருகிறவர்கள், இதற்காக மருத்துவமனையிலேயே தங்கிக் கொள்ளலாம்.) 'லாசிக்' சிகிச்சை முடிந்து ஒரு வாரம் கழித்தும், பிறகு ஒரு மாதம் கழித்தும் வந்து கண்களைப் பரிசோதனை செய்து கொள்ளுவது நல்லது.

கான்டாக்ட் லென்ஸ் அணிபவராக இருந்தால், சிகிச்சை பெறுவதற்கு இரண்டு வாரங்களுக்கு முன்பே அதை அணி



வதைத் தவிர்க்க வேண்டும். Soft காண்டாக்ட் லென்ஸ் அணிபவர்கள், ஒரு வாரத்துக்கு முன்பாவது லென்ஸ் அணிவதை நிறுத்தி விட வேண்டும்.

'லாசிக்' சிகிச்சை முடிந்த பிறகு, கண்களை ஒருமுறை பரிசோதனை செய்ய வேண்டும். பிறகு கண்களை ஒரு சிறு 'கப்' வைத்து மூடி விடுவோம். நோயாளி கண்களைத் தேய்க்காமல் இருப்பதற்காகப் போடப்படுகிறது. அடுத்த நாளே, நோயாளி இதைத் தானாகவே அகற்றி விடலாம்.

சிகிச்சை முடிந்தவுடன் கண்களில் சிறிது வலி, எரிச்சல், நீர் வருதல் ஆகியவை இருக்கலாம். இவை அடுத்த நாள் காலையில் சரியாகி விடும்.

பெரும்பாலும், நோயாளிகள் சிகிச்சை முடிந்த மறு தினமே தங்கள் அன்றாட வேலைகளைச் செய்யத் தொடங்கலாம். ஆனால் கண்களைத் தேய்க்கக் கூடாது. கண்களில் நேரடியாகத் தண்ணீர் விடுவதும், குறைந்தது ஒரு வாரத்துக்குக் கூடாது!

இதுவரை எங்கள் மருத்துவமனையில் மட்டும் ஆயிரம் பேருக்கு மேல் 'லாசிக்' சிகிச்சை எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். மைக்ரோ-கெரடோம் ஹான்ஸடோம், எக்சைமர் லேசர் கருவியுடன் இணைந்திருக்கிறது. இத்தனை வசதியோடு ஒருங்கிணைந்த கருவி, இந்தியாவிலேயே முதன் முறையாக, எங்கள் ஐ ஃபவுண்டேஷன் மருத்துவமனையில் உள்ளது என்பது எங்கள் பெருமைக்குரிய தனிச்சிறப்பு!

● **கண் பாதுகாப்புக்கான குறிப்புகள், பொதுவாக வரும் கண் நோய்கள் பற்றிச் சொல்லுங்கள்?**

எல்லாருக்கும் தெரிந்தது 'மெட்ராஸ் ஐ' எனப்படும் கஞ்சக்டிவைடிஸ். இதை வைரல் கஞ்சக்டிவைடிஸ் என்பார்கள். ஒருத்தரிடமிருந்து இன்னொருத்தருக்கு

எளிதில் தொற்றிக் கொள்ளும் வகை இது. அதுமட்டுமல்ல. 'எபிடமிக்' என்பார்களே, அது மாதிரி ஒட்டுமொத்தமாக ஊர் முழுக்கப் பரவிவிடும்.

தில்லியில் உள்ளவர்களுக்கும், பம்பாய் அல்லது கல்கத்தாவில் உள்ளவர்களுக்கும் இந்த 'மெட்ராஸ் ஐ' வரும். ஏன் இதற்கு மெட்ராஸ் ஐ என்று பெயர் வைக்க வேண்டும் என்று கேட்கலாம். இந்த நோய்க்குக் காரணமான வைரல் கிருமியைக் கண்டறிந்தது (isolated) மெட்ராஸில் தான். அதனால் தான் இந்த வகை வைரல் கஞ்சக்டிவைடிஸுக்கு 'மெட்ராஸ் ஐ' என்று பெயர் சூட்டினார்கள்!


• காண்டாக்ட் லென்ஸ் எப்படி அணிவது என்று விளக்கப்படுகிறது!

வந்தது போலவே, தானாக நாலைந்து நாளில் இது போய்விடும். ஆனால் கண் சிவப்பும், உறுத்தலும், நீர் வடிதலும் இருப்பதால், இதற்குச் சொட்டு மருந்தும், மாத்




திரைகளும் கொடுத்து நோயாளி அதிக அவஸ்தைப்படாமல் டாக்டர் பார்த்துக் கொள்கிறார்.

இந்த நோய் உள்ளவர்கள் கூடுமான வரை வெளியே போய் இதை இன்னும் பரவ விடாமல், தாங்களாகவே கட்டாய ஓய்வு எடுத்துக் கொண்டு, வீட்டுக்குள் இருப்பது நல்லது. கறுப்புக் கண்ணாடியை மாட்டிக் கொண்டு கூட வெளியே போகக் கூடாது!

இன்னொரு வகை பாக்டீரியல் கஞ்சக்டிவைடிஸ். இதற்கு அவசியம் மருந்துகளும், சொட்டு மருந்தும் தேவை. ஒரு நல்ல செய்தி என்னவென்றால், இந்த நோய் கண் பார்வையை நிரந்தரமாகக் கெடுத்து விடுவதில்லை. சிகிச்சைக்குப் பின் கண்கள் பழையபடி ஆகிவிடும்.

கொஞ்சம் சீரியஸ் ஆன விஷயம், கார்னியல் அல்சர் எனப்படும் விழித்திரைப் புண். இது வந்தால் கார்னியா பாதிக்கப்

படும் அபாயம் இருக்கிறது. பாக்டீரியா தொற்றால் இது வரலாம். அல்லது ஏதாவது அதிர்ச்சிக்குப் பிறகும் வரலாம். இதற்குக் கவனமான சிகிச்சை தேவை.

சில வேளைகளில், தேவையான சிகிச்சை அளித்தும்கூட, கார்னியாவில் வெண்மைப் படலம் போல் படர்ந்திருக்கும். இது பார்வையைப் பாதிக்கும். மிக மோசமான நிலைமை உருவாகும் பட்சத்தில், 'கார்னியல் டிரான்ஸ்பிளான்ட்' செய்ய வேண்டியும் வரலாம்.

இதே போல சீரியஸான இன்னொரு கிருமித் தொற்று பாதிப்பு கண் முழுவதையும் பாதிக்கும். இதை Endophthalmitis அல்லது Panophthalmitis என்பார்கள். இன்ஃபெக்ஷன், அதிர்ச்சி காரணமாகவோ, அறுவைச் சிகிச்சைக்குப் பிறகோ கூட இது வரலாம்.

அடுத்தது கண்ணில் வரும் சிறு கட்டி. இமையில் வந்து வலியும் உறுத்தலும் தரும்.



வலியே இல்லாமல் கூட இருக்கலாம்.

சிலருக்கு, இமையில் உள்ள ரோமங்கள் உள்ளுக்குள் வளைந்து இருக்கும். கண்ணில் இது பட்டுப்பட்டு சதா உறுத்தலும் எரிச்சலும் உண்டாக்கும். ரொம்ப ஈஸியான வழி எது என்றால் இந்த இமை ரோமத்தை வெட்டிவிடுவதுதான்! இல்லை என்றால் பிளாஸ்டிக் சர்ஜரி செய்து, இமை ரோமத்தைச் சற்றே மேல் நோக்கி வைத்துப் பொருத்திவிடலாம்.

இன்னும் சிலருக்குக் கண் இமை மூடியபடியே இருக்கும். பார்த்தால் தூங்குகிற மாதிரி இருக்கும். ரொம்பவும் சிரமப்பட்டு இமையைத் தூக்கிப் பார்ப்பார்கள்! இதையும் கூட அறுவைச் சிகிச்சை மூலம் சரியாக்கிவிட முடியும்.

● **காண்டாக்ட் லென்ஸ் போடுவது கெடுதலா?**

கெடுதல் இல்லை. கண்ணாடி அணியப் பிடிக்காதவர்கள் காண்டாக்ட் லென்ஸ் அணியலாம். ஹார்டு லென்ஸ், ஸெமி சாஃப்ட் லென்ஸ், சாஃப்ட் லென்ஸ் என்று இதில் மூன்று வகைகள் இருக்கின்றன. முதல் இரண்டு வகைகளும் பிளாஸ்டிக் டிஸ்க்குகள் போல இருக்கும். சாஃப்ட் லென்ஸ் மட்டும் பாலிதீன் பேப்பர் மாதிரி இருக்கும். பொதுவாகவே காண்டாக்ட் லென்ஸ் அணிபவர்கள் இந்த சாஃப்ட் வகை லென்ஸ்களைத்தான் தேர்ந்தெடுப்பார்கள். இது அணிவதற்கு வசதியானது.

கண்ணாடி போட்டுக் கொண்டால் அழகு குறைந்து போய்க் காட்சியளிப்போமோ என்ற அச்சத்தை விரட்ட உருவானதுதான் காண்டாக்ட் லென்ஸ் என்று சொல்லலாம்! (அதிலும், தடிமனான மூக்குக் கண்ணாடி போட்டுக் கொண்டால், 'ஸோடா புட்டி' என்று கூப்பிடவே ஆரம்பத்து விடுவார்கள்!)

ஆனால் காண்டாக்ட் லென்ஸ் சில வகைகளில் அசௌகரியமானது. அவற்றை பத்திரமாகவும், சுத்தமாகவும் பாதுகாக்க வேண்டும். அவ்வப்போது மாற்ற வேண்டும். தொடர்ந்து உபயோகிப்பவர்களுக்குச் சில பிரச்னைகள் வருகின்றன. (சிலருக்குக் கண்ணில் அலர்ஜி வந்து விடுகிறது!) முன் ஜாக்கிரதையாக, சுத்தமாக வைத்திரா விட்டால் இன்ஃபெக்ஷன் வந்துவிடும். மூக்குக் கண்ணாடியை

வைத்துவிட்டுப் போகிற மாதிரி அலட்சியமாக இருந்துவிட முடியாது!

செருப்பு, சாரி கலர் எதுவோ அதற்குத் தகுந்த மாதிரி மாட்சாக கான்டாக்ட் லென்ஸ் அணிகிறவர்கள் உண்டு! பல வர்ணங்களில் கிடைக்கும். இந்த மாதிரி காஸ்மடிக் கான்டாக்ட் லென்ஸ் அணிபவர்கள் சினிமாவில் நிறைய உண்டு!

இவை எல்லாம் தவிர, பேண்டேஜ் கான்டாக்ட் லென்ஸ் என்று ஒரு வகை உண்டு. ஒரு குறிப்பிட்ட காலத்துக்கு, ஒரு வாரம், 15 நாளைக்குக் கண்ணைப் பொத்திப் பாதுகாக்க வேண்டியிருக்கிறது என்றால் இதை உபயோகிப்பார்கள்!

● சில வெளிநாட்டவருக்கு- விழிகள் பச்சை அல்லது நீலமாகவும், நமக்கு எல்லாம் கறுப்பாகவும் இருப்பது ஏன்?

நம் உடம்பில் குறைந்த பட்ச பிக்மென்





டேஷன் (நிறம் கொடுக்கும் நுண் பொருள்கள்) இருப்பதால், நம் கண்கள் பிரௌன் அல்லது கறுப்பு நிறத்தில் இருக்கிறது. இதற்கு, நமக்கு அதிகபட்ச பிக்மென்டேஷன் இருப்பதே காரணம். மேற்கத்தியவர்களுக்கு குறைந்தபட்சமாக இருப்பதால், அவர்கள் கண்கள் நீலமாக இருக்கிறது! ஐரிஸ் எனப்படும் கிருஷ்ண படலம்தான் இந்த நிறத்தைத் தீர்மானிக்கிறது.

## உடம்புக்கு ஜன்னல் கண்கள்:

மனித உடலின் ஜன்னல்கள் என்றால் அவை கண்கள்தாம். கண்களைப் பார்த்துத்தான் பல நோய்களைக் கண்டறிகிறார்கள்.

மூளைக் கட்டி (பிரெய்ன் ட்யூமர்) மற்றும் பலவகை நரம்புக் கோளாறுகள், கண் பார்வையைப் பாதிக்கக் கூடியவை. நோயாளியின் பார்வை சற்றுக் குறைந்து போகவோ, விழிகள் அசைவதோ, அசையாமல் இருப்பதோ– எல்லாமே இந்த நரம்புகளால் நிகழ்கின்றன. இவற்றைப் பரிசோதிக்கும் டாக்டர், நோயாளியின் குறைபாட்டைத் துல்லியமாக அறிய முடிகிறது. B.P. பரிசோதனையில் அசாதாரண அறிகுறி ஏதேனும் தெரிந்தால் முன்னெச்சரிக்கையாக, இவ்வகை பாதிப்

புக்களைத் தவிர்க்கலாம்.

## கண்களிலிருந்து நீர் வடிதல்:

இமையின் மேல் பகுதியில் உள்ள லாக்ரிமில் கிளாண்டு, தொடர்ச்சியாகக் கண்ணீரைச் சுரந்து கொண்டே இருக்கும். திறந்த விழிகளுக்கு இந்த நீர் ரொம்பவும் உபயோகமாய் இருக்கும். கார்னியாவைச் சுத்தமாக வைத்திருக்கவும், இன்ஃபெக்ஷன் வராமல் இருக்கவும், இந்தக் கண்ணீர் அவசியம்.

கிளிசரின் போட்டு ஏன் நடிகைகளை அழ வைக்கிறார்கள் என்று கேட்பீர்கள். அது ஒருவகை இர்ரிடேஷன் உண்டாக்கத்தான். உடனே கண்ணீர் வரும் அல்லவா? வெங்காயம் உரிக்கும்போதும் கண்ணுக்கு உண்டாகும் எரிச்சலும் இது போல இர்ரிடேஷன் காரணமானதுதான்.






சிலருக்கு இந்த நீர்ச் சுரப்பி சரியாக வேலை செய்யாமல் கண்கள் உலர்ந்து இருக்கும் அபூர்வ நிலை இருப்பதுண்டு. இவர்களுக்குக் கண் உறுத்தல், கார்னியா வெளுத்துப் போவது போன்ற பாதிப்புகள் உண்டாகலாம். இதற்குத் தொடர்ந்து டிராப்ஸ் விட்டுக் கொள்ள வேண்டும். மருந்துகள் மூலம் குணமாகாவிட்டால், சிலருக்கு அறுவைச் சிகிச்சையும்கூடச் செய்ய வேண்டி வரும்!

சிலருக்கு இந்தக் கண்ணீர் சரியாக இறங்காமல் தொந்தரவு தருவதுண்டு. இமைக்கு மேற் பகுதியிலிருந்து சுரக்கும் நீர், மூக்கின் ஓர் ஓரத்தில் உள்ள துவாரம் வழியாகத் தொண்டைக்கு வந்துவிட வேண்டும். ஆனால் வரும் வழியில் உள்ள அடைப்பு காரணமாக, கண்ணிலிருந்து நீர் வடிந்து கொண்டே இருக்கும். சிறு அறுவைச் சிகிச்சை செய்து அந்த அடைப்பை நீக்கி விடலாம்.

**• கம்ப்யூட்டரில் கூடுதலாக வேலை பார்த்தாலே, தொடர்ந்து டீ.வி. பார்த்தாலோ கண்கள் பாதிக்கப்படும் என்கிறார்களே?**

கண்ணும் கால் மாதிரிதான். இரண்டு மணி நேரம் நடக்கிறீர்கள். வலிக்காது. தொடர்ந்து ஐந்து மணி, ஆறு மணி நேரம் இடைவிடாமல் நடந்தால் கால் வலி எடுக்குமா எடுக்காதா? அது போல்தான். டீ.வி. பார்ப்பதாலோ, கம்ப்யூட்டரில் வேலை செய்வதாலோ கண்கள் பாதிக்கப்படுவதில்லை. தொடர்ந்து கண்களுக்கு இடைவிடாமல் வேலை கொடுக்கும்போது அவை பாதிக்கப்படுகின்றன. பத்து மணி நேரம் பன்னிரண்டு மணி நேரம் தொடர்ந்து டீ.வி. பார்த்துவிட்டு அல்லது கம்ப்யூட்டரில் வேலை செய்துவிட்டு, 'கண்கள் வலிக்கின்றன, ரொம்ப எரிச்சலாக இருக்கிறது' என்று கம்ப்ளெயின்ட் சொல்லுவது அபத்தமானது! அதே மாதிரி




தான் இடைவிடாது. குறைவான வெளிச்சத்தில் உட்கார்ந்து புத்தகம் படிப்பதும்.

**• முருங்கைக் கீரை சாப்பிடுங்கள், விடமின் A மாத்திரை விழுங்குங்கள் என்கிறார்களே?**

நாம் சாப்பிடும் உணவில் போதுமான விடமின் ஏ இருக்கிறது. நாம் காரட் எல்லாம் சாதாரணமாக உணவில் சேர்த்துக்




கொள்ளத்தானே செய்கிறோம்?

வாய்ப்பு இல்லாத, வசதி இல்லாத ஏழை எளிய மக்கள் இம் மாதிரி உணவு வகைகள் சாப்பிட முடியாததால் அவர்களுக்கு விடமின் ஏ குறைபாடு உண்டாகிறது. அடித்தட்டு மக்கள் அவர்கள். அவர்களிடம் முருங்கைக் கீரை சாப்பிடுங்கள் என்றால் அதில் அர்த்தம் இருக்கிறது. அவர்களுக்கு விடமின் ஏ மாத்திரை கொடுத்தால் அதில் தவறு இல்லை!

● **கண்ணில் திடீரென்று கெமிகல் திரவம் பட்டுவிட்டால் என்ன செய்ய வேண்டும்?**

கண்ணை உடனே குளிர்ந்த நீரால் கழுவி விடுங்கள். பிறகு உடனே கண் மருத்துவரைப் பாருங்கள்.

● **கண்ணில் எதிர்பாராமல் அடி பட்டுக் காயம் உண்டாகிவிட்டால்?**

கண்ணைக் கசக்கிவிடாமல் இருக்க, ஐஸ் க்ரீம் கப்பால் கண்ணை முழுதுமாக மூடிவிடுங்கள். அல்லது தொன்னை இருந்தால் கூடப் போதும். பிறகு உடனடியாக, அருகில் இருக்கும் கண் மருத்துவமனைக்கு வந்து சிகிச்சை எடுத்துக் கொள்ளலாம்.




● **கண்ணாடி போட்டுக் கொள்ள, கண்ணாடியின் திறன் அறிய, கண்ணில் சொட்டு மருந்து விட்டு டயலேட் செய்கிறார்களே, இது தேவையா?**

இப்போதுள்ள நவீன கண் மருத்துவ மனைகளில் இப்படிச் செய்வதில்லை. கண் பவர் தெரிந்து கொள்ள டயலேட் செய்ய வேண்டிய அவசியம் இல்லை.

சந்திப்பு, கட்டுரை: **சாருகேசி**




புதிய கோல்கேட் டபுள் புரொட்டெக்ஷன்

வழங்குகிறது சாதாரண டூத்பேஸ்ட்டைக் காட்டிலும்

வாய் துர்நாற்றத்தையும் பற்சிதைவையும்

உண்டாக்கும் கிருமிகளிலிருந்து

2½ மடங்கு அதிக பாதுகாப்பு




2½ மடங்கு அதிகம் நீங்கள் பெற முடியும் என்னும்போது அதனினும் குறைவானதை எதற்கு வாங்க வேண்டும்?

Based on scientific tests carried out in the mouth.

Rediffusion-DY&R/Bom/CP/233 c TM

